ஸ்ரீ:



மணவாளமாமுனிகள்

அருளிச்செய்த

# யதிராஜவிம்சதி

(உரையுடன்)



உரையாசிரியர் :

ஸ்ரீ உ. வே.

A. V. கோபாலாசார்ய ஸ்வாமி.

பதிப்பாளர் :

ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,

அட்வகேட்.

1957.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமத்வரவரமுநயே நம:

# யதிராஜ விம்சதி
# வ்யாக்யானம்

[மணவாள மாமுனிகள் *அருளிய* யதிராஜ விம்சதிக்கு
திருச்சி அட்வகேட் ஸ்ரீ உ. வே A. V. கோபாலாசார்ய
ஸ்வாமி *இயற்றிய தமிழுரை*]



*கிடைக்குமிடம்:—*
**S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், அட்வகேட்,**
*3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சிராப்பள்ளி.*



**விலை 0–14–0 (88 ந. பை.)**
*தபாற்கூலி 2 அணு (12 ந. பை)*

*ஸ்ரீநிவாஸம் பிரஸ், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி*

# FOREWORD

*[ Sri V. Bhashyam Aiyangar, M. L. C. ]*

The **a'desa** (loving command) has come from the revered author of this explanatory commentary on **Yethe-raja Vimsathi, Sriman Ubhaya Vedanta Praveena A. V. Gopalacharya Swami**, himself, that I should write a foreword for it. As I regard the **a'desa** as an **anugraha** (blessing) I shall not refer to my incompetence for the task assigned to me.

**Yethiraja Vimsati** is a short stotra (prayer) of 20 Slokas in Sanskrit addressed to Sri Ramanuja, who is known as Yethiraja (King of ascetics), by Sri Varavara muni, more popularly known as Manavala Mamuni. It is very well known and held in great esteem among the vaishanavas.

Three factors generally go to make up the importance and sanctity of a stotra. They are: (1) The status and authority of the **stutah**, i. e., the person prayed to; (2) The natnre and character of the **stota**, i. e., the person who composes the prayer and (3) The substance and merits of the prayer itself. In the case of the Yethiraja Vimsati all these three factors combine together and make it an excellent and ideal stotra.

Taking the **first** factor, Sri Ramanuja, to whom this stotra is addressed, is regarded as an **Uttaraka Acharya**, that is, one of those special messengers of God who are sent for the spiritual regeneration of this world with full authority and power to redeem and grant salvation to all. This claim is fully borne out by all that he preached and taught and did here. It is not possible to give an account here of his greatness at any length. But one important fact may be mentioned. He had direct communion with Sri Ranganatha, the Lord of Lords, lying in Archa form at Srirangam and secured his grace not only for

himself but for all his adherents. Dedication to Ramanuja is, therefore, all that is needed, for a person who wants to get rid of his sins and attain the feet of God (see slokas 17 and 18 of this stotra). A stotra addressed to such an Acharya clearly deservs to have the highest value attached to it.

**Secondly,** the author of the stotra, Sri Manavala Mamuni, is an exemplarily pure, noble and sincere soul whose **gnana** (knowledge), **bhakti** (devotion) and **vairagya** (renunciatian) are unsurpassed. So great indeed in the said attributes was this Acharya, that Lord Ranganatha Him-self regularly attended his exposition of Satakopa's Thiruvaimozhi day-after day in the big hall of His Temple at Srirangam, for a whole year and glorified him on the concluding day by giving out the famous **Tanian** (extollation) beginning with **Sri Sailesa Daya Pathram,** in the garb of a young boy Sri Manavala Mamuni was one of the greatest scholars in Sanskrit as well as Tamil but so exceeding was his love and attachment for the sweet language of Sata-kopa, that he vowed not to compose any literary work except in Tamil. And so it happens, that while there are numerous excellent works of his in Tamil (Prose as well as Poetry) there is only this tiny stotra of but 20 slo-kas in Sanskrit, even for which he is said to have taken the special permission of his immediate Guru. Sri Manavala Mamuni attained so much eminence by his knowledge, humility and devotion to Sri Ramanuja, that he was not merely known as Yeteendra Pravana but came to be re-garded as a re-incarnation of Sri Ramanuja himself. The Stotra made by such an Acharya must command our highest faith.

And **lastly,** the merits of the stotra. It is a most earnest and humble appeal to Sri Ramanuja to do away

with our arrogance and pride, to wipe out our sins and bestow true knowledge and to make us the servents of his servants of the last degree. The stotra contains all the essential tenets and doctrines of vaishnavism in a nutshell in prayer-form and is ideal for daily and constant repetition. There is a prior stotra of Sri Vedanta Desika known as Yethiraja Saptati in honour of the great Acharya. We must take care not to make any captious comparison between these two stotras. The difference in the purpose and object of the two stotras is well pointed out by the learned commentator in his **avatarika** (introduction) itself, where with his profound knowledge of the three Mimamsas of Karma, Devata and Brahma, he also illuminatingly explains why this stotra was composed in 20 Slokas and the earlier one in 74 slokas. For my part, I read the two stotras as supplementary to each other. The high flowing and majestic Saptati thrills me with the greatness of Sri Ramanuja; the mellifluous and apaealing Vimsati moves me to place myself completely in his grace. The slokas of the Vimsati which, by the way, let out the author's partiality for Tamil, by the initial rhyme of their lines, are remarkable for their neatness and conciseness as well as for their simplicity, easy flow and transparency of thought. The stotra is a model of how the most difficult thoughts may be expressed in brief and easy language.

Sri A. V. Gopalacharya Swami has done a signal service to the Vaishnavite world by writing this explanatory commentary on a stotra of the above importance and value. His masterful and ripe scholarship in both the Sanskrit and the Tamil Vedanta and in Vaishnavic **Sampradaya** is well known to all who are interested in these subjects. It is marvellous indeed that with his other preoccupations as a leading and busy legal

practitioner he was able to acquire such great scholarship in the said subjects and write so many books and articles on them. He has already written valuable commentaries on most of the important stotras of Sri Vedanta Desika and other Acharyas. This commentary, if I may say so with respect, seems to excel them. He has been ill for a pretty long time now. I believe that a great portion if not the whole, of this commentary was dictated by him out of his unaided and wonderful memory from his sick bed. How it reminds me of the supreme knowledge given out by old Bhishma from his **saratapla** (bed of arrows) to Yudhistira at the end of the Kurukshetra war! The swami continues to be ill and in bed. But the illness simply waits on him. It does not affect the spiritual vigour of his mind or speech. Bhishma was compared to ash covered embers when he lay on the saratalpa and that comparison may, it seems to me, be also extended to our swami in his present physical condition.

The commentary will amply repay study. It is not a mere literary work but an **Anubhava granthamm** (book to enjoy). The commentator has dived deep into the stotra and brought out the full implications and significance of each and every word and phrase in it. The sources, parallels and analogies given by him for the ideas in the text are exceedingly interesting and enjoyable and they bear evidence to the wonderful scholarship and memory of the Swami.

It is upto all true Vaishnavas to study this commentary and profit by it. Let us all also pray that the Swami may be vouchsafed to us in spiritual vigour for many more years yet!

*Bhashyakara Dasa.*

# முன்னுரை

[ஸ்ரீ. உ. வே. பாஷ்யமய்யங்கார் (M. L. C.) ஸ்வாமி ஆங்கிலத்தில் எழுதியதின் தமிழ்ச் சுருக்கம்]

ஸ்ரீமான் உ. வே. A. V. கோபாலாசார்யஸ்வாமியின் ஆதேசத்தை அநுக்ரஹமாகக்கொண்டு, என் தகுதியை நோக்காமல் அவருடைய யதிராஜவிம்சதிவ்யாக்யானத்திற்கு முன்னுரையெழுதத் தொடங்குகின்றேன்.

யதிராஜரான எம்பெருமானார் விஷயமாக மணவாளமாமுனிகள் அருளிச்செய்த **யதிராஜவிம்சதி** என்னும் இருபது சுலோகங்கொண்ட இத்துதிநூல் ஸ்ரீவைஷ்ணவர்களால் நன்கு அறியப்பெற்றதும் மிகவும் கொண்டாடப்படுவதுமாகும். ஒருதுதிநூலின் பெருமைக்கும் புனிதத் தன்மைக்கும் காரணமான 1. ஸ்துதவைபவம் 2. ஸ்தோத்ருவைபவம் 3. ஸ்தோத்ரவைபவம் என்னும் மூன்றும் நிரம்பப்பெற்ற இத்துதி மிகச் சிறந்த ஸ்தோத்ரமாகும்.

**1. ஸ்துத வைபவம்**—இதில் ஸ்துதரான (துதிக்கப்படுமவரான) எம்பெருமானார் **உத்தாரக ஆசாரியர்** எனக்கருதப்படுகிறார். சேதனரைத் திருத்தி உய்விப்பதற்கென்றே எம்பெருமானால் அனுப்பப்பெற்றுப் பல அருஞ்செயல்களைப் புரிந்த இவருடைய பெருமையை இங்கு விவரித்தல் இயலாது. திருவரங்கப்பெருமாளோடு நேரே ஸல்லாபிக்கப்பெற்று, தமக்கும் தமர்க்கும் முக்தியைப் பெற்றவர் இவ்வாசார்யச்ரேஷ்டரே என்னும் ஒரு விஷயம் முக்கியமாகக் குறிப்பிடத்தக்கது. (17, 18-வது ச்லோகங்களிற் சொல்லியபடி) எம்பெருமானார் ஸம்பந்தமொன்றே முக்திக்கு உறுதியான ஸாதனமாகும். அப்படிப்பட்ட ஆசாரியரை விஷயமாகக்கொண்ட இத்துதி மிகச்சிறந்ததன்றோ.

**2. ஸ்தோத்ருவைபவம்**—இத்துதியை அருளிய ஸ்தோதாவான மாமுனிகள் மிகப்புனிதமானவர்; உயர்ந்தவர்; நேர்மையே வடிவெடுத்தவர்; ஜ்ஞானபக்திவைராக்யங்களில் ஒப்பற்றவர். அரங்கனே இவரிடம் ஒரு வருடம் திருவாய்மொழிப்பொருள்கேட்டு, முடிவுநாளில் சிறுவனுருக்கொண்டு ஸ்ரீசைலேசதயாபாத்ரத்தனியனை அருளினான். வடமொழியிலும் தென்மொழியிலும் மிகச்சிறந்த வல்லுனராயிருந்தும், சடகோபனின் ஈரச்சொல்லிலே ஈடுபாடுகொண்ட இவர் தமிழிலல்லது வேறு மொழியில் நூலியற்றுவதில்லை என்னும் விரதம் பூண்டிருந்தார். அதனாலேயே, எத்தனையோ அரியபெரிய நூல்களைத் தமிழிலும் மணிப்ரவாளத்திலுமருளிய இப்பெரியார், வடமொழியிலே இவ்வொரு துதிநூலையே ஆசாரியநியமனம் பெற்று அருளிச்செய்தார். அறிவிலும், அடக்கத்திலும், எம்பெருமானாரிடம் அன்பிலும் மிகச்சிறந்தவராயிருந்ததினால் **யதீந்த்ர ப்ரவணர்** என்று பெயர் பெற்றதோடன்றியில், அவருடைய மற்றோரவதாரமென்றும் கருதப்பட்டார். இப்படிப்பட்ட ஆசாரியரால் அருளிச்செய்யப்பட்டதாலும் இத்துதி மிகவும் ஆதரிக்கத்தக்கது.

**3. ஸ்தோத்ர வைபவம்**—நம் அஹங்காரத்தையும் கர்வத்தையும் அழித்து, பாபங்களைப் போக்கி, நல்லறிவையளித்து, அச்சுதனடிமையின் கடைநிலையிலே நிறுத்தும்படி எம்பெருமானாரை அடக்கத்தோடு நெஞ்சு கனிந்து பிரார்த்திப்பதாகும் இத்துதி. கடலைக் கடுகில் அடைத்ததுபோல் வைஷ்ணவமதத்தின் கொள்கைகளனைத்தையும் தன்னுட்கொண்டிருக்கும் இது நித்யாநுஸந்தேயமாக உரியது. இதற்கு முன் ஸ்ரீவேதாந்ததேசிகரால் எம்பெருமானார் விஷயமாக அருளிச்செய்யப்பெற்றது யதிராஜ ஸப்ததி என்னும் துதி. அது 74 சுலோகங்களில் அமைந்ததற்கும், இது 20 சுலோகங்களில் அமைந்தற்கும் நம் ஸ்வாமி தம் அவதாரிகையில் மிக அழகாகக் காரணம் காட்டியிருக்கிறார். இவ்விரு துதிகளும் ஒன்றையொன்று பூர்ணமடையச்செய்வதாயுள்ளன. அதிகம்பீரமான சொற்பெருக்கையுடைய ஸப்ததியை ஸேவிக்கும்போது எம்பெருமானார் பெருமை புலப்படுகிறது. மிகவினிய, நெஞ்சையுருக்கும் விம்சதி அவர் கருணையைக் காட்டுகிறது. அருளியவரின் தமிழ்ப்பற்றைக்காட்டும் எதுகையின்பம் நிறைந்த விம்சதி, குற்றமற்றதாகவும், சுருக்கமாகவும், எளியதாகவும், தடையற்ற ஓட்டமுள்ளதாகவும், கருத்துத் தெளிவுள்ளதாகவும் விளங்குகிறது. அரியபெரிய கருத்துக்களை எளியசொற்களில் சுருங்கக்காட்டி விளங்கவைப்பதற்கு ஓர் எடுத்துக்காட்டாகும் இத்துதிநூல்.

இவ்வுரையை இயற்றியதன் மூலம் ஸ்ரீ A. V. கோபாலாசார்யஸ்வாமி ஸ்ரீவைஷ்ணவவுலகிற்கு அருந்தொண்டு புரிந்துள்ளார். அவருடைய உபய வேதாந்த ஸம்ப்ரதாய ப்ராவீண்யம் அனைவருமறிந்தது. சிறந்த அட்வகேட்டாயிருந்துகொண்டே பல நூல்களை அவரியற்றியிருப்பது ஆச்சரியகரம். ஸ்ரீவேதாந்ததேசிகர் முதலான பல ஆசாரியர்கள் அருளிய பல முக்கியமான துதிகளுக்கு மிக மதிக்கத்தக்க உரைகளை இயற்றியுள்ளார். இவ்வுரை அவையெல்லாவற்றிலும் சிறந்து விளங்குகிறது. நீண்டகாலமாக நோய் வாய்ப்பட்டிருக்கும் ஸ்வாமியின் இவ்வுரையைக் காணும்போது சரதல்பத்தில் நீறுபூத்த நெருப்புப்போலே சாய்ந்திருந்து நல்லுரைகளை வழங்கிய பீஷ்மரின் நினைவே அடியேனுக்கு வருகிறது.

இவ்வுரை ஒரனுபவக்ரந்தம் என்பது தகும். துதியின் ஒவ்வொரு சொல்லினுடையவும், சொற்றொடரினுடையவும் முழுக்கருத்துக்களையும் ஆழ்ந்து நோக்கி வெளிப்படுத்தியிருக்கிறார் உரையாசிரியர். துதியின் கருத்துக்களுக்கு மூலங்களையும், அதே கருத்தைத்தெரிவிக்கும் மற்ற ஸ்ரீஸூக்திகளையும் அந்யாத்ருசமான ஜ்ஞாபகசக்தியோடு காட்டியிருப்பது மிகவும் ரஸிக்கத்தக்கதாகவும் அநுபவிக்கத்தக்கதாகவுமுள்ளது.

ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவரும் இவ்வுரையைப் படித்துப் பயன்பெற வேண்டும். உரையாசிரியரான ஸ்வாமி தம் ஆத்மிகபலத்தோடு மேலும் நெடுநாள் நம்மிடையே எழுந்தருளியிருக்கவேணுமென்று பிரார்த்திப்போமாக.

॥ श्रीः ॥

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமத்வரவரமுநயே நம:

# யதிராஜவிம்சதி வியாக்கியானம்

[ஸ்ரீ உ. வே. அட்வகேட் ஏ. வி. கோபாலாசார்ய ஸ்வாமி]

यः स्तुतिं यतिपतिप्रसादिनीं व्याजहार यतिराजविंशतिम्।
तं प्रपन्नजनचातकांबुदं नौमि सौम्यवरयोगिपुङ्गवम्॥

ய:ஸ்துதிம் யதிபதிப்ரஸாதிநீம் வ்யாஜஹார யதிராஜவிம்சதிம் ।
தம் ப்ரபந்நஜநசாதகாம்புதம் நௌமி ஸௌம்யவரயோகிபுங்கவம் ॥

## அவதாரிகை

த்ரிவர்க்கத்தில் (அதன் ப்ரேமையில்) ப்ராயேண ப்ராவண்யமுடையது உலகம். த்ரிவர்க்கமென்பது தர்மார்த்த காமங்கள். "ப்ராவண்யம் ப்ராக்த்ரிவர்க்கே" என்று ஸாராவளீ. த்ரிவர்க்க ப்ரவணருள் அர்த்த காமப்ரவணர் மிகுதி. விஷயப்ராவண்யமே ப்ராயிகம். தர்ம ஸாத்யமான ஸ்வர்க்காதிகளிலும் அதுவே மிகுதி. "அவிவேகிகளுக்கு விஷயங்களில் என்னென்ன ப்ரீதி நீங்காமலுள்ளதோ அந்த ப்ரீதியெல்லாம் எனக்கு உம்மை நினைந்து நினைந்து ஹ்ருதயத்தில் ஊறி வற்றாமல் இருக்கவேண்டும்" என்று அசேஷ ஸாதுக்களுக்கும் காலத்ரயத்திலும் உபமானமாகவேயிருக்கும் ப்ரஹ்லாதாழ்வார் பிரார்த்தித்தார்; பெற்றார். 'மயர்வற மதிநலம் அருளினன் யவனவன்' என்றபடி ஒழிவில் காலமெல்லாம் அவன் சுடரடி தொழுகையாகிய ப்ரீதி ரூபாபன்ன ஜ்ஞானமென்னும் பக்தி, பராங்குசருக்கு அருளால் அமைந்தது. உலகத்தாரைப்போலே விஷயப்ராவண்யத்திற்கு மாறாக மாதவன் திருவடித் தாமரைத்வந்த்வ ஸேவையில் எல்லையற்ற ப்ராவண்யமே மாறன் சீலம்; மாறனடிபணிந்துய்ந்த ராமாநுசனுக்கும் 'ஆத்ம ஸாம்யாவஹத்வம்' என்னும் ஆசார்ய ஸ்வபாவ மஹிமையால் 'நித்யம் அச்யுதபதாம்புஜயுக்மருக்மவ்யாமோஹம்' நீங்காத சீலமாயிற்று. சடங்களான நம் இந்திரியங்களைச் சீறி அவற்றை நமக்காக ஜயித்து அடக்கிக்கொடுத்து, நம் காமாதி தோஷங்களைப்போக்கி நம்மை பகவத் விஷயத்தில், விஷயங்களிற்போல ப்ரவணராக்குவது, ப்ரஹ்லாதசீலரான மாறன். சடகோபனைப்போல அவர் திருவாய்மொழியும் காமாதி

தோஷங்களைச்சிறி அகற்றி நம்மை பகவத்ப்ரவணராக்கும். சடகோபன் சீலம் (ப்ரபாவம்) அவரை பஜிப்பதால் அவர் ஸாம்யமருளப்பெற்ற யதீந்த்ரருக்கும் உண்டு. சடகோப ப்ரவணராய், பராங்குசபாத பக்த ராய் அதன்பயனாகத் தாமும் சடகோபசீலம் பெற்று நம் காமாதி தோஷங்களை ஹரிக்கிறார் என்று ரஸம். விஷய ப்ராவண்யத்தையகற்றி ஸர்வேந்திரியங்களும் யதீந்த்ரரிடத்தில் ஸஹஜமான ப்ராவண்யத்தை அடையப்பெற்றதையே தமக்கு நிரூபகமாகவுடையவர் யதீந்த்ர ப்ரவணர்.

உண்ணிலாவிய ஐவரால் குமையுண்ணச்செய்யும் விஷய ப்ராவண் யத்தை அடியோடு விலக்கி யதீந்த்ர ப்ராவண்யத்தை ப்ரார்த்திப்பது இந்த விம்சதியின் கார்யம். அவர் திருவடியை முடியால் வணங்கு வதோடு தொடங்கி தம்மாசார்யரான திருவாய்மொழிப்பிள்ளை தந்தருளிய யதீந்த்ரபாதாப்ஜஸேவையையே அந்வஹம் (ப்ரதிதினமும்) தமக்கு விருத்திசெய்ய வேண்டுமென்னும் தம் விஜ்ஞாபனத்தை அங்கீகரித் தருள வேண்டுமென்று கருணைக்கடலான ராமானுசனைப்பிரார்த்திக்கிறார். நிஷ்காமமான விஹித கர்மானுஷ்டானத்தை பகவத் பஜனத்திற்கு ஸஹகார்யங்கமாக ஸ்தாபித்து, கர்மங்களின் ஸ்வரூப த்யாகமே ஜ்ஞானத்திற்கு அங்கமென்றும் அத்வைத பக்ஷத்தை நிரஸித்து, ஜ்ஞா னம், கர்மம் என்னும் இரண்டு பக்ஷங்களையுடைய ஹம்ஸங்கள்தான் யதிஹம்ஸர்களெனப்படுவாரென்பதையும் தெளிவிப்பது மாறன் தமிழ் மறை. கர்மமீமாம்ஸை 12 அத்தியாயங்கள், தேவதாமீமாம்ஸை 4, சாரீரகம் 4 — ஆகிய இருபது அத்யாயங்களடங்கிய மீமாம்ஸா சாஸ்த்ரம் முழுவதும் ஒரே சாஸ்த்ரமென்பதை நிலைநிறுத்திய ஸ்ரீபாஷ்யகாரரைத் துதிப்பதில் இருபது ச்லோகங்களால் இந்த ஸ்துதியை அமைக்க யதீந்த்ர ப்ரவணர் திருவுள்ளம் போலும். பல ச்லோகங்களில் இருபது அத்யாயங்களின் விஷய க்ரமம் மீமாம்ஸாத்யாய க்ரமமாக திருவுள்ளத் தில் ஓடுவது காட்டப்படும். இங்கே முதல் ச்லோகத்தில் மீமாம்ஸையின் முதல் அத்யாயமான 'ப்ரமாண லக்ஷண'த்தின் விஷயம் ஸூசிக்கப்படுவது ஸ்பஷ்டம். ச்ருதி ஸ்ம்ருதி முதலிய ப்ரமாணங்களின் ப்ராமாண்யத்தை ஸ்தாபித்தது முதல் அத்யாயம் (லக்ஷணம்.) சாரீரக ஸூத்ரங்களின் உட்பொருளையும் வேதத்தின் உட்பொருளையும் ஸ்ரீபாஷ்யகாரருக்கு விளக்கி நெஞ்சில் நிறுத்திய ப்ரமாணம் யாது? மாறன் திருவடிபக்தி, மாறன் திருவாய்மொழியைத் தெளிய ஓதியதே. 'தெளியவோதித் தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே' என்று வேதாந்த வாரியரும், 'மிக்க வேதியர் வேதத்தினுட்பொருள் நிற்கப் பாடி என்னெஞ்சுள் நிறுத்தினான்' என்று மதுரகவியும் பூஜித்த ப்ர மாணம். மாறனடி பணிந்துய்ந்த இராமானுசனுக்கு மாறன் மறை ப்ர

மாணம். மாதவன் திருவடிக்காதல் மையலேறிய மாதவ ப்ரவணர் பராங்குசர்; பராங்குசப்ரவணர் யதீந்த்ரர்; யதீந்த்ரப்ரவணர் ஸ்வாமி. யதிபதியின் 74 ஸிம்ஹாஸநாதிபதிகளின் எண்ணிக்கையையனுசரித்து 10 திக்குகளிலும் யதிராஜர் கீர்த்தியைப்பரப்பும் சங்கத்வநிபோல், டிண்டிம கோஷம் போல் பக்தி ப்ரசுரமாயும் கம்பீரமாயும் பஹுவித வ்ருத்தங்களால் 74 ச்லோகங்களாகப்பாடப்பட்டது யதிராஜ ஸப்ததி. யதிபதி காட்டியபடி ஒரே சாஸ்த்ரமான மீமாம்ஸையின் இருபது அத்யாயங்களின் எண்ணிக்கையை அநுசரித்தது இத்துதி. இங்கே எல்லா பூர்வாசார்யர்களுடைய ஸ்துதிகளையும் ஸ்ரீஸூக்திகளையும் திருவுள்ளத்தில் கொண்டு 'நொந்தவரே முதலாக' என்றபடி நொந்து நொந்து பரமார்த்தியோடே ராமானுசன் திருவடிகளைச் சரணம் பற்றவே இந்த ஸ்துதி அமைந்துள்ளது. 'ந தர்ம நிஷ்டோஸ்மி ந சாத்மவேதீ ந பக்திமாம்ஸ்த்வச் சரணாரவிந்தே அகிஞ்சநோऽநந்யகதி: சரண்ய த்வத்பாதமூலம் சரணம் ப்ரபத்யே,' என்ற ச்லோகத்திலுள்ள கார்ப்பண்யமான ஆகிஞ்சந்ய அநந்யகதித்வங்கள் தமக்கு உளவென்று அநுஸந்தித்துக் கொண்டே பாடுகிறார். அதே சப்தங்களையும் கருத்துக்களையும் இந்த ஸ்துதியில் நெடுகிலும் காணலாம். தாம் மாசற்றவராயினும் தம்மிலும் கடையோரில்லையென்று நீசத்தன்மையை அநுசந்திக்கும் மஹாகுணத்தால் நிறைந்தது இத்துதி. ஆளவந்தார், ஆழ்வான், பட்டர் முதலிய பூர்வாசாரியர்கள் அநுஸந்தித்த நைச்யமெல்லம் தம்மிடம் குடிகொண்டுள்ளனவென்று பேசிப் பரம ஆர்த்தியோடு கதறுகிறார். 'வஞ்சன பர:'; 'பசு:'; 'சட:'; 'கந்தர்ப்பவச்ய ஹ்ருதய:'; 'ஸ்மரபரவச:' என்று ஸ்தோத்ரரத்னத்தின் பதங்களையும் பாவங்களையும் உச்சரிப்பது மன்றியில் 'சுத்தாத்மயாமுன குருத்தமகூரநாத பட்டாக்ய தேசிகவரோக்த ஸமஸ்தநைச்யம்' என்று ஸ்பஷ்டமாகவும் அருளிச்செய்கிறார். ஸ்ரீவைஷ்ணவ குலத்திற்குக் குலபதியான பராங்குசன் திருவடி த்வந்த்வத்தில் மாதாபிதாயுவதிதநய விபூதிகள் முதலிய ஸர்வ போக்யங்களிலும் போல நியதமாக ஸஹஜ ப்ராவண்யம் இருந்துதீரவேண்டும். பராங்குசன் மகிழ் மணத் திருவடித்வந்த்வத்தை 'மூர்த்நா ப்ரணமாமி'— 'தலையால் வணங்குகிறேன்' என்று ஸ்தோத்ர ரத்நம் தொடங்கி, 'மது மதன விஜ்ஞாபநமிதம்' என்ற விஞ்ஞாபனத்தைச் செவிசாற்ற வேண்டுமென்று முடிவில் கூப்பிட்டு 'ப்ரஸீத மத்வ்ருத்த மசிந்தயித்வா' என்று முடிவு பெற்றது. யதீந்த்ரர் விஷயமாக யதீந்த்ர ப்ரவணமுனி பாடிய இத்துதி ரத்நமும் 'பராங்குசபாதபக்தம்' என்று மாறனடி பணிந்துய்ந்த இராமாநுசனை 'ப்ரணமாமி மூர்த்நா' என்று தொடங்கி 'விஜ்ஞாபனம் யதிதமத்யது மாமகீநம் அங்கீகுருஷ்வ' என்று முடிவில் பாடி 'அநந்ய

சரணே பவதீதி மத்வா' என்று முடிந்தது. 'மத்வா' என்பதற்கு 'சிந்தயித்வா' என்று பொருள். 'ப்ரணத இதிதயாளு:' என்று முடிவில் ஆளவந்தார் காகன் விஷயத்தில் பாவத்தோடு ப்ரணதன் அல்லாதவனு யினும் அசக்தியால் கீழே விழுந்ததைக்கொண்டு 'ப்ரணதனென்று முதித்து' என்று ஸாதித்ததையும், 'மத் வ்ருத்த மசிந்தயித்வா' என்று நிக மனம் செய்ததையும் ஒன்று சேர்த்து, 'அநந்ய சரணே பவதீதி மத்வா' என்று இங்கே அமைத்து அனுஸந்திப்பது ரஸிகர் மனதைக் கவரத்தக்கது. 'பாபீயஸோபி சரணாகதி......மாமகீநம்' என்ற ஆழ்வான் அநுஸந்தாநமும் திருவுள்ளத்தில் ஓடிக்கொண்டிருக்கிறது. 'சரணாகதாக்ய:' என்று எட்டாவது ச்லோகத்தில் பேசியது 'சரணாகதி சப்த பாக்' என்ற ஆழ்வான் பேச்சேயாகும். 'அநந்ய சரணே பவதீதி மத்வா' என்பது ஆழ்வான் ச்லோகத்தையும் நினைக்கும். 'மாமகீனம்' என்ற முடிவு ச்லோக பதமும் அதை நினைப்பதாகும். 'யோநித்ய மச்யுத பதாம்புஜ யுக்ம ருக்ம வ்யாமோஹத:' என்று ஆழ்வான் ஸாதித்த தனியனின் பதங்களையும் கருத்துக்களையும் நினைந்து 'ஸ்ரீமாதவாங்க்ரிஜலஜத்வய நித்யஸேவாப்ரேமாவிலாசய' என்று இந்த ஸ்துதி தொடங்கி, 'தயைக ஸிந்தோ:' என்று ஆழ்வான் அருளிச் செய்த தனியனின் பதத்தையனுசரித்து 'தயாம்புராசே' என்று கூப்பிட்டு இந்த துதியை முடிக்கும் ரஸமும் ரஸிக்கத்தக்கது. 'தயைக ஸிந்தோ' என்று கூப்பிட்டே ஆறாவது ச்லோகம் முடிவடைகிறது. யதிராஜ ஸப்ததியில் 'ப்ரணம்ம் லக்ஷ்மண முநி: ப்ரதிக்ருண்ஹாது மாமகம்' என்று பாடியதை நினைத்து 'ராமானுஜம் ப்ரணமாமி' என்று தொடங்கி 'ப்ரதிக்ருண்ஹாது மாமகம்' என்றதை அனுஸரித்து 'மாமகீநம் அங்கீகுருஷ்வ' என்று முடிக்கும் ரஸமும் ரஸிகர் நெஞ்சைக் கவரும். ஆங்காங்கு இப்படிப்பல ரஸங்கள் பொதிந்துள்ளது காட்டப்படும்.

———

श्रीमाधवाङ्घ्रिजलजद्वयनित्यसेवा -
प्रेमाविलाशयपराङ्कुशपादभक्तम् ।
कामादिदोषहरमात्मपदाश्रितानां
रामानुजं यतिपतिं प्रणमामि मूर्ध्ना ॥ १ ॥

ஸ்ரீமாதவாங்க்ரி ஜலஜத்வய நித்யஸேவா-
ப்ரேமாவிலாஶய பராங்குஶ பாதபக்தம் |
காமாதி தோஷஹரமாத்ம பதாச்ரிதாநாம்
ராமாநுஜம் யதிபதிம் ப்ரணமாமி மூர்த்நா.

ஸ்ரீமாதவாங்க்ரி.........பக்தம்—(1) ஸ்ரீயென்னும் திரு, மாதவனென்னும் தாமரையாள் கேள்வன், இவ்விருவர் திருவடித்தாமரையிணையில் ஒழிவில் காலமெல்லாம் அடிமை ரஸத்தில் காதல் மையலேறிய் ஹ்ருதய கமலத்தையுடைய பராங்குசன் திருவடிகளை நிரந்தரம் ப்ரீதி ஸேவை செய்பவரும், (2) ஸ்ரீவிசிஷ்டனுன மாதவன் திருவடித்வந்வத்தில், (3) காந்தி பொருந்திய (சுடரொளியான) ஸ்ரீய:பதியின் இணைத் தாமரை மலர்களில் (என்றும் பொருள் கொள்ளலாம்) ஆத்மபதாச்ரிதானும்—தம்முடைய திருவடியை ஆச்ரயித்தவர்க்கடியார்களுடைய, காமாதிதோஷஹரம்—காமம் முதலிய தோஷங்களை நீக்குபவருமான, யதிபதிம்—யதிகட்கிறைவரான, ராமானுஜம்—ராமானுஜனை, மூர்த்நா—தலையால், ப்ரணமாமி—வணங்குகிறேன்.

**ஸ்ரீமாதவாங்க்ரிஜலஜத்வய**— ஸ்ரீவைஷ்ணவர் மிதுநாயனர், ஏகாயனரல்லவென்றது ஈட்டின் ப்ரவேசம். 'உபாய்தசையோடு வாசியற ஒரு மிதுனமே உத்தேச்யம்,' 'இருவருமான சேர்த்தியிலே அடிமை செய்கை முறை' 'இருவருமாவ சேர்த்தியிலேயிறே இவர் அடிமை செய்வது,' 'அச்சேர்த்தி தன்னையேயிறே இவர் உபாயமாகப் பற்றுகிறது'; விலக்ஷணமான மிதுனம் உத்தேச்யமாக இருக்க முமுக்ஷுக்களுக்கு ஒரு குறையுண்டோ? இவர்களைத் தனித்தனியே பற்றினுர்க்கு ஸ்வரூப விநாசமிறே! என்ற ஈட்டு ஸூக்திகளை ஈட்டை ப்ரவர்த்திப்பித்தருளிய ஸ்வாமி அநுஸரிப்பதாகக் கொள்ளலாம். 'ஸ்ரீ, மாதவர்' என்னும் த்வந்த்வ ஸமாஸம் ஏற்றமுளது; ஸ்வரஸம். 'த்வந்த்: ஸாமாஸிகஸ்யச' என்று பெருமாள் கீதையில் த்வந்த்வத்தைப் புகழ்ந்தார். தம்பதியாக த்வந்த்வத்தை நினைத்துப்பேசுகையில் (த்வந்த்வ ஸமாஸ ப்ரயோகம் ரஸமே. த்வந்த்வ ரஸம் ரஸ புருஷனுக்குத் தெரியும்.) 'பரஸ்மிந் ப்ரஹ்மணி ஸ்ரீநிவாஸே பக்திரூபா சேமுஷீபவது' என்ற ஸ்ரீபாஷ்யத் தொடக்கத்தையும் 'பூமன்னுமாது பொருந்திய மார்பன்' என்று தொடங்கி 'தென்னரங்கன் அணியாக மன்னும் பங்கய மாமலர்ப்பாவையைப்போற்றுதும்' என்று அந்தாதி முடிவதையும் நினைக்கிறுர். 'ஸ்ரீநிவாஸ:'. என்பதையே மாதவ சப்தத்தால் பேசுகிறுர். 'ப்ரதம சதகே மாதவம் ஸேவநீயம்' என்று ரத்னுவளி பாடியதையும், 'ஒழிவில் காலமெல்லாம் உடனுய் மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டுநாம்' என்று ஸ்ரீநிவாஸன் (மாதவன்) விஷயமாகப்பாடியதையும் நினைந்து 'ஸ்ரீமாதவாங்கிரி நித்யஸேவா' என்று இங்கே பாடுவது. 'ஞானங்கனிந்த நலங்கொண்டு நாடொறும் நைபவர்க்கு வானம் கொடுப்பது மாதவன்' என்ற பாசுரத்தின் உரை

யில் 'லக்ஷ்ம்யா ஸஹ ஹ்ருஷீகேச:' என்கிற ச்லோகத்தை உதாஹரித்து ஸர்வேச்வரன் சேதனரைக் கைக்கொள்ளும்பொழுது பெரிய பிராட்டியாரோடு கூடியிருந்தே கைக்கொள்ளுவதென்று ஸகலவேதாந்த ஸித்தாந்தமாகையாலே அவளுக்கு வல்லபனுன ஸர்வேச்வரன்' என்று பிள்ளைலோகம் ஜீயர் ஸாதித்தார். இந்த விம்சதியின் வ்யாக்யானத்திலும் 'ஸ்ரீமாதவாங்க்ரி' என்பதின் உரையில் "திருமாலே நானுமுனக்குப் பழவடியேன்' என்கிறபடியே மிதுன சேஷத்வமே ஸ்வரூபமாகையாலே ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்தமும் மிதுனவிஷய கைங்கர்யமாயிருக்கும்" என்று தொடங்கி பல வாக்யங்களில் மிதுனத்தின் உத்தேச்யத்வத்தையே விஸ்தரிக்கிருர். 'சீமாதவன் கோவிந்தன்' என்ற ஆழ்வார் பாசுரத்தையும் உதாஹரித்தார். 'மாதவன்பாற் சடகோபன் தீதவமின்றியுரைத்த' என்பதையும் இங்கே ஸ்வாமி நினைக்கிருர். மாதவ பதத்தில் ஸ்ரீயினுடைய காந்தன் என்பதிருந்தாலும் 'ஸ்ரீ, ஸ்ரிய:பதி இருவருடைய' என்று ஸ்ரீயின் ஸஹத்வத்தை வற்புறுத்துவதில் திருவுள்ளம் போலும். 'மாட்சிமை தங்கிய மாதவன் திருவடிகளை' 'ஸ்ரீவிசிஷ்டரான மாதவன் திருவடிகளை' என்ற பொருள்களையும் பதவுரையில் காட்டினேம். சதுச்லோகீ பாஷ்யத்தில் 'அரவிந்தலோசன மன: காந்தா ப்ரஸாதாத்' என்றதின் உரையில், 'ஸ்ரீயும் பெருமாளும் இருவரும் சேர்ந்தோ அல்லது ஸ்ரீவிசிஷ்டரான பெருமாளோ பலதான ஸங்கல்பம் செய்கிருர்' என்று ஸாதிக்கப்பட்டது. எப்படிச்சொன்னுலும் பலமொன்றேயாகலாமென்று திருவுள்ளமிருக்கலாம். அதுபோல் இங்கும் எல்லாப்பக்ஷங்களையும் உட்கொண்டு ச்லோகம் அமைக்கப்பட்டது ரஸிக்கத்தக்கது.

**அங்க்ரிஜலஜத்வய**— இதில் ஓர் அழகிய ரஸம் கவனிக்கத்தக்கது. அங்க்ரிஜலம், கங்கை, விஷ்ணுபதீநதி; கங்கா தீர்த்தத்தில் பிறந்து அதிலுள்ள தாமரை—'அடிச்சோதிநீ நின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ' என்ற அனுபவத்தில், உபமானமாகும் தாமரை கங்கை நீர்த் தாமரை. 'திரிவிக்கிரமன் தாளிணைத் தாமரைகளை' 'தேஸ்மா: ஸ்மத்ருசேர் அங்க்ரி ஸரோஜஸூதா:' 'பவத்பதாம்புஜஹ்ருத: அகபிதங்க்ரி ஜலா:' என்று ச்ருதிகீதை. ஆவ்ருத்தியாலோ சப்த சக்தி த்வநியாலோ இப்பொருளின் ஸ்பூர்த்தி கிடைக்கலாமோவென்று ரஸிகராலோசிக்க வேணும்.

**நித்யஸேவா**— முடிசூடும் இணையடிகள் வாடாத தாமரையாதலால் நித்யமும் அலங்காரமே, நித்யமும் போக்யமே. "த்ரிவிக்ரம த்வத் சரணாம்புஜத்வயம் மதீய மூர்த்தானம் அலங்கரிஷ்யதி' என்ற

அனுபவ ரஸம். 'திரிவிக்கிரமன் தாளிணைத்தாமரை' என்பதை வ்யஞ்ஜிப்பிக்க 'அங்க்ரிஜலஜ' என்றது. பத்மம் முதலிய பதங்களை ப்ரயோகித்தால் இந்த ரஸம் கடியாது. திருவடி பிடிக்கும் கைங்கர்ய மாளுலும் 'மலர் மகள் பிடிக்கும் மெல்லடி' 'யல்லக்ஷ்மீகர ஸௌக்ய ஸாக்ஷி' என்றபடி பிடிக்கும் கைக்கு அளவற்ற ஸுகத்தைத் தருவது லக்ஷ்மியின் கை அனுபவிக்கும் ஸுகத்திற்கு திருவடிஸாக்ஷி என்றதால் பிடிக்கும் மலர்மகளுக்கு ஏற்படும் இன்பத்தின் மிகுதி காட்டப்பட்டது, போக்த்ருத்வம் லக்ஷ்மீகரத்திற்கு; தத்போக ஸாக்ஷித்வம் திருவடிக்கு. இனியாள் படும் இன்பத்தைப்பார்க்கும் இன்பம். ஸேவை துக்கமென்று நினைப்பரோவென்று சங்கித்து 'ஸேவ்யத்வாத் போக்யபாவாத்' என்றபடி முதல் சதகத்தில் மாதவஸேவையைப்பேசி, அதுவே போக்யம்; இன்பம் என்று அடுத்த சதகத்தில் உடனே திருவாய்மொழி ப்ரதிபாதித்தது. 'ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டுநாம்' என்று நித்யஸேவை பாரித்தது ஸ்ரீநிவாஸனிடம்; அதையே இங்கே 'மாதவன்' என்றது.

**ப்ரேமாவிலாஶய**—ஸேவை துக்கம் தரும்; தோஷாவிலம், துக்காவிலம்' என்பர்—ஸ்ரீமாதவன் ஸேவை துக்காவிலமல்ல; ஆளுல் ப்ரேமாவிலம் என்பது ரஸம். 'மதியெலா முள்கலங்கி மயங்குமால்' 'மாலேயேறி மாலருளால் மன்னு குருகூர்ச்சடகோபன்' 'நினைதொறும் நெஞ்சிடிந்துகும்'. ஆச்சர்ய சக்தியுடைய மாயக்கவியும் மாறக்கவியுடன் சேர்ந்து பாடாவிடின் திருவாய்மொழி பாடுவதே கூடாமற்போம். 'ப்ரேமார்த்ர விஹ்வல கிர:' என்ற ஆழ்வான் ச்லோகத்தை அனுஸரிக்கிருர்.

**'பராங்குச'**— பிறருடைய இந்த்ரியகஜங்கள், இந்த்ரியவாஜிகள் விஷயங்களில் மேயாமல் அதட்டி அடக்கும் அங்குசமுடையவர்; திருமால் விஷயத்தில் தன் மனதும் இந்த்ரியங்ளும் ஆழ்ந்து தலை தெரியாமல் முழுகுவதை அடக்கவல்லரல்லர். அது விஷயத்தில் ஸ்வாங்குசரல்ல; சடகோபஞக, பிறருக்கு சடமான இந்த்ரிய சத்ருக்களை ஜயிக்க அனுகூலிப்பவர். 'யதார்த்தா சடஜித் ஸம்க்ஞா மச்சித்த விஜயாத்யயோ:' என்று பாதுகா ஸஹஸ்ரம். நம் காமாதி தோஷங்களைக் கோபித்து அங்குசத்தைக்கைக் கொண்டு அணுகாமல் அகற்றும் திறமை பராங்குசருக்கு உண்டு என்று இங்கே ஸூசிப்பதால் மாறன் திருவடிகளில் பக்தராய் அவரை உபாஸிக்கும் யதிராஜருக்கும் அவர் திருவடிக்கும் ஆச்ரிதரின் காமாதி தோஷங்களை அபஹரிக்க வலிமை ஏற்படுமென்று ஸூசிக்கிருர். மூன்றும் அடியால்

சொல்லப்போகும் மஹிமைக்கு இது அடி. காவ்ய லிங்கமெனும் அணி—மூன்ருமடி இதனுல் ஸமர்த்திக்கப்பட்டதாகிறது. 'தம் யதாயதோபாஸதே ததைவ பவதி' என்று உபநிஷத்து காட்டிய தத்க்ரதுந்யாயம். 'பக்தம்' என்பதற்கு 'உபாஸிப்பவர். உபாஸகர்' என்று பொருள். அதனுல் தத்க்ரது ந்யாய ஸூசனம்.

**'பராங்குசபாதபக்தம்'**— 'மாறனடி பணிந்துய்ந்த இராமானுசன்' என்பதை அனுசரித்து 'பராங்குசன் திருவடிகளில் பக்தர்' என்று ஓர் பொருள். 'நித்யஸேவை,' 'ப்ரேமாவிலாசய' என்பதை இங்கும் மாறன் விஷயமான யதிராஜ பக்தியிலும் ஒருவாறு கொள்ளலாம். 'மதுரகவி தோன்றக்காட்டும் தொல்வழியான நல்வழி'. ஸ்ரீவசன பூஷணமும், ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரமும் இதை வற்புறுத்தும். 'பராங்குச பாதர்' என்று நம் தர்சநத்திற்கு கூடஸ்தரும் தீர்த்தகரருமான மாறனைச் சொல்லி, அவரிடம் பக்தரென்றும் பொருள் கொள்ளலாம். ராமானுஜ தர்சனத்திற்கு ஆதி தீர்த்தகரர் பராங்குச பாதரென்று ரஸம். அங்க்ரி பதத்தை வைத்தால் இந்த ரஸம் கிடைக்காது.

**ஆத்மபதாச்ரிதானும் காமாதிதோஷஹரம்**— தம் திருவடி பணிந்தவரின் காமம் முதலிய தோஷங்களை ஹரிக்கும் ஹரர்—ஹரரென்ற சப்தத்தை மட்டும் கேட்டால் காமன் ஓடுவான். 'ரகாராதீநி நாமாநி' இங்கே முழுநாமமுமுண்டு. '**விஜிதஹ்ருஷீகவாஜிபி:** அதாந்தமநஸ்துரகம் ய இஹ யதந்தி யந்து மதிலோலம் உபாயகித:, வ்யஸநசதாந்விதா: ஸமவஹாயகுரோ: சரணம் வணிஜ இவாஜ ஸந்த்யக்ருதகர்ணதரா ஜலதௌ,' என்றது ச்ருதிகீதை. 'மதன கதனை: ந க்லிச்யந்தே யதீச்வரஸம்ச்ரயா:' என்று ஸப்ததியிலும் இதே விஷயத்தைப்பேசுகையில் 'ஈச்வர' என்ற சப்தத்தால் இப்பொருள் த்வநிக்கிறது. அதையும் காட்டும்படி இங்கே 'ஹர:' என்ற சப்தத்தைப்படிப்பது ரஸம். அந்த சப்தத்வநியே போதும் காமனை நடுங்கியோடச் செய்ய.

**யதிபதிம் ராமாநுஜம்**— 'ய: புரஸ்தாத் யதிநாம்' என்று ஸ்தாணுவான ஹரரை யதிகளுக்கு அக்ரகண்யரென்கிருர் காளிதாஸர். யதிபதியான அந்த ஹரரல்ல ராமாநுஜனென்னும் யதிபதி என்கிருர். வ்யாவர்த்தகமான திருநாமத்தை முதலில் வைத்துப்பிறகு 'யதிபதி' என்கிருர்—'மூர்த்நா ப்ரணமாமி'—'**ஸ்ரீமத்ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா**' என்று ஸ்தோத்ரரத்நத் தொடக்கத்தில் சடகோபன் தாளிணையை ஆளவந்தார் முடி சூடியதுபோல ஸ்ரீமாதவன் தாளிணைத் தாமரைகளை முடிசூடிய மாறனடியிணையை முடிசூடிய ராமானுசன் தாளிணைகளை நான் முடி சூடுகிறேன் என்கிருர். அமுதனுர் அந்தாதியின் முதற்பாசுரத்தின் வர்ணனத்தை இது அனுஸரிக்கிறது. பிள்ளையந்தாதியின் முதற்பாசுரமும் இங்ஙனமே.

श्रीरङ्गराजचरणांबुजराजहंसं श्रीमत्पराङ्कुशपदांबुजभृङ्गराजम्।
श्रीभट्टनाथपरकालमुखाब्जमित्रं श्रीवत्सचिह्नशरणं यतिराजमीडे॥२॥

2. ஸ்ரீரங்கராஜசரணாம்புஜ ராஜஹம்ஸம்
ஸ்ரீமத்பராங்குச பதாம்புஜ ப்ருங்கராஜம்।
ஸ்ரீபட்டநாத பரகால முகாப்ஜமித்ரம்
ஸ்ரீவத்ஸசிஹ்நசரணம் யதிராஜமீடே.

ஸ்ரீரங்கராஜசரணாம்புஜ ராஜஹம்ஸம்—ஸ்ரீரங்கராஜருடைய திருவடித் தாமரைகளில் விஹரிக்கும் ராஜஹம்ஸமாயும்; ஹம்ஸ ச்ரேஷ்டராயும்; ஸ்ரீமத்பராங்குசபதாம்புஜ ப்ருங்கராஜம்—ஸ்ரீபராங்குசர் திருவடித் தாமரைகளில் மதுபானம்செய்து ரீங்காரத்துடன்பாடி வட்டமிடும் ச்ரேஷ்டமான வண்டையொத்தவராயும்; ஸ்ரீபட்டநாதபரகாலமுகாப்ஜ மித்ரம்—ஸ்ரீபட்டர்பிரானுகிய பெரியாழ்வார், பரகாலர் இவர்களுடைய முகங்களாகிய தாமரைகளுக்கு மலர்ச்சி தரும் சூர்யனுயும், மித்ரராயும்; ஸ்ரீவத்ஸசிஹ்நசரணம் ஸ்ரீவத்ஸசிஹ்நரென்னும் — கூரத்தாழ்வானுக்கு அடைக்கலமாயும் உள்ள; யதிராஜம்—ஸ்ரீயதிராஜரை; ஈடே—துதிக்கிறேன்.

அவதாரிகை:— ஸ்ரீபாஞ்சராத்ரத்தையும் அதில் விஸ்தரிக்கப்பட்டுள்ள பஞ்சகால பராயணத்வம் அர்ச்சாதி திவ்யமங்கள விக்ரஹங்களினர்ச்சனம் முதலிய தாந்த்ரிக தர்மங்களையும், வேதங்களோடு ஒன்றுபடுத்தி ஸ்ரீவைஷ்ணவ தர்சனத்தை 'த்ராதம் ஸம்யக் யதீந்த்ரை:' என்றபடி எம்பெருமானுர் காத்தது முதலிய உபகாரங்களைக் கீர்த்தனம் செய்துகொண்டல்லவோ எம்பெருமானுர் துதியைச் செய்ய வேண்டும். "ஸ்ரீமாதவன்" என்றால் எந்த திவ்ய தேசத்தெம்பெருமானை நிச்சயமாகக் குறிக்கும்'? 'எந்த ஆழ்வார் பாடிய அர்ச்சா மூர்த்தியைச் சொல்லும்'? என்று கேள்வி வரும். பராங்குச பாதபக்தர்' என்றதால் நாதோபஜ்ஞமான விசிஷ்டாத்வைத தர்சனமென்பதில், நாதனுக்கு நாதனும் ஆசிரியரும் நாதனை முனிநாதராக்கினவருமான ஸேநைநாதனென்னும் சடகோபனுடைய ஸ்மரணம் கிடைத்தது. 'லக்ஷ்மீநாத ஸமாரம்பாம்' என்றபடி குருபரம்பரையுள்ள தர்சனத்தில் ப்ரதம குருக்களான திவ்ய தம்பதிகளின் ஸ்மரணம் ஸ்ரீமாதவாங்க்ரி என்ற சப்தத்தில் கிடைத்தது. லக்ஷ்மீநாத ஸமாரம்பமாகும் இந்த யதிராஜ விம்சதி. 'வந்தே கமலா க்ருஹமேதிநம்' என்று ஸப்ததித்

துடக்கப்போல. ருஷேரபிப்ராயம் ருஷிரேவ வேத்துமர்ஹதி என்று ச்ருத ப்ரகாசிகைத் தொடக்கத்திலுள்ளதை நினைக்கவேணும். 'மாதவ என்றதில் ஸ்ரீபாஞ்சராத்ர ப்ரதிபாத்யமும், திவ்யப்ரபந்த ப்ரதிபாத்யமுமான கோயில் எம்பெருமான்கள் கூறப்பட்டதாக ஸ்பஷ்டமில்லை—பாஞ்சராத்ரமும் அதன் ப்ரதிபாத்யமும் முக்யமாகத் தொடக்கத்தில் ஸ்மரிக்கப்படவேண்டும். 'ப்ரவக்தா சந்தஸாம் வக்தா பஞ்சராத்ரஸ்ய யஸ்ஸ்வயம்' என்று ஸப்ததி தொடங்குவதுபோல—பாஞ்சராத்ர ப்ரதிபாத்யமான எந்த திவ்யதேசத்தில் ஸூகாஸீனராக பகவந் நியமனத்தால் எம்பெருமானார் தம் சிஷ்ய பரிகரங்களோடு ஆப்ரயாணம் எழுந்தருளியிருந்தார்? எந்த திவ்ய தேசத்தில் சிரகாலம் (ப்ருங்கமாக) மதுகரமாக மாதூகரவ்ருத்தியால் திருவீதிகளில் பிக்ஷாடன க்ஷணங்கள் (உத்ஸவங்கள்) செய்தது? யதிகள் ஞானம் ஸ்ரீவைஷ்ணவ தர்மமென்னும் இரண்டு பக்ஷங்களையுடைய பக்ஷியாயிருந்து விஷ்ணுபதமென்னும் ஆகாசத்தில் விஷ்ணுலிங்கமெனும் யத்யாச்ரமிகளான ஹம்ஸ்ங்களாய் விளையாடி ரமிக்கவேண்டும்.

ஸ்ரீரங்கராஜனே வேதாதியான ப்ரணவத்திலுள் விளங்கும் பரம்பொருள்—உபய வேதாந்த ஸர்வசாகா ப்ரத்யயமான பொருள்—யதிராஜரென்ற ஹம்ஸ பக்ஷியை ராமானுஜ திவாகரரென்பர். இவரை ஸூர்யனாக வர்ணித்துத் தீரவேண்டுமே; ஸூர்யனுயின் எந்தக் கமலங்களை மலரச்செய்து மகிழ்விப்பவர் இவர்? இவருக்கு பல்லாயிரம் சிஷ்ய பரிவாரங்களுண்டே; குரு சிஷ்யர்களை சேர்த்து அநுஸந்திப்பது வ்யாஸ ஸம்ப்ரதாயம். இவர் சிஷ்யர்களில் உத்தமர் யார்? இப்படி உதிக்கும் கேள்விகளுக்கு இந்த ச்லோகத்தில் உத்தரமளிக்கிறார். பூர்வ மீமாம்ஸையின் இரண்டாவது அத்யாயம் சப்தாந்தரம், அப்யாஸம் முதலியதால் கர்ம பேதத்தைச் சொல்லி, 'சாகாந்தராதிகரணம்' என்ற ஸர்வ சாகாப்ரத்யயைக்யாதி கரணத்தோடு முடிந்தது. 'ஆசார்யதேவோ பவ' 'தேவமிவ ஆசார்ய முபாஸீத' 'தஸ்மாத் ஆத்மக்ஞம் ஹ்யர்ச்சயேத் பூதிகாம:' என்ற சிலவிடங்களில் பண்டை நான்மறையில் 'ஆசார்யோபாஸனம்' விதிக்கப்டுகிறது. மோக்ஷ ப்ராப்தி பகவதுபாஸநத்தால் ஏற்படுமென்றும் பலகால் நான்மறை கூறுகிறது. 32 பக்தி வித்யைகளிலும் ஆசார்யோபாஸன வித்யையென்ற ஓர் தனி வித்யையில்லை; அது ஸர்வவித்யாநுயாயி. ஆசார்யதேவன், ஈச்வரதேவன், இருவரையும், உபாஸிக்க வேண்டும். த்ராவிட சாகைகளில் வற்புறுத்தப்பட்டிருக்கும் ஆசார்யர்க்கடிமை, அடியார்க்கடிமை, நெடுமாற்கடிமை முதலியவற்றையும் உபாயகோடியிலும், பலகோடியிலும் சேர்த்து பகவதுபாஸனமுமிருக்க வேண்டுமென்று வம்சங்களையும் காட்டி, இங்கே

சாகாந்தராதிகரணத்தையும் ஸூசிக்கிறர் 'ஸர்வ வேதாந்த ப்ரத்யயம்' என்று சாரீரகத்திலும் அதே ந்யாயமுளது. அது வித்யா பேதவிசாரம் செய்யும் பாதத்திலுளது. த்ரமிடோபநிஷத்தையும் ஸர்வசப்தத்தில் நாம் சேர்த்துக் கொள்ளலாம். 'சடஜித் த்ருஷ்டஸர்வீய சாகா காதா'' என்று ரத்ஞுவளி பணித்ததில் மாறன் மறை ஸர்வாதிகாரமான 'ஸர்வ சாகா' எனப்பட்டது. ஸர்வர்க்கும் பொதுவான ஸாமசாகை ஸர்வ சாகை. மற்ருேர் ரஸமுமுண்டு. 'ஸர்வசாகாப்ரத்யயர், ஸர்வவேதாந்த ப்ரத்யயர்' எந்த மூர்த்தி? பதின்மர் பாடும் பெரியபெருமாள் அம் மூர்த்தியாகலாம். த்ராவிட வேதாந்தத்ரஷ்டாக்களெல்லோரும் பாடு வது ஸ்ரீரங்கராஜனுக்கு அஸாதாரணம். ஸர்வ த்ராவிட வேதாந்த ப்ரதிபாத்யரும், ஸர்வாதிகாரமான சடஜித்த்ருஷ்ட ஸர்வீய சாகாப்ரதி பாத்யருமான ஸ்ரீரங்கராஜனை முதலில் பேசுவதால் சாகாந்தராதிகரணம் ஸூசிக்கப்படுகிறது. வேதாதியான ப்ரணவத்தினுள் விளங்கும் பரம் பொருள் ஸ்ரீரங்கராஜன். 'ப்ரஹ்மண: ப்ரணவம் குர்யாத் ஆதௌ அந்தேச' எந்த வேதபாகத்தைச் சொன்ஞலும் முதலில் ப்ரணவத்தை உச்சரிக்கவேண்டும். ப்ரணவத்திற்குள் ஸகல வேதங்களுமடங்கியவை. 'செழு மறையின் முதலெழுத்துச் சேரும் கோயில்' ப்ரணவாகாரவிமா னத்திற்குள்ளுள்ள தேவன் ப்ரணவவாச்யமான தேவன்: ப்ரணவத்திற் குள் ஸகல வேதங்களுமுள்ளன. ஆகையால் ஸர்வவேதவாச்யன், ஸர்வவேத ப்ரத்யயன். ப்ரணவத்தோடு தொடங்கி ப்ரணவத்தோடு முடிக்கவேணும். ஸர்வ வேதங்களும் ப்ரணவமென்னும் வாத்யப் பெட்டிக்குள்ளிருந்து எடுத்து மறுபடியும் முடிக்கும்போது அதற்குள் வைக்கப்படுமென்பர். ப்ரணவவாச்யமான பெரியபெருமாள் ரங்கவிமா னப்பெட்டியிலுள்ளவர்.

'ஸ்ரீரங்கராஜ சரணம்புஜ ராஜஹம்ஸ:' ''அத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ'' என்று ஸ்ரீரங்கராஜன் நியமனம். ''வான்திகழும் சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல், ஆன்ற தமிழ் மறைகளாயிரமும், ஈன்ற முதல்தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமா னுசன்'' என்று பிள்ளானருளியபடி தமிழ் மறையின் இரண்டு தாய் களான சடகோபனையும் இராமாநுஜனையும் முதல் ச்லோகத்தில் குறிக் கப்பட்டது. திருவாய் மொழி ஸ்ரீரங்கராஜன் புகழ்விஷயம். பத்து சத கங்களிலுள்ள விஷயங்களும் அதே கிரமப்படி 'கங்குலும் பகலில்' உள்ளன. 'உத்புல்ல பங்கஜதடாகமிவோபயாமி' என்று ஸ்ரீரங்கராஜஸ் தவம் முதல் சதகத்தில் 127 ச்லோகங்களுக்கு நடுவில் 63-வது ச்லோ கத்தில் பெரிய பெருமாளுடைய திருமேனி வர்ணனத் தொடக்கத்தில் 'ஏஷப்ரஹ்ம ப்ரவிஷ்டோஸ்மி க்ரீஷ்மே சீதமிவஹ்ரதம்' என்றதுபோல்

மானஸ ஸரஸ்ஸு போன்ற சீதளமான தாமரைத் தடாகமாக ஸ்ரீரங்க ராஜர் திவ்யமங்கள விக்ரஹத்தின் நிரூபணம். திருவடிகளும் அத்தடா கத்தில் தாமரைகளாய் மிதப்பன — அத்தாமரைகளின் போக்யதையை ரஸித்துக்கொண்டு திருமேனியாகிய மாநஸ ஸரஸ்ஸு போன்ற பங்கஜ தடாகத்தில் விஹரிக்கும் ராஜ ஹம்ஸமாவார் 'ஸ்ரீராமாநுஜ பரமஹம்ஸர் ராஜஹம்ஸர் பரமஹம்ஸர். ஹம்ஸாநாம் ராஜா என்பதும் பரமரான ஹம்ஸர் என்பதும் ஒன்றேயாகும். 'அரங்கத்தம்மான் திருக்கமல பாதத் தில் அலையெறிகிற மதுப்ரவாஹத்திலே சிறகடித்துக்கொண்டு வர்த் திக்கிற ஹம்ஸ ச்ரேஷ்டமாயுள்ளவரை' என்று ஸ்ரீபிள்ளைலோகம் ஜீயருடைய அதிஸுந்தரமான அநுபவ உரை. 'ரதிம் கத:' ஸ்ரீரங்கத் தில் அரங்கனுக்கு ரதி. அரங்கன் தாமரையடிகளில் ராமாநுஜ ராஜ ஹம்ஸருக்கு ரதி. 'நபத்நாதி ரதிம் ஹம்ஸ: கதாசித் கர்த்தமாம்பஸி' என்பர். ரமந்திஹம்ஸா: உசிகக்ஷயா: என்று சுகர். 'ராஜா' என்னும் சப்தம் க்ஷத்ரியரை வேதப்ரஸித்தியால் சொல்லுமென்றும் ஆர்யவரரான பாணினியின் வ்யாகரண ஸ்ம்ருதியும் அதே பொருளைக் காட்டுகிற தென்றும், ராஜ்யமாளும் மற்ற வர்ணத்தாரைச் சொல்லாதென்றும் அதனால் ராஜஸூயம் க்ஷத்திரியர்கள் எல்லோருக்குமே தானென்றும் மீமாம்ஸை தீர்மானித்தது. 'ராஜா ராஜஸூயேன யஜேத' இரண்டாம் அத்யாம் மூன்றும் பாதத்தில் அவேஷ்ட்யதிகரணத்தில் இந்த விசார முண்டு. "ஆர்யாவர்த்தம் என்னும் வடஇந்தியாவில் ஆர்யர்கள் ராஜ சப்தத்தை ராஜ்யமாள்பவர் எவ்வர்ணத்தாராயினும் ராஜ்யமாளும் எல் லோர் விஷயத்திலும் ப்ரஸித்தமாக ப்ரயோகிக்கிறார்கள். ஆனால் த்ரமிட தேசத்தில் ஆர்யர்கள் ராஜபதத்தை க்ஷத்ரிய விஷயத்தில் மாத்திரம் ப்ரயோகிக்கிறார்கள். பாணினியின் ஸ்ம்ருதி த்ரமிடதேசத்தி லுள்ள அந்த ஆர்ய ப்ரஸித்தியை மூலமாகக் கொண்டிருக்கலாம். அதை யநுஸரித்து வேதத்திலும் 'ராஜாவை அபிஷேகம் செய்யவேண்டும்' என்றவிடத்தில் ராஜசப்தத்திற்கு க்ஷத்ரியரென்று பொருள்" என்று குமாரிலபட்டர் வார்த்திகம். இந்த இரண்டாம் ச்லோகத்தில் இரண்டா மத்யாய விஷயம் ஸ்வாமி திருவுள்ளத்திலோடுகிறது. திரும்பவும் திரும் பவும் ராஜபதாப்யாஸத்தைக் காண்கிறோம். 'ரங்கராஜன்' என்னுமிடத் தில் ராம க்ருஷ்ணாத்யவதார தசையைக்கொண்டு ஒருவாறு க்ஷத்திரியத் வத்தை நினைக்கலாம்— 'அரங்கமேய வந்தணன்' என்கிற அந்தண ப்ரஸித்திக்கேற்ப, உத்தரதேச ப்ரயோக ப்ரஸித்தியைப்பற்றி 'அரங்க மாளி' என்னுமந்தணவரசனாகவும் கொள்ளலாம். இப்பெருமாள் ரங்க த்வீபத்தில் இப்பொழுதிருந்தாலும், இவர் 'ஆயோத்யகர்', உத்தராஹர். அத்தேசப்ரஸித்தியைக்கொண்டு இவர் ப்ராஹ்மண ராஜரெனக் கொள்ள

லாம். ரங்கத்தை ரஞ்ஜிப்பிக்கும் ராஜாதிராஜன். 'ராஜா ப்ரக்ருதி ரஞ்ஜநாத்' வடதேச ப்ரஸித்தியைக்கொண்டு, 'ஆள்பவர்' என்று பொருள் கிடைக்கும். இந்த ச்லோகத்தில் நான்கு ராஜசப்தங்களுள், பெருமாள் விஷயத்தில் இந்நாட்டு ப்ரஸித்தியைக் கொண்டு 'க்ஷத்திரியர்' என்ற பொருளுளதால் அவதார தசையைக்கொண்டு க்ஷத்திரியத்வத்தை நிர்வஹிக்க வேணும். இவர் வடதேசத்தவரானபடியால், அத்தேச ப்ரஸித்திப்படி இவரை ஆளும் அந்தணராஜரென்று சொல்லலாம். இரண்டாவது மூன்ருவது ராஜசப்தங்கள் மநுஷ்யரல்லாத, கேவல ப்ராணியைச்சொல்லுவதால், அங்கே ஜாதியைச் சொல்லுகிறதென்கிற ப்ரஸக்தியேயில்லை; அவ்விரண்டிடத்திலும் 'ச்ரேஷ்ட' என்கிற பொருளே; 'யதிராஜர்' என்னுமிடத்திலும் ச்ரேஷ்டப்பொருளே; க்ஷத்ரியப் பொருளில்லை. க்ஷத்ரியர் யதியாக அதிகாரமுமில்லை. "ரங்கேச பக்தஜந மாநஸ ராஜஹம்ஸ:" என்ற ஸப்ததியும் இங்கே ஸ்வாமி நெஞ்சிலுளது. 'ரங்கேசர் பக்தர்களுடைய ப்ரஸந்நமான மாநஸ ஸரஸ்ஸில் விஹரிக்கும் ராஜஹம்ஸம்' இங்கே ஸ்ரீரங்கராஜஸ்தவ ச்லோகத்தையும் நெஞ்சிற் கொண்டு ஸ்ரீரங்கராஜனையே தாமரைத் தடாகமாகத் திருவுள்ளம்பற்றி திருவடிகள் அந்த தடாகத்திலுள்ள தாமரைகளாகின்றன. ராஜன் திருவடித் தாமரைகளில் விஹரிப்பது ஹம்ஸராஜரென்றும் ஆநுரூப்யம். ரங்கராஜர் ஆதியில் ஹம்ஸாவதாரம் செய்தவர். ரங்கராஜரும் ஹம்ஸர், யதிராஜரும் ஹம்ஸரென்றும் ஆநுரூப்யம். வேறு எந்த ராஜனை இந்த ராஜஹம்ஸர் அடிபணியக்கூடும்? ஹம்ஸங்களுக்கு ராஜா பரமஹம்ஸர்; பரமஹம்ஸர் வணங்க ஏற்பவர், ரங்கராஜர், வரதராஜர், வேங்கடேச்வரர் முதலிய ஆதிஹம்ஸரான ஸர்வேச்வரர்களே. பல ராஜபதங்களை இங்கே அப்யாஸம் செய்வதால், இரண்டாமத்யாயத்தில் அப்யாஸத்தைப் பற்றிய விசாரமும், ராஜசப்த விசாரமும் ஸூசிக்கப்படுகிறது.

"துரவகமாத்மதத்வநிகமாய தவாத்மதநோ:
சரிதமஹாம்ருதாப்தி பரிவர்த்தபரிப்ரமணா: ।
ந பரிலஷந்தி கேசிதபவர்க்கமபீச்வர தே
சரணஸரோஜஹம்ஸகுலஸங்கவிஸ்ருஷ்டக்ருஹா: ॥

என்கிற ச்ருதிகீதை ச்லோகமும் இங்கே நெஞ்சிலுள்ளது. எம்பெருமான் சரண ஸரோஜ ஹம்ஸகுலபதி யதிராஜர். இந்த ச்ருதிகீதை ச்லோகத்தின் அநுபவத்தை, அரங்கமாநகருளான் விஷயமாக அநுபவித்த தொண்டரடிப்பொடியாழ்வார் பாடிய "இச்சுவை தவிர யான்போய் இந்திரலோகமாளும் அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா

நகருளானே' என்னும் பாசுரத்தையும் இங்கே நினைக்கவேணும். 'சிற்றெயிற்று முற்றல் மூங்கில் மூன்றுதண்டர் ஒன்றினர் அற்றபத்தர் சுற்றிவாழு மந்தணீரரங்கமே'' என்பதையும் நினைக்கிறார்.

**'ஸ்ரீமத் பராங்குச பதாம்புஜ ப்ருங்கராஜம்'**— பெருமாள் திருவடிகளோடு பாதுகையான ஸ்ரீசடகோபனுடைய திருவடிகளும் கூடவே நெஞ்சில் வஸித்து இன்பம் பயக்கின்றன. 'ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா' என்று ஆழ்வார் திருவடிகளைச் சென்னிமேற்கொள்ளவே 'யந்மூர்த்நிமே' என்று உடனே பெருமாள் திருவடிகளும் சிரஸ்ஸில் விளங்கின. இங்கே யதிராஜன் திருவடிகளைச் சென்னிமேற்கொண்டதும் பிறகு கூடவே அவர் சென்னிமேலுள்ள நம்மாழ்வாருடைய திருவடிகளும் அவருக்கு அவயவமான ஸ்ரீஆண்டாள், பட்டர்பிரான், பரகாலர் முதலிய ஆழ்வார்கள் திருவடிகளும் யதிராஜருக்கு அவயவமான ஸ்ரீகூரநாதரும் புத்திஸ்தராகிறார்—'விஷ்ணோ: பதே மத்வ உத்ஸ:' என்றது வேதம். 'தவாம்ருத ஸ்யந்திநி பாதபங்கஜே நிவேசிதாத்மா கதமந்யதிச்சதி, ஸ்திதே அரவிந்தே மகரந்தநிர்ப்பரே மதுவ்ரதோ நேக்ஷுரகம் ஹி வீக்ஷதே' என்று பெருமாள் திருவடியில் பெருகும் தேனைச் சுவைத்து அதில் நீங்காதவின்பமுறும் மதுகரமாகத் தம்மைஆளவந்தார் நிரூபித்தார். யதிராஜரை ஆழ்வார் திருவடிகளில் அதுபோல் ரஸிக்கும் ப்ருங்கராஜரென்கிறார். 'அணி குருகை நகர் முருகர் நாவுக்கு இசைந்தன' கிளி சோதியபமும்; 'சுகமுகாத் அம்ருதத்ரவ ஸம்யுதம்' ஆழ்வார் நாக்குச் சுவைத்த திருவடித் தாமரைகள் யதிராஜர் ப்ருங்கராஜர்; மதுகரவ்ருத்தி பரமஹம்ஸர் வ்ருத்தி. 'என்னுவியின் கவி யாதொருவர்க்கும் கொடுக்கிலேன் தென்னுதென்னுவென்று வண்டுமுரல் திருவேங்கடத்தென்னுனை என்னப்பன் எம்பெருமான் உளனுகவே' என்றபடி ஸ்ரீநிவாஸன் திருவடித் தாமரைகளில் செந்தேனையருந்தி மத்தமாகி அங்கே மதுரமாகப்பாடும் வண்டுபோல் தான் இன்கவி பாடுவதாக அனுஸந்தித்தார். 'ஸ்திதோ அரவிந்தே' என்கிற அனுபவம் அதையனுஸரித்தது. பராங்குச ப்ரமரத்தின் ஷட் சரணங்களாகிய தாமரைகளில் தேன் அருந்தி ஆடிப்பாடும் ஷட்சரணர் ப்ருங்கத்தின் திருவடியில் ஓர் தலைமையான ஆண்வண்டு பராங்குசநாயகி, ராணிவண்டு. அதைப்பணியும் மற்ற வண்டுகளின் தலைவர் யதிராஜர்.

**ஸ்ரீபட்டநாதபரகாலமுகாப்ஜமித்ரம்** — ஸ்ரீரங்கராஜன் சுடரொடி தொழுதெழுபவர் சடகோபர். அவரடிபணிந்துய்ந்தவர், ராமானுசர். சடகோபருக்கு அவயவமான மற்ற ஆழ்வார்களின் திருவடித்தாமரைகளை எம்பெருமானுர் தொழுதெழுவராயினும் தாமரை ஸமூஹங்களை வர்ணிக்

கும் இவ்விடத்தில் அவர்கள் முகங்களாகிய தாமரைகளைப் பேசுவது ரஸம். அந்தத் தாமரைகளை மலரச்செய்யும் ஸூர்யன் ராமாநுஜ திவாகரர். அந்த ஸூர்யன் விஷயமான அந்தாதியும் காயத்ரியாயிற்று. 'பட்டநாதஸ்ரீ' என்னும் தனியன் பதத்தில் ஆண்டாள், பட்டர்பிரான் என்றும் பொருள் பணிப்பர். அரங்கன் ப்ரஸ்தாவத்தில் ஆண்டாளை மறக்கலாகாது. 'ஸ்ரீபட்டநாத' என்று இங்கே மாற்றிவைத்திருப்பதில் ஆழ்வார்களின் ப்ரபந்த ப்ரஸ்தாவத்தில் ஸ்ரீ என்று ஸ்ரீயின் அம்சமான ஆண்டாளை முதலில் கொள்ளலாம்.

ஸ்ரீவத்ஸசிஹ்னசரணம்—ஸ்ரீரங்கராஜன் ப்ரஸ்தாவத்திலும், ஆழ்வார்கள் ப்ரஸ்தாவத்திலும் ஸ்ரீரங்கேச புரோஹிதரான 'ஆழ்வானை' மறக்கலாகாது. யதிராஜன் ப்ரஸ்தாவத்திலும் அவரை மறக்கமுடியாது. ஸுந்தரபாஹுவை விஸ்தாரமாகத்துதித்து விட்டு 'ஸ்ரீரங்கதாமநி யதா புரமேகதோஹம் ராமாநுஜார்ய வசக: பரிவர்த்திஷீய' என்று அரங்கத்தில் ராமானுஜன் திருவடிவாரத்தில் வாஸத்தையருள் வேண்டுமென்று ப்ரார்த்தித்தார். மேல் மூன்று ச்லோகங்களிலும் அதையே ப்ரார்த்தித்தார். அதிமானுஷஸ்தவத்திலும் 'ஸ்ரீரங்கராஜ சரணாம்புஜ முந்நயாமி' என்றும், 'ச்ரேய: கிரந்து கிரணா: சரணாரவிந்த நிஷ்யந்தமான மகரந்த ரஸௌகதேச்யா:, தஜ்ஜா: ச்ருதேர்மதுநஉத்ஸஇதி ப்ரதீதா மாங்கல்ய ரங்கநிலயஸ்ய பரஸ்ய தாம்ந:' என்றும் 'ஸ்ரீரங்கிணச் சரணயோர்யுகமாச்ரயாம:' என்றும் ஸ்ரீரங்கராஜன் சரணங்களைத் துதித்த மூன்று ச்லோகங்களும் இங்கே ஸ்வாமி நெஞ்சிலுள்ளன. ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் 'யோநித்ய மச்யுத பதாம்புஜ' என்ற முதல் ச்லோகமும் 'தத்ஸம்ச்ரயேம வகுளாபரணாங்க்ரியுக்மம்' என்ற இரண்டாவது ச்லோகமும், 'தேவ த்வதீய சரணப்ரணய ப்ரவீண ராமாநுஜார்யவிஷயீக்ருதமப்யஹோ மாம் பூய: ப்ரதாபயதி வைஷயிகோபி மோஹோர் மதகர்மண கதரதத்ர ஸமாந ஸாரம்' என்ற 90—ம் ச்லோகமும் இந்த விம்சதியின் 1, 2 ச்லோகங்களால் நினைக்கப்படுகின்றது.

**யதிராஜம் ஈடே**— இங்கு ராஜசப்தத்திற்கு க்ஷத்ரிய வர்ணப் பொருள் பாதிதமாகும். ஸந்யாஸ ஆச்ரமம் க்ஷத்ரியர்களுக்கு இல்லை. ஸூர்யராக வர்ணித்த யதிராஜரை சந்த்ரனாகவும் வர்ணிப்பதழகு. 'ஸகலகுமதி மாயா சர்வரீபாலஸூர்ய: நிகமஜலதி வேலா பூர்ணசந்த்ரோ யதீந்த்ர:' என்று ஸப்ததி. இங்கே ராஜ சப்தத்திற்கு சந்த்ரன் என்று பொருள் கொண்டு 'யதி சந்த்ரர்' என்று சந்த்ரத்வ வர்ணனமும் திருவுள்ளம்.

वाचा यतीन्द्र! मनसा वपुषा च युष्मत्पादारविन्दयुगलं भजतां गुरूणाम्।
कूराधिनाथकुरुकेशमुखाद्यपुंसां पादानुचिन्तनपरस्सततं भवेयम्॥ ३॥

3. வாசா யதீந்த்ர மனஸா வபுஷா ச யுஷ்மத்
பாதாரவிந்தயுகளம் பஜதாம் குரூணும்
கூராதிநாதகுருகேசமுகாத்ய பும்ஸாம்
பாதானுசிந்தன பரஸ் ஸததம் பவேயம்

பதவுரை:—யதீந்த்ர–யதித் தலைநாதனே, வாசா–வாக்கினுலும், மநஸா—மனத்தாலும், வபுஷா ச—காயத்தாலும், யுஷ்மத் பாதாரவிந்தயுகளம்—உம் திருவடித்தாமரைகளை, பஜதாம்—இடைவிடாமல் உபாஸிக்கும், குரூணும்—ஆசார்யர்களான, கூராதிநாதகுருகேச முகாத்ய பும்ஸாம்—கூரத்தாழ்வான், திருக்குருகைப்பிரான் பிள்ளான் முதலிய ஆதி புருஷர்களின், பாதானுசிந்தனபர:—திருவடிகளை அனுஸ்யூதமாக ஸ்மரிப்பதிலேயே நோக்கோடு, ஸததம் பவேயம்—ஸர்வகாலமும் இருப்பேனுக.

அவ:—முதல் ச்லோகத்தில் ஸ்ரீமாதவர்கள் திருவடிகள் சடகோபன் திருவடிகள், எம்பெருமானுர் திருவடிகளில் ப்ரஸ்துதம். இரண்டாம் ச்லோகத்தில் கோதை, பட்டர்பிரான், பரகாலர் முதலிய ஆழ்வார்களின் திருவடிகளும் கூரநாதனுடைய சென்னியும் சேர்ந்தவை. இங்கே கூரநாதர், பிள்ளான் முதலிய சிறுமாமனிசரான ஆசார்யர்கள் திருவடிகளின் நிரந்தர பஜனம் ப்ரார்த்திக்கப்படுகிறது. எம்பெருமானுர் திருவடிகளைப் பணிந்த ஆசாரியர்களின் திருவடிகளை பஜிப்பது, எம்பெருமானுர் தியான பரமான விம்சதி என்னும் பாவனையில் ஏகரஸமாய்ச்சேருகிறது. மீமாம்ஸையின் மூன்ருவது அத்தியாயத்தில் சேஷசேஷி பாவம் விசாரிக்கப்படுகிறது. சேஷசேஷிபாவம்தானே நம் ஸித்தாந்தம். 'ததீயசேஷத்வம்' தச்சேஷத்வத்திற்கு அங்கம்: சேஷிபரம்பரை தாழத்தாழ, கீழ்ப்பர்வத்தில் சேஷத்வம் ஸ்வருபத்திற்கு மிகவேற்கும். ச்ருதி, லிங்கம், வாக்யம் முதலிய ப்ரமாணங்கள் கர்மமீமாம்ஸையில் சேஷசேஷி பாவநிர்ணயகம். 'வாசா' என்பது நிரபேக்ஷ கண்டாரவமான 'சப்தம்' என்னும் 'ச்ருதி' ப்ரமாணத்தையும் ஸூசிக்கும். ச்ருதியினுல் சேஷத்வம் வாக்கினுல் (வாக்கியத்தால்) சேஷத்வம். லிங்கப்ரமாணத்திற்கு 'ஐந்த்ர்யா கார்ஹபத்யம் உபதிஷ்டதே' என்னும் ப்ராம்மண வாக்கியத்தையும், 'நேந்த்ரஸச்ச ஸதாசஷே' என்கிற இந்த்ரமந்த்ரத்தையும் உதாஹரிப்பர்.

வசநாத்து அய்தார்த்தம் ஐந்த்ரீ ஸ்யாத் என்ற இரண்டாம் பாதம் இரண்டாமதிகரணத்தில் 'வசநம்' என்னும் ச்ருதியால் இந்த்ரனைத் துதிப்பதுபோலுள்ள மந்த்ரத்தைச் சொல்லி 'கார்ஹபத்ய' மென்னும் அக்நியை உபஸ்தாநம்பண்ணவேண்டும், மந்த்ரத்திலுள்ள இந்த்ர பதத்திற்கு அமுக்யமாக அக்நிபரமாகப் பொருள்கொள்ளவேண்டுமென்று [illegible] னித்தார்கள். 'அக்நௌ வசநஸாமர்த்யாத் விநியோக: ப்ரதீயதே, நாத்யந்தமஸமர்த்தத்வம் கௌண ஸாபர்த்ய ஸம்பவாத்' என்று அங்கே வார்த்திகம். இந்த ச்லோகத்தில் "யதிந்த்ர' என்று இந்த்ரசப்தத்தை கௌணமாக (அமுக்யமாக)ப்ரயோகிப்பதாலும் 'ச்ருதிலிங்க பலாபல [illegible] ]த்தை ரஸமாக ஸூசிக்கிறார். அங்கங்கள், கரணங்கள், ஸாதனங்கள், இங்கே மூன்று கரணங்களாலும் கூரநாதர், பிள்ளான் முதலிய ப்ரதான குருக்கள் யதிராஜர் திருவடித்தாமரை ஜோடியை நிரந்தரம் முடிசூடி உபாஸித்தார்கள் என்கிறார். அங்காத்யாயமான மூன்று அத்யாயத்தை அநுஸரிக்கும் மூன்றும் ச்லோகத்தில் மூன்று கரணங்களாலும் ஏகரீதியாக, ஸரூபமாக, பரம ஆர்ஜவத்தோடு [illegible]ர்யோபாஸநம் செய்தார்கள் என்கிறார். உபாஸநத்திற்குக் க[illegible]ரயங்களும் அவற்றின் ஸாரூப்யமும் அங்கமாகும். எம்பெருமான் திருவடிகளை உபாஸித்த ஆசார்யர்களின் திருவடிகளை உபாஸிப்பது எம்பெருமான் திருவடிகளை உபாஸிப்பதற்கு அங்கம். அங்கங்கள் ப்ரதானத்திற்கு அனுக்ராஹகமென்பர் மீமாம்ஸகர். இந்த க்ரமத்தில், எம்பெருமானுரடி பணிந்துய்ந்த ஆசிரியர் பாதஸேவை எம்பெருமானின் பாதஸேவைக்கு அனுக்ராஹகமாகும். 'அமாநித்வம்' என்று தொடங்கிப்படித்த 20 ஸாதநங்களில் 'ஆசார்யோபாஸநம்' ஒன்று. முண்டகோபநிஷத்தில் 'தஸ்மாத் ஆத்மஜ்ஞம் ஹி அர்ச்சயேத்' என்று ப்ரஹ்ம நிஷ்டரைப் பூஜிப்பதை விதித்து உடனே அடுத்த மந்த்ரத்தில் 'ஸ வேத ஏதத் பரமம் ப்ரஹ்ம தாம' என்று அப்படிப்பூஜிப்பவன் பரப்ரஹ்மத்தை அறிவான்' என்று கூறப்பட்டது.

வாசா—வாக்கிலும். 'மகாவாக்காயங்கள்' 'மநஸா வாசா ஹஸ்தாப்யாம்' 'காயேந மநஸா வாசா' என்பர். இங்கே 'வாசா' என்று முதலில் வைத்ததற்கு மூன்று காரணங்கள். 1. ச்ருதிலிங்க வாக்யாதி ப்ரமாணங்களில் 'சப்தம்' 'ச்ருதி' என்பதை முதலிலேயேகாட்ட, 'வாசா' என்று தொடங்குகிறார். 'வாசா' என்பது வாக்கியத்தையும் சொ[illegible]மானதால் மூன்றாவது ப்ரமாணமான 'வாக்யமும்' ஸூசிதமாகும். 2. 'குரும் ப்ரகாசயேத்திமான்' என்று பிதா, குரு முதலியவர்களைப் புகழவேண்டும். மனதில் வைத்திருந்தால் போதாது. உலகமறிய உரக்கத் துதிக்க வேண்டும். ஆகையால் இதுவிஷயத்தில் வாக்கு பிரதானம். 3. இப்போது

ப்ரக்ருதத்தில் அபேக்ஷிப்பது துதி தலைக்கட்டவேண்டும் என்பது. எம்பெருமானுரை உபாஸித்த ஆழ்வான் போல்வார் துதிவாக்குகளை முதலில் நினைக்கவேண்டும்; பேசவேண்டும். 'ஜிஹ்வே கீர்த்தய கேசவம் முராரிம் சேதோ பஜ ஸ்ரீதரம், பாணி த்வந்த்வ ஸமர்ச்சய' என்ற முகுந்த மாலையின் க்ரமத்தையும் நினைக்கிருர்.

**'யதீந்த்ர'—** இங்கே தான் முதன் முதலில் நேரில் ஆஹ்வானம் பண்ணுகிருர். 'இந்த்ர ஆயாஹி வீதயே' 'ஹவிஷ்க்ருத் ஏஹி' என்பது போல் கூப்பிடுகிருர். தேவரீர் திருவடிகளின் உபாஸகர் திருவடிகளில் நிறைந்த பக்தியை அருளவேண்டுமென்று இங்கே யதீந்த்ரரை ப்ரார்த்திக்கிருர். இந்த்ரன் முதலிய தேவர்களிடம் இப்படி ப்ரார்த்தித்தால் கோபமே வரும்; 'அடியார்க்கென்னை யாட்படுத்த விமலன்' என்று [illegible]னிக்கப்பட்ட ப்ரஹ்மத்தைப்போல 'மம ஸாதர்ம்யமாகதா:' என்றபடி ப்ரஹ்ம ஸாதர்ம்யமுள்ள எம்பெருமானுருக்கும் அதே சீலம். இங்கே 'யதீந்த்ர' என்று கூப்பிட்டுத் தொடங்கியதுபோல் முடிவிலும் (ச்லோ 19) 'யதீந்த்ர' என்று கூப்பிட்டு முடிக்கிருர். 'யதித்தலைநாதன்' யதீநாம் இந்த்ரன்.

**மநஸா—** ஓர் ப்ரகரணம் முழுவதும் ஏகபுத்யாரூடமாக, ஓரே வாக்யமாக மனதில் க்ரோடீகரிக்கவேண்டும். இதில் ப்ரகரணம் என்று மூன்றும் ப்ரமாணத்தை ஸூசிக்கிருர்; அந்த்ரிந்த்ரியம்.

**வபுஷா ச—** 'அணங்கென ஆடுமெனங்கம்' என்றதுபோலே எம்பெருமானுர் விஷயத்தில் அங்கங்களெல்லாம் பரவசமாகப் பஜித்துக் கூத்தாடும்.

**யுஷ்மத் பாதாரவிந்தயுகளம் பஜதாம்—** நிரந்தரமாக அவிச்சிந்நமாக பஜிக்கும் தேவரீர் திருவடிகளை பஜிப்பவர் திருவடிகளை நான் பஜிக்க அநுக்ரஹிக்க வேண்டும்.

**குரூணும்—** உம்முடைய திருவடிகளை பஜித்து உம் சிஷ்யர்கள் ஜகத் குருக்களானுர்கள். உம்மை பஜிப்பவர்க்கும் உம் ஸாம்யத்தை நீர் அருளினீர். 'ஆத்மஸாம்யாவஹத்வாத் பத்யு: ஸம்யமிநாம் ப்ரணம்ய சரணௌ தத்பாதகோடீரயோ: ஸம்பந்தேன ஸமித்யமான விபவாந் தந்யாம்ஸ்ததாந்யான் குரூந்' முதலியவற்றை நினைக்க வேண்டும்.

**கூராதிநாதகுருகேசமுகாத்யபும்ஸாம்—** கூரப்பிரான் (கூரேசர்), குருகைப்பிரான் (குருகேசர்) முதலிய பகவத்குணக்கடலிலாழ்ந்து முழுகும் 'குருகை நகர் முனிவர்' போன்றவர்கள் கூரேச குருகேசர்கள்.

'ப்ரேமார்த்ரவிஹ்வலகிர: புருஷா: புராணு:' என்பதைக் கணிசித்து ஆத்யபுமான்களென்றது. ஆத்ய புமான்கள் புராண புருஷர்கள். 'தாசரதி' (முதலியாண்டான்) முதலிய பெரியோரும் ஆதிசப்தக்ராஹ்யர்

பாதாநுசிந்தனபர: — பக்தி என்பது த்ருவானுஸ்ம்ருதி; அனுஸ்ம்ருதி என்பது உபாஸனம் என்று ச்ருதப்ரகாசிகை. தொடர்ந்து ப்ரீதி நினைப்பு. 'அனு' என்பதற்கு 'பின்' தொடர்ச்சியாக என்றும் பொருளுண்டு. உம் திருவடித்வந்த்வத்தை முடியில் வஹிப்பவர்கள் திருவடிகளில் பக்தி, உம் திருவடியை மேலும் அதை ஒட்டி.

ஸததம் — இத்துதியில் நெடுகிலும் 'ஒழிவில் காலமெல்லாம்', எல்லையற்றதாக முடிவிலாவலுடன் அடிமைத்தன்மை கோரப்படுகிறது. 'நித்யஹே' என்று முதல் ச்லோகம். 5—ல் 'நித்யம் அநுபூய' 6—ல் அந்வஹம், 7—ல் அநிசம், 8—ல் நித்யம், 9—ல் ஸததம், 10—ல் புந: புந: 11—ல் ஸததம் 12—ல் ரதி: அவிரதா மமாஸ்து 16—ல் வச்ய: ஸதா பவதி, 17—ல் காலத்ரயேபி 18—ல் 'அந்வஹம் விவர்த்தய' 'ஸ்ரீமந் யதீந்த்ர தவ திவ்யபதாப்ஜ ஸேவாம்' என்று 19—ல் ஓதுகிறபடி யதீந்த்ரபதாப்ஜ ஸேவையே இங்கே கோரும் பலன். ஆழ்வான் பிள்ளான் திருவடிகளின் நிரதிசயமான ப்ரீதி வந்தால் தானே அவர்கள் தைவமான யதிராஜன் திருவடிகளின் பக்தி கூடவே வரும்.

பவேயம் — இங்கே எல்லாம் 'அஸ்து' 'பவது' 'பவேயம்' என்றே ஓடுகிறது. இதுவே ஸத்தாஹேது. இல்லையேல் அஸந்நேவ பவதி.

नित्यं यतीन्द्र तव दिव्यवपुस्स्मृतौ मे
सक्तं मनो भवतु वाग्गुणकीर्तनेऽसौ ।
कृत्यं च दास्यकरणे तु करद्वयस्य
वृत्त्यन्तरेऽस्तु विमुखं करणत्रयं च ॥ ४ ॥

4. நித்யம் யதீந்த்ர தவ திவ்யவபுஸ்ஸ்ம்ருதௌ மே
ஸக்தம் மநோ பவது வாக்குணகீர்த்தநேஸௌ
க்ருத்யம் ச தாஸ்யகரணே து கரத்வயஸ்ய
வ்ருத்த்யந்தரேஸ்து விமுகம் கரணத்ரயம் ச

பதவுரை: — யதீந்த்ர — யதித்தலைநாதனே, நித்யம் — ஒழிவில் காலமெல்லாம், தவ திவ்யபு: ஸ்ம்ருதௌ — உம் திருமேனியின்

நினைவில், மே மந:—என் மனம், ஸக்தம் பவது—ஆசைகொண்டிருக்கவேண்டும், அஸௌ வாக்—இந்த என்வாக்கு, குண கீர்த்தநே—(உம்) குணகீர்த்தனத்தில், ஸததம் (ஸக்தா பவது)—ஆஸக்தமாயிருக்க வேண்டும், கரத்வயஸ்ய—இருகைகளின், க்ருத்யம் ச—செய்கையும், தாஸ்யகரணே து—ஊழியம் செய்வதிலேயே (சேஷவ்ருத்தியிலே) ஸக்தம் பவது—இன்புறவேண்டும்; கரணத்ரயம் ச—முக்கரணங்களும், வ்ருத்த்யந்தரே—மற்ற வியாபாரங்களில், விமுகம்—கண்ணெடுத்துப்பார்க்காமல், அஸ்து—இருக்க வேண்டும்.

அவ:—ஆழ்வான் பிள்ளான் முதலிய புராணபுருஷர்களுடைய கரணத்ரயங்களும் எம்பெருமானுடைய திருவடியிலீடுபட்டிருந்தன, அவர்கள் திருவடிகளில் என்னிலும் நிரந்தரபக்தியை அருளவேண்டுமென்றுர். வேதாந்தங்களில் ப்ரதுந்யாயமுண்டு. ப்ரஹ்மக்ரதுவாக யாவதாயுஷம் ப்ரஹ்மத்தை த்யானிக்கவேண்டும். 'ப்ரஹ்மவித் ஆப்நோதி பரம்' 'தமேவம் வித்வாந் அம்ருத இஹ பவதி' 'நாந்ய: பந்தா: அயநாய வித்யதே' திருநாரணன்தாள் சிந்தித்து உய்யவேண்டும். முன் ச்லோகத்தில் என்னென்னமோ ப்ரார்த்திக்கிறீரே; நீர் ப்ரார்த்திப்பது 'ப்ரஹ்மக்ரது' என்னும் ப்ரஹ்மோபாஸந ஸித்திக்காகவோ அல்லது நீராக உத்தேசிக்கும் வேறுபுருஷார்த்தத்திற்காகவோ, என்று கேள்வி வரக்கூறுகிறுர்—மீமாம்ஸை நான்காவது அத்யாயத்தில் சிலக்ரியைகள் க்ரத்வர்த்தமா (யாகஸ்வரூபத்தின் ஸித்திக்காகவா)? அல்லது கோறும் அதிகபலன் கிடைப்பதற்காகவா? என்றுவிசாரம். ப்ரஹ்மப்ராப்தி பரம புருஷார்த்தம், பரமப்ரயோஜநமென்பது உண்மையே. அது ப்ரஹ்ம க்ரதுவினுல் ஸித்திப்பதே. ப்ரஹ்மத்யானம் ப்ரஹ்மக்ரதுதக்ரத்வர்த்தம், அவரடியார்களின்ஸேவை புருஷார்த்தகரஷ்டை என்று இங்கே 4வது அத்யாயத்தின் விஷயத்தை ஒருவாறு ஸூசிப்பதில் திருவுள்ளம்.

த்ரிகரணங்களாலும் உம்மையே ஆழ்வான் முதலிய பெரியோர்கள் உபாஸித்தார்கள். என் கரணத்ரயங்களும் உம் திருவடிகளில் லயிக்கும்படி அனுக்ரஹிக்க வேண்டுமென்று இங்கே ப்ரார்த்திக்கிறுர். அந்வய மூலமாயும் வ்யதிரேகமூலமாயும் ப்ரார்த்திக்கிறுர். உமது திருவடிகள் விஷயத்தில் இன்புற்று ஸக்தமாயிருக்கவேண்டும் என்பது அந்வயம். மற்றெதையும் கண்ணெடுத்துப் பார்க்கக்கூடாது என்பது வ்யதிரேகம். மூன்று பாதங்களில் அந்வயத்தையும் நான்காம் பாதத்தில் வ்யதிரேகத்தையும் கூறுகிறுர்.

**நித்யம்**— நித்யமாக ஆசார்யோபாஸநத்தை விரும்புவோம். இது கோறும் புருஷார்த்தகாஷ்டையைத்தரும் காம்யகர்மமாயிருக்க வேண்டு மென்று வைசித்ர்யரஸம் ரஸிக்கத்தக்கது. காம்யம் நித்யமாகிறது என்று விரோதாபர்யாயாலங்காரமும் த்வனிக்கிறது.

**யதீந்த்ர**— யதித்தலைநாத! 'யோ நித்யம் அச்யுதபதாம்புஜயுக்மருக்ம வ்யாமோஹத:' என்று ஆழ்வான் பாடியபடி நீர் நித்யம் அச்யுதன் திருவடிகளில் ஸக்தர். உம்முடைய திருமேனியின் ஸ்மரணத்தில் எமக்கு நித்ய வ்யாமோஹம் வேண்டும்; எத்தனை ஆசிரியர்கள் பின்வந்தாலும் நீரே குருபரம்பரையின் நடுநாயகம். நித்யகாலமும், காலதத்வமுள்ள தனையும் நீரே யதித்தலைநாதர் என்று 'நித்யம் யதீந்த்ர' என்று சேர்த்துப் பொருள் கொள்ளவேண்டும்.

**தவ திவ்யவபு:ஸ்ம்ருதௌ**— அப்ரதீகாலம்பனருக்கு அர்ச்சிராதிகதி யுண்டென்பர். உம் திவ்ய சரணாலம்பனராயிருக்க அதுவும் லபிக்கும். இங்கு யோகத்தை (நிரந்தரபாவனையை) ப்ரார்த்திப்பதால் மனஸ்ஸு வாக்குக்கு முன் வந்துவிட்டது.

**ஸக்தம் மநோ பவது**— மனஸ்ஸுக்கு வ்யாமோஹம் நீங்காமலிருக்க வேண்டும்.

**வாக் அஸௌ**— இந்த என் வாக்கு; என் பொல்லா வாக்கு; தோஷகீர்த்தநத்தையே செய்துகொண்டு பாபத்தில் ஸக்தமான என்வாக்கு என்று ஓர்கருத்து; இப்போது உம் குணகீர்த்தநத்தில் ஸக்தமாகத்துதி பாடிக் கொண்டிருக்கும் இந்த என் வாக்கு.

**குணகீர்த்தநே**— 'தவ' என்பதை இங்கேயும் அந்வயித்துக்கொள்ள வேணும். முதலடியிலுள்ள திவ்யபதத்தின் ஸ்மரணத்தைக்கொண்டு இங்கும் 'உம்முடைய திவ்யகுணங்களைக் கீர்த்தநம் செய்வதில்' என்று பொருள் கொள்ளலாம். 'தைவீ ஸம்பத்து' என்று கீதையில் வர்ணித்த குணங்கள் திவ்யகுணங்கள். 'கீர்த்தநம்' என்கிறபதத்தால் பகவத்குண கீர்த்தநம்போல் பரமசுத்தியையும் அநுபவத்தையும் தருவதென்று பகவத் துல்யமான கௌரவத்தை ஸூசிக்கிறார். 'அஸௌ வாக்' என்று

சொல்லுவது இந்த என் நாக்கு என்று அபிநயத்தோடுகூடக் காட்டுவதை யும் குறிக்கும். ஸூதரிடம் ஸ்ரீபாகவதம் ச்ரவணம் செய்த சௌனக மஹர்ஷி 2-வது ஸ்கந்தம் 3-வது அத்யாயத்தில் "ஜிஹ்வா஽ஸதீ தார் துரிகேவ ஸூத ந சோபகாயத்யுருகாயகாதா:" என்று அவரிடம் கூறினார். 'ஓங்கி உலகளந்த உத்தமன்பேர்பாடி' என்று கோதை பாடியது. "விசக்ரமாணஸ் த்ரேதோருகாய:" என்று வேதம் டிண்டிமம்போல் உத்கோஷித்ததை ஸூசித்தது. 'உருகாயன்' என்பது அனேகம்பேர் களால் உச்சஸ்வரத்தில் ஆரவாரத்தோடு பாடப்படுபவனைச் சொல்லும். உலகமுழுவதும் தம் திருவடி முத்திரைபதியும்படி திருவடியை ஒத்தித் தந்தவர் த்ரிவிக்ரமர். உலகம் முழுவதும் அவர் திருவடியின் 'ஸ்வம்' என்று உலகமெங்கும் எப்பொருளிலும் முத்திரை வைத்துக்காட்டியது. "த்ரிவிக்ரமன் யசஸ் விஷயமான காதைகளை ஓங்கிமகிழ்ந்து பரமாதரத் துடன் பாடாத நாக்கு அஸதீ 'இலதெ'ன்றே சொல்லவேணும். ஸூத மஹர்ஷியே! அது (நாக்கு) ஸதீ, உளதாகக் காணப்படுகிறதே என்று ஒருவர் ஆக்ஷேபித்தால், அது ஸதீ-உளதேல், 'தார்துரிகா ஏவ ஸூத' அது தவளைநாக்கே, மநுஷ்யநாக்கல்ல என்று அறுதியிடலாம்" என்று அந்த ச்லோகத்தின் ரஸம். இந்த என்வாக்கு உம் குணகீர்த்தநத்தில் ஸக்தா பவது எப்பொழுதும் பற்றுடையதாய் இருந்து அதிலேயே வ்யாபரிக்கவேணும்.

**'க்ருத்யம் ச தாஸ்யகரணே து கரத்யவஸ்ய'**—இரண்டு கைகளின் செய்கை முழுவதும் உமக்குப்பணிவிடை செய்வதிலேயே மன்னியிருக்க வேண்டும். இங்கு 'து' என்பதற்கு 'ஏவ' என்று பொருள். 'ச' என்பது முன் இரண்டடிகளில் கூறின மநோவாக்குகள் போக மிகுந்ததைக் கூட்டுவது. ஸ்ரீபாகவதம் 9-வது ஸ்கந்தம், அம்பரீஷோபாக்யானத்தில், அம்பரீஷருடைய பகவன் நிஷ்டையை,

**"ஸ வை மந: க்ருஷ்ணபதார விந்தயோ:**
**வசாம்ஸி வைகுண்டகுணாநு வர்ணநே |**
**கரௌ ஹரேர் மந்திரமார்ஜநாதிஷு"**

என்று தொடங்கி மநோவாக்காயங்கள் மூன்றும் பகவானிடமே மன்னி வழுவிலாவடிமை செய்தன என்று வர்ணித்ததையும், தசமஸ்கந்தத்தில் 80—வது அத்யாயத்தில் குசேலோபாக்யானத்தொடக்கத்தில், "ஸா வாக் யயா தஸ்ய குணாந் க்ருணீதே, கரௌ ச தத்கர்மகரௌ மந: ச ஸ்மரேத்

வஸந்தம் ஸ்திரஜங்கமேஷு'' என்று வாக்காயமநங்களின் முக்ய க்ருத்யங்கள் எவை என்று வர்ணித்ததையும் இங்கே ஸ்வாமி நினைத்ததாகக் கொள்ளலாம். அங்கும் இங்கும் பதங்களின் ஒற்றுமையையும் பொருளின் ஒற்றுமையையும் நன்கு காண்கிறோம். அம்பரீஷோபாக்யானத்திலுள்ள இம்மூன்று கரணங்களின் க்ரமத்தை இங்கே முற்றிலும் அநுஸரித்துளது மநோ வாக்காயங்கள் என்று சொல்லும் ஸமுதாய நிர்தேசத்திற்குப் பொருந்தும். 'மந: பூர்வ: வாகுத்தர:' என்கிற க்ரமத்தையும் இது அநுஸரிப்பதாகும். 'ஸாவாக்' என்று குசேலோபாக்யானத்தில் கூறியதை இங்கே ''அஸௌ வாக்' என்று மாற்றி இருப்பது தம்முடைய இந்த நாக்கு என்று அபிநயித்துக்காட்டுவதற்காக. அங்கு ஸா—'அது' என்று பரோக்ஷநிர்தேசம். 'கரௌ ச தத்கர்மகரௌ' என்று பாகவதச்லோகத்தில் மிக்கரஸமுண்டு. பகவத்கர்மங்களைக்கரணம் செய்யும் கரங்களே (ஜீவந்தன்) உயிருடன் இருப்பவன் கரங்களாகும். இல்லையேல், சௌனகர் 2-வது ஸ்கந்தத்தில் முன்கூறிய ப்ரகரணத்தில் ''சாவௌகரௌ'' — அவை பிணத்தின் கரங்களே, உயிருள்ளவன் கரங்களல்ல' என்று நிந்தனைக்கு விஷயங்களாகும். இந்த ரஸத்தை 'க்ருத்யம் ச தாஸ்யகரணே' என்பதால் வ்யஞ்ஜநம் செய்கிறார். அதெங்ஙனமெனில் 'தாஸ்யகரணம் தான் க்ருத்யமாகும்; இல்லையேல் அது செய்கையேயாகாது; என்று வ்யாப்தியையும் க்ருத்யமென்பதற்கு லக்ஷணத்தையும் காட்டுவது ஸ்பஷ்டம். என்செய்கை முழுவதும் உம் தாஸ்யக்ருத்யமாகவே இருக்கவேணும் இங்கே கரணசப்தத்தைப்புநருக்தம்போலே ப்ரயோகித்திருப்பதில் தாஸ்ய கரணம் தான் க்ருத்யம் என்று அறுதி இடுவதோடு அடுத்த நான்காம் பாதத்திலுள்ள கரணத்ரயம் என்கிற பதத்தில் 'கரண' பதத்தை (பொறி) இந்த்ரியம் எனும் பொருளில் ப்ரயோகித்து, பகவான், ஆசார்யன் பாகவதர் இவர்களுக்கு தாஸ்யகரணம் செய்தால்தான் கரணங்களென்னும் இந்த்ரியங்கள் கரணங்களாகும்; இல்லையேல் இவை துஷ்கரணங்கள், அல்லது விகரணங்கள், அல்லது அகரணங்களாகும் என்பதையும் வ்யஞ்ஜநம் செய்கிறார்.

''வ்ருத்யந்தரேऽஸ்து விமுகம் கரணத்ரயம் ச'' முன்மூன்று பாதங்களிலும் மநோவாக்காயங்கள் உளதென்று கூறும் போக்யதையைப் பெறுவதற்கு யதிராஜன் விஷயமாக்வே நித்யமும் விநியோகிக்கப்படவேணும் என்பதை அந்வயமுறையில் காட்டிவிட்டு, அதை த்ருடப்படுத்துவதற்காக வ்யதிரேக முறையாகவும் இங்கே நான்காமடியில் ஓரே பதத்தால் மூன்றையும் சேர்த்து ஸங்க்ரஹித்துக்காட்டுகிறார். ''யத்ஸத்வே யத்ஸத்வம்'' என்பது அந்வயமுறை. 'யதபாவே, யதபாவ:' என்பது வ்யதிரேகமுறை.

யதிராஜபக்தி நிஷ்டையில் நித்யமும் அந்வயமிருந்தால் இவை மூன்றில் ஒன்றொன்றும் உளதாகும், என்று முதல் மூன்று பாதங்களிலும் காட்டிய அந்வயமுறை; அந்த நிஷ்டை இல்லையேல் இவை மூன்றும் இல்லனவே யாகும் என்று இந்நான்காமடியில் காட்டும் வ்யதிரேகமுறை. வ்ருத்யந்தரவிமுகத்வத்தை ப்ரார்த்திப்பதால், எம்பெருமானார் விஷயத்திலேயே இங்கேகூறும் மனோவ்ருத்தி, வாக்வ்ருத்தி, காயவ்ருத்தி இவை அபிமுகமாக இருக்கவேண்டுமென்றும், "யோக: சித்தவ்ருத்தி நிரோத:" என்று யோக ஸூத்ரத்தில் கூறிய லக்ஷணப்படி எம்பெருமானாரை உபாஸநம் செய்யும் யோகமாகுமிதுவென்றும் ஸூசிக்கிறார். அமாநித்வம் அதம்பித்வம் முதலிய இருபது ப்ரஹ்மஜ்ஞாந ஸாதநங்களை கீதை 13—வது அத்யாயத்தில் கணக்கிடுகையில் 'ஆசார்யோபாஸநம்' என்று ஆசார்யர் விஷயமானத்யாநத்தையும் ஸாதநமாகப்பரிகணநம் செய்தார். "தேவமிவ ஆசார்ய முபாஸீத" என்று இரண்டு தேவர்களையும், அதாவது ஆசார்யதேவரையும் பகவானெனும் தேவரையும் உபாஸிக்கவேண்டியதில் பகவானைப்போலவே ஆசார்யனையுமுபாஸிக்க வேணுமென்று ச்ருதி விதித்தது. ச்வேதாச்வதரோபநிஷத்தின் முடிவில் கடைசி மந்த்ரத்திற்கு முன் மந்த்ரத்தில் "தப: ப்ரபாவாத் தேவப்ரஸாதாத்" என்று, "பக்தியோகமெனும் தவத்தின் வலிமையாலும், தேவனுடைய கடாக்ஷத்தினாலும் ச்வேதாச்வதரர் ப்ரஹ்மஸாக்ஷாத்காரம் பெற்று ப்ரஹ்மவித்வானாகி மோக்ஷஸித்தியைப்பெற்றார்"என்று கூறிவிட்டு தேவப்ரஸாத மென்பதற்கு குருதேவன், ப்ரஹ்மமாகியதேவன் ஆகிய இரண்டு தேவர்களிடமும் துல்யமாய் பக்திசெய்யவேணுமென்றும், ஆசார்யனிடத்தில் தேவனிடத்திலேபோல அத்யுத்க்ருஷ்டமான பக்தி நிஷ்டையை அநுஷ்டித்து அவன் ப்ரஸாதத்தைப் பெற்றால் அம்மஹானுக்கு உபதேசிக்கப்பட்ட எல்லா விஷயங்களும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல ப்ரகாசிக்கும் என்றும் முடிவுமந்த்ரத்தில் இது பரமஸாரமென்றும் உபநிஷத்து உபஸம்ஹாரம்செய்தது."யஸ்யதேவே பராபக்தி:யதா தேவேகுரௌ ததா பராபக்தி: தஸ்ய மஹாத்மந: ஹ்யேதே கதிதா: அர்த்தா: ப்ரகாசந்தே" என்று உபநிஷத் மந்த்ரபதங்களுள்ள படியே அந்வயிப்பது உசிதமென்று பெரியோர் பணிக்கக்கேட்டுள்ளோம். இந்த அந்வயத்தில் முன் மந்த்ரத்தில் கூறிய தேவசப்தத்திற்கு ஆசார்யதேவரும் பொருள் என்பது கிடைப்பதால் ஜ்ஞாநஸித்திக்கும் மோக்ஷஸித்திக்கும் இருவர் கடாக்ஷமும் வேண்டுமென்பதும், 'தேவேகுரௌ' என்று ஸமாநாதிகரணமாக அபேதாந்வயத்தால் குருவைதேவனோடு அபிந்நமாக நினைக்கவேணுமென்றும் கிடைக்கிறது. ஆசார்ய பரம்பரையில் நித்யமும் நடுநாயகரான யதிராஜனெனும் நம் ஸித்தாந்த தீர்த்தகரரை உபாஸிப்பது ப்ரஹ்மோபாஸநத்திற்கு உபஷ்டம்பகமாகுமேதவிர விரோதமாகாது.

अष्टाक्षराख्यमनुराजपदत्रयार्थ -
निष्ठां ममाऽत्र वितराद्य यतीन्द्र नाथ।
शिष्टाग्रगण्यजनसेव्यभवत्पदाब्जे
हृष्टाऽस्तु नित्यमनुभूय ममाऽस्य बुद्धिः॥५॥

5. அஷ்டாக்ஷராக்ய மநுராஜ பதத்ரயார்த்த
நிஷ்டாம் மமாத்ர விதராத்யயதீந்த்ர நாத।
சிஷ்டாக்ரகண்ய ஜநஸேவ்ய பவத்பதாப்ஜே
ஹ்ருஷ்டாஸ்து நித்யமநுபூய மமாஸ்ய புத்தி:॥

பதவுரை:—யதீந்த்ர—யதிகளுக்குள் ச்ரேஷ்டரே, நாத—(ஸ்ரீவைஷ்ணவகுலத்திற்கு) ஸ்வாமியே, [(யதீந்த்ரநாத) என்று ஒரே பதமாயின், யதிச்ரேஷ்டர்களுக்குத்தலைவரே!] அஷ்டாக்ஷரா ......நிஷ்டாம்—எட்டெழுத்து என்கிற பெயரையுடைய ச்ரேஷ்ட மந்திரத்திலுள்ள மூன்றுபதங்களின் பொருள்களில் வழுவாத நிஷ்டையை, மம—எனக்கு, அத்ர—இங்கேயே, அத்ய—இப்பொழுதே, [ஆத்ய என்று பதம்பிரித்தால் "ப்ராசீம் பதவீம் யதிராஜ த்ருஷ்டாம்" என்றபடி இந்தப்ராசீநமான தர்சனத்தை மஹர்ஷியாக ஸாக்ஷாத்கரித்தவரான முதல்வரே! என்றும், நாதோபக்ஞமான இந்ததர்சனத்தை, 'த்ராதம் ஸம்யக்யதீந்த்ரை:' என்று 'அகில தம:கர்சந' மாக ஆகும்படி நன்கு பரிரக்ஷணம் செய்த ப்ரதாநரே! என்றும் பொருள்] விதர—தாநம் செய்யவேண்டும், அஸ்ய மம—இந்த (சிஷ்டாக்ரகண்யரல்லாத) என்னுடைய, புத்தி:—புத்தி, சிஷ்டாக்ர.... பதாப்ஜே—சிஷ்டர்களில் உயர்ந்தவராக மதிக்கப்படுமவரால் நெருங்கி ஸேவிக்கத்தக்க உம்முடைய தாமரைத் திருவடி இணையை, நித்யம் அநுபூய—எக்காலமும் அநுபவித்தநுபவித்து, நித்யம் ஹ்ருஷ்டா அஸ்து—ஓயாமல் மகிழ்ச்சியோடு இருக்கவேணும்.

(விசேஷவுரை)—அஷ்டாக்ஷரமென்கிற ஆக்யை (பெயர்) உடையது மூலமந்த்ரம். மந்த்ரராஜமென்பது ந்ருஸிம்மன் விஷயமான மந்த்ர ச்லோகத்திற்கு ரூடமானபெயர். இங்கே மந்த்ரராஜம் என்று ப்ரயோ

கித்தால் அந்தப் பெயரை உடைய ந்ருஸிம்ஹ மந்திரத்தைக் குறிப்பதாக ஆகும். இங்கே கருத்திலுள்ள அஷ்டாக்ஷரமென்று பெயரை உடைய மூலமந்திரத்தைக் குறிக்காமல் போய்விடும். அதற்காக 'மந்த்ரம்' என்னும் பொருளையுமுடையதான 'மநு' சப்தத்தை ப்ரயோகித்து 'மநுராஜ' என்று படிக்கிறார். மந்த்ரங்களில் இது ராஜாவான (ச்ரேஷ்டமான) மந்த்ரமென்பதையும், ராஜத்வமென்கிற ச்ரைஷ்ட்யம் இதில் புஷ்கலமென்பதையும் இங்கேயுள்ள மநுராஜ சப்தம் விளக்குகிறது. "வைவஸ்வதோ மநுர்நாம மாநநீயோ மநீஷிணாம்! ஆஸீந்மஹீக்ஷிதாமாத்ய: ப்ரணவ: சந்தஸாமிவ" என்கிற ரகுவம்சம் முதல் ஸர்க்க ச்லோகத்தில் "விவஸ்வான் என்ற ஸூர்யனுடைய குமாரரான மநுராஜாக்களுள் முதல்வர் மூலபூதர். எப்படி ப்ரணவம் வேதங்களுக்கெல்லாம் மூலமான ஆதியோ, அப்படியே அந்த மநு சிஷ்டர்களான மநீஷிகளுக்கு மாநநீயரான சிஷ்டாக்ரகண்யர். மேலும் அவர் சிஷ்டாக்ரகண்யர்களான மநீஷிகளால் ஸேவ்யர்" என்று காளிதாஸர் கூறியது இங்கே ஸ்வாமி நெஞ்சிலுளது. இந்த 'மநுராஜம்' மநுராஜரைப்போல ஆத்யமான மூலமந்த்ரம். மநுராஜருடைய ஸ்ம்ருதித்தொடக்கத்தில், மஹர்ஷிகள்கூடி அவரை ஸேவித்து, பரிப்ரச்நம் பண்ணியதில் அவர், "ஆபோ நாரா இதி ப்ரோக்தா: ஆபோவை நரஸூநவ: தாயதஸ்யாயநம் பூர்வம் தேந நாராயண:ஸ்ம்ருத:" "ஸோபித்யாய சரீராத்ஸ்வாத் ஸிஸ்ருக்ஷுர் விவிதா: ப்ரஜா: அப ஏவஸஸர்ஜாதௌ தாஸு வீர்யமவாஸ்ருஜத்" என்ற ச்லோகங்களால் நாராயண சப்தத்தின் வ்யுத்பத்தியையும், "ஆதிகாரணமான நாராயணன் அநேகவிதமான ப்ரஜைகளை ஸ்ருஷ்டிக்கவிரும்பி, ஸங்கல்பமாத்ரத்தாலே முதலில் தன் சரீரத்திலிருந்து அப்புக்களை ஸ்ருஷ்டித்தார்" என்று நாராயணன் தன் சரீரத்திலிருந்து சிதசித்துக்களை ஸ்ருஷ்டிக்கிறார் என்ற ஸித்தாந்தத்தையும் கூறினார். பகவானாகிய நாராயணன் தம்முடைய சரீரத்திலிருந்தே ஜகத்தை ஸ்ருஷ்டிக்க ஸங்கல்பித்து ஸ்ருஷ்டிக்கிறார் என்னும் நமது ஸித்தாந்தத்தை மநு ஸ்பஷ்டமாகக் கூறியதை ஸூத்ரகாரரும் ப்ரக்ருத்யதிகரணத்தில் (முதலத்யாய முடிவில்) 'அபித்யோபதேசாச்ச' என்கிற ஸூத்ரத்தால் பராமர்சித்து ஹேதுவாக அமைத்தாரென்று கொள்ளலாம். மற்ற ஸ்ருஷ்டிவாக்யங்களில், 'ஐக்ஷத' 'அகாமயத' முதலிய க்ரியாபதங்களால் ஸங்கல்பத்தைப் பேசியுளது. ஸூத்ரகாரர் படித்த அபித்யாசப்தம் இந்த மநுச்லோகத்தில்தான் உளது. இது ஸூத்ரகாரர் ஹ்ருதயத்தில் அபித்யாஸூத்ரத்தில் இருந்திருப்பது ஸ்வரஸம். ராமசந்த்ரருடைய மநுஸ்ம்ருதி வ்யாக்யானத்தில், "அப்புக்கள் என்கிற நரஸூநுக்களான நாரங்கள் நரனாகிய பரமாத்மாவினிடமிருந்து உண்டாகும் ஜீவஸமூஹங்கள்" என்று கூறியுளது. திருவஷ்டாக்ஷர மந்த்ரத்தின் பொருளை

விவரிக்கும் ஸ்ரீவைஷ்ணவ ரஹஸ்யக்ரந்தங்களில் இந்த நாராயணபத வ்யுத்பத்தி பரமான மநுச்லோகம் முக்யப்ரமாணமாக உதாஹரிக்கப் பட்டிருக்கிறது. மநுராஜர் திருவஷ்டாக்ஷரத்தின் மூன்றுபதங்களில் நாராயணபதத்திற்குக் காட்டிய வ்யுத்பத்திப் பொருளையும், 'மநுராஜ பதத்ரயார்த்த' என்னுமதில் ஸ்வாமி நினைப்பதாகவும் கொள்ளலாம். மநுராஜர் காட்டிய திருவஷ்டாக்ஷர பதப்பொருள் என்று பொருள் கொள்ளலாம். பதத்ரயநிஷ்டா என்றுமட்டும் கூறினுல் கேவலம் அர்த்தம் தெரியாமல் சப்தமாத்ரநிஷ்டர் என்று மட்டும் குறிப்பதாகும். அது எவருக்கும் எளிதாகும். "ஆம்நாயோக்தம் பதமவயதாம் ஸார்த்த மாசார்யதத்தம்" என்கிறபடி ஆசார்யோபதேசத்தால் பதங்களின் பொருளின் அறிவையும்பெற்று அதிலேயே ஆயுள் முழுதும் வழுவாத நிலையான நிஷ்டையையும் எனக்கு அருளவேண்டுமென்று ப்ரார்த்திக் கிருர். இங்கு பதமென்பதற்கு வாக்யமென்றும் அபிப்ரேதம். ஒவ்வொரு பதமும் ஒவ்வொரு வாக்யமாகக்கொண்டு மூன்று வாக்யங்களையும் சேர்த்து ஒரு வாக்யைகவாக்யமான மஹாவாக்யமாகவும் யோஜனை உண்டு. வாக்யைகவாக்யமாகப் பொருள் காட்டியதில் கண்டவாக்யங்களில் ஒவ் வொன்றையும் ஓர்பதமென்று மீமாம்ஸகர் வ்யவஹரிப்பர். மீமாம்ஸையின் 5-வது அத்யாயத்திற்கு க்ரமாத்யாயமென்று பெயர். ச்ருதி, அர்த்தம், பாடம் முதலிய 6-க்ரமவிஷயமான ப்ரமாணங்கள் அங்கே கூறப்பட் டுள்ளதில், இங்கே 'பதத்ரயார்த்த' என்னுமிடத்தில் 'பதம்' என்பதால் பதபாடம் என்னும் பொருளைக்கொண்டு (3-பதங்களின்) பாடக்ரமத்தை யும், 'அர்த்த' என்பதால் அர்த்தக்ரமத்தையும், 'ஆக்யை' என்பதால் ச்ருதியாலேயே தம் கண்டத்தினுல் ஸ்பஷ்டமாக க்ரமத்தை ஆக்யாநம் செய்யும் ச்ருதிக்ரமத்தையும் ஸூசிப்பதாகக்கொள்ளலாம். திருமந்த்ரத்தின் 3 பதங்களின் பொருள் வர்ணனத்தில் பதபாடக்ரமத்தையநுஸரிப்பது முண்டு. அதைமாற்றி அர்த்த க்ரமத்தையநுஸரிப்பது முண்டு. இந்த ச்லோகத்தில் முன் பாதியில் நாராயணநிஷ்டையை திருமந்த்ரார்த்தத்தின் நித்யாநுஸந்தான மூலமாக அளிக்கவேணுமென்று எம்பெருமானுரை ஆசார்யனுக வரித்து ப்ரார்த்தித்துவிட்டு, பிறகு ஆசார்யரான எம்பெரு மானுருடைய திருவடி இணையில் ஹர்ஷத்தோடு அநுபவத்தை ப்ரார்த் திக்கிருர். "பரீக்ஷ்ய லோகந் கர்மசிதாந்" என்கிற முண்டகச்ருதியில், 'ஸமித்பாணியாய் ப்ரஹ்ம நிஷ்டரான ச்ரோத்ரியரான குருவையே அபிகமநம்பண்ணி, அவரிடம் தாத்விகமாக ப்ரஹ்மவித்யையை ச்ரவணம் செய்து நன்கு பெறவேணும்" என்று கூறியுள்ள க்ரமத்தில் ஆசார்யோ பாஸநம் முந்தியும், அவரிடமிருந்து ப்ரஹ்ம வித்யாநிஷ்டைபெறுவது பின்புமாகுமெனும் க்ரமத்தை முன்பின்னுகமாற்றியுளது போல் காண்கிறது.

நன்கு பராமர்சித்தால் இங்கு அப்படியில்லை என்று தெளியலாம். திருமந்த்ரார்த்தத்தைத் தெளியச்செய்து ப்ரஹ்ம வித்யையாகிய அதில் எனக்கு ஸந்ததமும் நிஷ்டையை தேவரீர் (விதிப்படி) கொடுக்கவேண்டு மென்று ஸாதிப்பதாலேயே முன்பே குருவை அபிகமநம்செய்து வித்யா தாந ப்ரார்த்தநம் செய்ததாகத் தெளிவாகிறது. அஷ்டாக்ஷரபதத்ர யார்த்தம் ப்ரஹ்மவித்யையேயாகும். சாரீரகம் நான்கு அத்யாயங்களும் இம்மந்த்ரத்தினுடையவும், அதிலும நாராயணபதத்தினுடையவும் பொருளில் அடங்கியுளதென்று ரஹஸ்ய க்ரந்தங்களில், ''காரணத்வம் அபாத்யத்வம் உபாயத்வம் உபேயதா இதிசாரீரக ப்ரோக்தம் இஹசாபி வ்யவஸ்திதம்'' என்று விளக்கப்பட்டிருக்கிறது. மநுராஜர் தம் ஸ்ம்ருதித் தொடக்கத்திலேயே, 'நாராயணனே தன் சரீரவிசிஷ்டனாய் ஜகத்திற்குக் காரணமாகிறான் என்பதைக்காட்டினார் என்கிறதை இங்கே 'மநுராஜ' என்று ஸூசித்ததை முன்பே காட்டியுள்ளோம்.

நாராயண நிஷ்டை ஸித்திக்கையில் அவருக்குச் செய்யும் கைங்கர் யாநந்தம் ததபிமதபர்யந்தமாகி பாகவத கைங்கர்யத்தில் அதிலும் பக வானைப்போல முக்தியிலும் நித்யசேஷித்வத்தையுடைய ஆசார்யனிடத்தில் புருஷார்த்தகாஷ்டையாக அதாவது எல்லையற்ற ஹர்ஷமாக பலத்தில் ஸித்திப்பதை இங்கே இரண்டாம்பாதியில் காட்டப்பட்டுள்ளது. முன் பாதியில் பகவந்நிஷ்டையை ப்ரார்த்தித்து, பின்பாதியில் ஆசார்யனிடம் நித்யநிஷ்டையை ப்ரார்த்திப்பதில், 'நித்யமும் உம்முடைய தாமரைத் திருவடியிணையை அநுபவித்து அநுபவித்து என்னுடைய புத்தி மிக்க ஹர்ஷத்தோடுகூடி இருக்கவேணும்' என்று ப்ரார்த்திப்பதால் ஆநந்த மெனும் புருஷார்த்தத்தின் அதிகப்பெருக்கை விளக்குகிறார். நாதமுனிகள் விஷயத்தில் ஆளவந்தார் ஸ்தோத்ரரத்நத்தில் 2-வது ச்லோகத்தில் ''அத்ர பரத்ரசாபி நித்யம் யதீயசரணௌ சரணம் மதீயம்'' [இந்த விபூதியில் வஸிக்கையிலும் இந்த தேஹத்தைவிட்டு நித்யவிபூதியில் சேர்ப்பிக்கப்பட்டு அங்கே அந்தக்காலமும் வஸிக்கையிலும் ஸ்ரீமந்நாதமுனிகளுடைய திருவடி களே எனக்கு சரணமாகும்] என்று ஸாதித்த ரீதியாக ஈச்வரதேவனைப் போலே ஆசார்யதேவனையும் உபாஸிக்கவேண்டுமென்று இரண்டுதேவர் களுக்கும் உள்ள ஸத்ருசமான அத்புதமஹிமைகளை ''அஜ்ஞாநத்வாந்தரோ தாத், அகபரிஹரணாத், ஆத்மஸாம்யாவஹத்வாத், ஜந்மப்ரத்வம்ஸி ஜந்ம ப்ரதகரிமதயா, திவ்யத்ருஷ்டிப்ரபாவாத், நிஷ்ப்ரத்யூஹாந்ருசம்ஸ்யாத், நியதரஸதயா, நித்யசேஷித்வயோகாத் ஆசார்ய: ஸத்பிரப்ரத்யுபகரணதியா தேவவத் ஸ்யாதுபாஸ்ய:'' என்று ஸ்ரீதேசிகன் ஸாதித்த ச்லோகம் ஸ்வாமியின் வ்யாக்யாநங்களில் உதாஹரிக்கப்பட்டுள்ளது.

எம்பெருமானாரிடத்தில் இவர் ஸாக்ஷாத்தாக ஆச்ரயிக்காவிடிலும், "யத்பதாம் போருஹத்யாந வித்வஸ்தாசேஷகல்மஷ:, வஸ்துதாமுபயாதோஹம் யாமுநேயம் நமாமி தம்" என்கிற கீதாபாஷ்ய மங்கள ச்லோக வ்யாக்யானத்தின் அவதாரிகையில் த்ரோணாச்சாரியரிடம் ஏகலவ்யன்போல் ஸ்ரீபாஷ்யகாரர் ஆளவந்தார் திருவடிகளை த்யாநம்செய்துகொண்டே அவருக்கு சிஷ்யராகி வஸ்துவானதாக அநுஸந்தித்ததாகக் காட்டியிருப்பதுபோல், எம்பெருமானார் விஷயத்தில் இவருக்கு சிஷ்யத்வாபிமாநம். "பத்யு: ஸம்யமிநாம் ப்ரணம்ய சரணௌ தத்பாத கோடீரயோ: ஸம்பந்தேந ஸமித்யமான விபவாந் தந்யாம்ஸ்தாந்யாந் குரூந்" என்று ந்யாய பரிசுத்தி மங்களச்லோகத்தில், எம்பெருமானார் திருமுடி ஸம்பந்தத்தால் அவர்க்குமுன் ஆசார்யர்கள் தந்யரானார் என்றும், அவருக்குப்பின்னுள்ள ஆசார்யர்கள் அவருடைய திருவடிஸம்பந்தத்தால் தந்யரானார் என்றும் ஸாதித்திருப்பது ஸ்ரீவைஷ்ணவ க்ரந்தங்களில் ப்ரசித்தமாயுளது. இவருக்கு முன்பும் பின்பும் ஆசாரியர்கள் கணக்கு எத்தனையாகிலுமிவர் எக்காலத்திலும் நடுநாயகமாகவே இருப்பவர். "அமுநா தபநாதிசாயிபூம்நா யதிராஜேந நிபத்தநாயகஸ்ரீ: மஹதீ குருபங்க்திஹாரயஷ்டி: விபுதாநாம் ஹ்ருதயங்கமா விபாதி" என்கிற யதிராஜ ஸப்ததிச்லோகத்தை இங்கு நினைக்க வேணும். இவருடைய திவ்யாக்ஞை அங்குமிங்கும் செல்லுமென்பர். இவர் விஷயத்தில் எத்தனை பூஜித்தாலும் புகழ்ந்தாலும் மிகையாகாது. 'சிஷ்டாக்ரகண்யஜநஸேவ்ய பவத்பதாப்ஜே ஹ்ருஷ்டாஸ்து நித்யமநுபூய மமாஸ்யபுத்தி:" என்றவிடத்தில் "அஸ்யமம" என்றதால் தாம் சிஷ்டரல்லவென்றும், அதிலும் அக்ரகண்யரல்லரென்றும் நைச்யாநுஸந்தானம் வ்யஞ்ஜிதம்.

अल्पापि मे न भवदीय पदाब्ज भक्तिः
शब्दादिभोगरुचिरन्वहमेधते हा ।
मत्पापमेव हि निदानममुष्य नान्यत्
तद्वारयार्य यतिराज दयैकसिन्धो ॥ ६ ॥

6. அல்பாபி மே ந பவதீயபதாப்ஜபக்தி:
சப்தாதி போகருசிரந்வஹமேததே ஹா ।
மத்பாபமேவ ஹி நிதாநமமுஷ்ய நாந்யத்
தத்வாரயார்ய யதிராஜ தயைகஸிந்தோ ॥

பதவுரை:—தயைகஸிந்தோ—கருணை ஒன்றே நிரம்பிய ஸமுத்ரமே, ஆர்ய—உத்தமாசார்யரே!, யதிராஜ—யதித்தலைநாதனே,

மே—எனக்கு, பவதீய பதாப்ஜ பக்தி:—தேவரீருடைய திருவடித் தாமரைகளில் பக்தி என்பது, அல்பாபி ந—கொஞ்சம்கூட இல்லை, சப்தாதி போக ருசி:—சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம், ஆகிய புலன் விஷயாநுபவங்களில் ஆசை, அந்வஹம்—தினந்தோறும், ஏததே—வளர்கிறது, ஹா—என் செய்வேன் பாவியேன், அமுஷ்ய—இதற்கு, மத்பாபமேவ—என்பாமம்தான், நிதாநம்—மூலகாரணம்; அந்யத் ந—மற்றோர் காரணம் கிடையாது; தத்—அதை வாரய—தேவரீர் தடுத்துத்தகையவேணும்.

விசேஷவுரை:—"பகவானெனும் தேவனிடத்தில் எல்லைகடந்த உத்க்ருஷ்டமான பக்தி இருப்பதுபோல குருவெனும் தேவனிடமும் அப்படியே எல்லைகடந்த பரபக்தி இருப்பவருக்குத்தான் ஆசார்யனுபதேசிக்கும் தத்வார்த்தங்கள் ப்ரகாசிக்கும்" என்று தகுந்த சிஷ்யனின் அதிகாரத்தில் ஆசார்யரிடமும் பரபக்தியை முக்கியமான அம்சமாகக்கூறியுளது. பூர்வமீமாம்ஸையில் 6—வது அத்யாயத்திற்கு அதிகாராத்யாயமென்று பெயர். இங்கே தொடக்கத்திலேயே அல்பமேனும் தமக்கு ஆசார்யர் திருவடியில் பக்தி கிடையவே கிடையாது என்று மறுதளிப்பதால் தமக்கு சிஷ்யத்வாதிகாரமே கிடையாது என்று கூறிக்கொண்டு இந்த 6—வது ச்லோகத்தில் பூர்வமீமாம்ஸையின் அதிகாராத்யாயத்தை ஸூசிக்கிறார். ஆனால் ப்ரஹ்மவித்யாவிஷயத்தில் சிஷ்யத்வாதிகாரத்தில் குறைவுகள் இருந்தாலும் அவை ஆசார்யன் கருணையாலும், பிராட்டி பகவான் இவர்களின் கருணையாலும் யதேஷ்டமாய் திருத்தல்கள் செய்து அதிகாரக் குறைவுகளை நீக்கி பூர்த்தி செய்வதுண்டு. கர்மகாண்டத்தில் அதிகாரம் முதலியனதைப்பற்றிய விதிகளும், இந்த்ரியங்களின் துச்சரணங்களுக்கு ஏற்பட்ட தண்டனை விதிகளும் தயைக்கு இடம் கொடாமல் மிகவும் கடினமாகவேயுள்ளன. தவறுதல்களுக்கு மன்னிப்புக்காக ஏற்படும் ப்ராயச்சித்தங்கள் மிகக்கடினமாயிருக்கும் "யதி க்வசந நிஷ்க்ருதி: பவதி ஸாபி தோஷாவிலா, ததித்தமகதௌ மயி ப்ரதிவிதாநமாதீயதாம், ஸ்வபுத்தி பரிகல்பிதம் கிமபி ரங்கதுர்ய த்வயா" என்று அபீதிஸ்தவத்தில் ஸாதித்தபடி ப்ராயச்சிதங்கள் செய்வதிலும் லோபங்கள் ப்ரஸக்தமாய் அதற்கு ப்ராயசித்தம், அதில் லோபங்களுக்கு வேறு ப்ராயச்சித்தம், என்று ப்ராயச்சித்த பரம்பரைகள் அநவஸ்திதமாய் நீளும். தயை என்பது ஈச்வரன் பிராட்டி, ஆசார்யர், முதலிய அதிகாரி புருஷர்களின் திருவுள்ளத்தில் இரக்கமெனும் ஜ்ஞாநமுண்டாகி செய்தகுற்றங்களுக்கு ஈச்வரன் திருவுள்ளமுகந்து தன் க்ஷமையால் மன்னித்துவிடுகிறது, என்கிற ஓர் ஜ்ஞாந விசேஷமே; மிகப்ரயாஸத்தோடு செய்யும்படியான ப்ராயச்சித்தமெனும்

க்ருதிகளாலேற்படும் பாபக்கழிவை செய்விக்கின்றதால், தயாசதகத்தில் இந்த தயையை 'நிஷ்க்ருதிராத்யா' என்று க்ருதியல்லாத க்ஞாநரூப மான ப்ராயச்சித்தம் என்று கூறப்பட்டது. ப்ராயச்சித்தம் செய்யும் கார்யத்தை மேலதிகாரிகளின் தயை செய்து விடுகிறது; இதைக்காட்ட 'தயைகஸிந்தோ' என்று, கூரத்தாழ்வானருளிய யதிராஜன் தனி யன் ச்லோகத்தின் பதத்தையே இங்கே காட்டிக்கொண்டு ப்ரார்த்தனையை அமைத்துளார். ''அநுக்ரஹமயீம் வந்தே நித்யமக்ஞாதநிக்ரஹாம்'' என்றபடி புருஷகாராதிகாரமுள்ள தாயாருக்கும், தாய்போன்ற வாத்ஸல்ய முடைய ஆசார்யர்களுக்கும் தயை ஒன்றே ஸமுத்ரமாகப் பெருகியுள்ளது. 'பாபாநாம் வா சுபாநாம் வா வதார்ஹாணும் ப்லவங்கம கார்யம் கருண மார்யேண ந கச்சிந்நாபராத்யதி' என்று பிராட்டி திருவடியிடம் ராக்ஷஸி கள் விஷயத்தில் மன்னிப்புசிபார்சு செய்ததில்; 'அவர்கள் எப்படி இருந்தாலென்ன, நீர் ஆர்யரல்லவோ' என்று அங்கு உபயோகித்த ஆர்யபதத்தை இங்கேயும் ப்ரயோகிக்கிறுர். ந பக்திமான் த்வச்சரணுர விந்தே' என்று பகவான் விஷயத்தில் ஆளவந்தார் ஸாதித்ததை இங்கே யதிராஜர் விஷயத்தில் ஸாதிக்கிறுர்.

**சப்தாதிபோக ருசிரந்வஹ மேததே ஹா'**— சிற்றின்ப விஷயங்களை அநுபவிக்க வேண்டுமென்ற அவா ஒவ்வொரு நாளும் மேல்மேலும் கடலெனப்பெருகிக் கொண்டேயிருக்கிறது. இப்படி விரோதி ருசியின் பெருக்கு அபரிமிதமாயிருக்கையில் தேவரீரிடம் பக்தியெனும் இன்பரஸம் எப்படிக்கைகூடும்? உம் திருவடியில் பக்தியென்னும் நிஷ்டைக்கு பகவந்நிஷ்டைக்குப்போல் சமம், தமம், விஷயரஸ உபரதி முத லிய குணங்கள் இருந்தால்தான் அதிகாரமுண்டு. ''ஸத்புத்தி: ஸாதுஸேவீ ஸமுசிதசரித: தத்வபோதாபிலாஷீ சுச்ரூஷு: த்யக்தமான: ப்ரணிபதநபர: ப்ரச்நகாலப்ரதீக்ஷ: சாந்தோ தாந்த: திதிக்ஷு: சரண முபகத: சாஸ்த்ர விச்வாஸசாலீ சிஷ்ய: ப்ராப்த: பரீக்ஷாம் க்ருதவிதபிமதம் தத்வத: சிக்ஷணீய:'' என்கிற ச்லோகத்தில் சிஷ்யத்வாதிகாரத்திற்கு லக்ஷணங்கள் கூறப்பட்டுள. (இந்த ந்யாஸதிலக ச்லோகம் ஸ்வாமியால் சிஷ்யலக்ஷணமாக உதா ஹரிக்கப்பட்டுள்ளது. இந்த்ரிய விஷயங்களில் பற்று அடியோடு அறுவது தானே சமதம குணங்களாகும். அதிகாரமேயில்லாதவன் எப்படி உம் திருவடியில் நிரந்தர நிஷ்டையில் இறங்கமுடியும். 'ஹா' என்று நைராச்யத்தையும் நிர்வேதத்தையும் கூக்குரலிட்டுக்காட்டுகிறுர்.

**'மத்பாபமேவ ஹி நிதாநமமுஷ்ய'**— என் ஆத்மாவிற்கு வந்திருக்குமிந்த சிற்றின்ப ஆசை எனும் மஹாரோகத்திற்கு என்ன மருந்து என்று தேடவேணும். வ்யாதிக்கு மருந்து தேடுவதற்கு முன் அதற்கு மூல

காரணமான 'நிதாநம்' என்னவென்று அறியவேணும். இந்த ஆத்ம ரோகத்திற்கு நிதாநத்தைப் பராமர்சிக்கையில் என்னுடைய மிகுந்த பாபமே என்று தெளிகிறது; வேறொருகாரணமுமில்லை. 'தத்வா ரய' இந்த பாவத்தைக் கழிக்க எளியமார்க்கம் தேவரீரிடமே இருக்கிறது. அதற்கு வெளியே போகவேண்டியதில்லை. பாபமென்பது என்ன? என் கொடிய செய்கைகளால் என் மீது உண்டான ஈச்வரகோபம். அவன் மன்னித்தால் போய்விடும். அதற்கு அவன் வரையிலும் போக வேண்டியதில்லை. தேவரீருக்கு அவன் மிகவும் வசப்பட்டவன். உம்முடைய கடாக்ஷம் எவர்பேரில் விழுந்து உம்முடைய ஸம்பந்தம் ஏற்படுகிறதோ அவன் மீது அவன் கடாக்ஷமும் கூட விழுந்து அந்தப் பாபங்களைப் போக்கும். ஆக அவனுடைய கோபம் தணிந்து இந்த ஆத்மரோகம் தீர்ந்துவிடும். இப்படி என் விரோதியான பாபத்தை தேவரீரே என்னை அணுகாமல் தடுத்துத் தீர்த்துவிடவேணும். கீதையில் "இந்த்ரியங்கள் நம்முடைய க்ஞானத்தை கொண்டுபோகும் வழிப்பறிக் கொள்ளைக்கார ரான பரிபந்திகள், அவர்கள்வசத்தில் அகப்படாமலிருப்பதற்கு பகவானுடைய பாதுகாப்பைக்கோறி அவன் அவர்களுக்குத் தம் அதிகாரி புருஷர்கள்மூலமாய் வேண்டிய பாதுகாப்பைச்செய்விக்கும்படி ப்ரார்த்தித்துக் கொள்ளவேணும்" என்பதை, "**இந்த்ரியஸ்யேந்த்ரியஸ்யார்த்தே ராகத் வேஷௌ வ்யவஸ்திதௌ, தயோர்ந வசமாகச்சேத் தௌ ஹ்யஸ்ய பரிபந்திநௌ" "யததோஹ்யபி கௌந்தேய புருஷஸ்ய விபச்சித: இந்த்ரியாணி ப்ரமாதீநி ஹரந்தி ப்ரஸபம் மந:, தாநிஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர:**" என்ற ச்லோகங்களில் கூறியுள்ளது. திருடர்கள் கொள்ளையடிக்காமல் காப்பாற்றவேண்டியது ராஜாவும், அவனைச்சார்ந்த அதிகாரிபுருஷர்களும். காப்பாற்றும்பாரம் அவர்களுடையது. '**காமாதிதோஷஹரம் ஆத்மபதாச்ரிதாநாம்**' என்று முதல்ச்லோகத்தின் மூன்றும் அடியிலேயே கூறியதை இங்கே நினைவூட்டுகிறார். '**அகபரிஹரணத்**' என்று பாபங்களைப் போக்குவது பகவானென்றும், தேவனுக்கும் குருவெனும் தேவனுக்கும் பொதுவான அதிகாரம் என்றும் கூறப்பட்டதையுமிங்கே நினைக்கவேணும்.

**वृत्त्या पशुर्नरवपुस्त्वहमीदृशोपि**
**श्रुत्यादिसिद्धनिखिलात्मगुणाश्रयोऽयम् ।**
**इत्यादरेण कृतिनोपि मिथः प्रवक्तुं**
**अद्यापि वञ्चनपरोऽत्र यतीन्द्र वर्ते ॥ ७॥**

**7. வ்ருத்யா பசுர் நரவபுஸ்த்வஹமீத்ருசோபி**
**ச்ருத்யாதிஸித்த நிகிலாத்மகுணாச்ரயோऽயம் ।**
**இத்யாதரேண க்ருதிநோபி மித: ப்ரவக்தும்**
**அத்யாபி வஞ்சநபரோऽத்ர யதீந்த்ர! வர்த்தே ॥**

பதவுரை:—யதீந்த்ர—யதிகட்கிறைவரே, அஹம் து — நானோ வென்றால், வ்ருத்யா—நடத்தையினால், ஸீலத்தால், பசு:—ஜ்ஞான மில்லாத மிருகம் போல் வர்த்திப்பவனாயிருக்கிறேன். நரவபு:— (நடத்தையால் பசு) ஆகாரத்தால் (சரீரத்தால்) மநுஷ்யவடிவா யிருக்கிறேன். ஈத்ருஸோபி—தேஹத்தால் மநுஷ்யஸாத்ருச்யமும் சரீரத்தால் ம்ருகஸாத்ருச்யமும் பொருந்திய ஓர் விசித்ர ஸங்கர ஜந்துவாயிருந்தும், துர்லபமநுஷ்யதேஹம்பெற்றும், இப்படி சாஸ்த்ரவச்யதையில்லாத பசுதுல்யனாய் உண்மையிலிருந்தும், அயம்—இவர் (எம்பெருமானாராசார்ய பரம்பரை ஸிம்ஹாஸனத் தில் வீற்றிருக்குமிவர்) ச்ருத்யாதிஸித்தநிகிலாத்மகுணாச்ரயோடம் இதி- ஸதாசார்யர்களுக்கு நியதமாயிருக்கவேண்டியதாக ச்ருதிஸ்ம்ருதி ஸதாசாரங்களால் ஸித்தமாயேற்பட்டுள்ள (சமதமாதி) ஆத்ம குணங்கள் யாவற்றுக்கும் நித்யம இருப்பிடமான ஆச்ரயபூத ரென்று, க்ருத்நோபி—என்னை ஆச்ரயித்து என்னைச்சுற்றியிருக் கும் ஜ்ஞானாதிபூர்ணரான அக்ரகண்யர்களும், ஆதரேண—மிக்க பக்தியோடும் அன்போடும், மித:—ஒருவர்க்கொருவர் ரஹஸ்யமாய், ப்ரவக்தும்—விஸ்தாரமாய் என்னைப்புகழ்ந்து பேசுவிக்கும்படியாக அத்தனை வஞ்சனையிலேயே ஆழ்ந்து ஏமாற்றுவதையே வ்ருத்தி யாகக்கொண்டு, அத்ர—இந்தப் பாவனபுண்யரங்கக்ஷேத்ரத்தில், உம் முடைய ஆசார்யபீடஸ்தானத்தில இருக்கையில், அத்யாபி— பரமஹம்ஸபரிவ்ராஜக ஆச்ரமத்தைப்பரிக்ரஹித்து இந்தஸ்தானத்தில் அபிஷிக்தனாயிருக்கும் இப்பொழுதும், வர்தே—வர்த்திக்கிறேன். நடந்துவருகிறேன்.

அவதாரிகை:—ஆறுவதான அதிகாராத்யாயத்தின் ஸூசனம் முன் ஆறுவது ச்லோகத்தில் நடந்தது. உபதேசஷட்கம் முடிந்து ஏழாவது அத் யாயத்தில் அதிதேசஷட்கம் தொடங்குகிறது. அதில் ப்ரக்ருதியின் தர்மங்களை விக்ருதியிலும் அநுஷ்டிக்கவேண்டுமென்று ஸாமாந்யமாக ப்ரதர்சனம் செய்கிறது. ஒரு யாகம் முதலிய வைதிககர்மத்தில் அங்கங் களையெல்லாம் விஸ்தாரமாய் வாசனிகமாக விதித்திருப்பதை 'ப்ரக்ருதி' 'மூலம்' என்பர். விக்ருதி என்பது அதன் ஸாத்ருச்யமுள்ள மற்ற யாகாதிகர்மம். மூலமான ப்ரக்ருதியில் விதிக்கப்பட்டிருக்கும் அங்கங்களை

விக்ருதியிலும் அநுஷ்டிக்கவேண்டுமென்று விதிப்பது. "ப்ரக்ருதிவத் விக்ருதி: கர்த்தவ்யா" என்பது ஸாமான்யமாய் அதிதேசவிதி. ப்ரக்ருதியைப்போல் அதிலுள்ளபடி விக்ருதிகர்மத்திலும் அநுஷ்டிக்கவேணும். எம்பெருமானார், மூலமான, ப்ரக்ருதிபூதரான நம் ஸம்ப்ரதாய ஆசார்யர். நான் அந்தப் பரம்பரையில் அந்த ஸ்தானத்தில் ஆசார்யனாய் நிவேசநம் செய்யப்பட்டிருக்கும் விக்ருதி. யாகாதிகர்மங்கள் அசேதனங்கள். அந்த விஷயத்தில் "ப்ரக்ருதிவத் விக்ருதி:கர்த்தவ்யா' என்று செய்யப்படும் பொருளாக கர்மணிப்ரயோகம்தான் ஸம்பவிக்கும். கர்த்ருத்வம் ஸம்பவியாது. இங்கே மூலப்ரக்ருதி ஸர்வஜ்ஞரான ச்ரேஷ்டதம ஜ்ஞானி ஆசார்யர். விக்ருதியான நானும் சைதந்யவானே. பசுவ்ருத்தியாயிருந்தாலும் சைதந்யத்திற்குக் குறைவில்லை. எம்பெருமானாருடைய லோகோத்தர ஆசார்ய தர்ம சிலாசரணாதிகள்போலே கூடியவரையில் அந்த ஸ்தானத்தில் வீற்றிருக்கும் ஆசார்யர்களும் ஆசார்யதர்ம ஸம்பத்துக்களோடு ஸம்பந்நராயிருக்கவேணும். "ப்ரக்ருதிவத் விக்ருதி: கரோதி" என்று இங்கே அதிதேசத்தை மாற்றிக் கொள்ளவேணும். மூல ஆசார்யர்களின் ஆசார்யஸம்பத்தைப்போன்ற ஸம்பத்தை விக்ருதியாயிருப்பவரும் அநுஷ்டிக்கவேணும். தேஹத்தைப் பற்றிய பாஹ்ய காஷாயவஸந யக்ஞோபவீத த்ரிதண்டதாரணாதி வேஷங்களெல்லாம் மூல ஆசார்யரைப்போலவே அனுகரணம் செய்கிறேன். கர்மேந்த்ரியங்களைப் பற்றிய பாஹ்ய ஸந்யாஸ ஆசாரங்களையெல்லாம் அப்படியே அநுகரணம் செய்கிறேன். ஆந்தரமான சமதமாதிகுணங்களையும், ஜ்ஞானேந்த்ரியங்களின் நையத்யத்தையும் அநுஸரிப்பதில்லை. மேலுக்கு மட்டும் பாவனையே. ப்ரக்ருதியைப்போல் தேஹவேஷங்களிலும் கர்மேந்த்ரிய நிர்வர்த்யமான பாஹ்ய ஆசாரங்களிலும் மட்டும் அநுகரணமுண்டு. ஆந்தர சமதமாதி இந்த்ரிய நிக்ரஹம் கூடிய மனச்சுத்தியை அநுஷ்டிப்பதேயில்லை. தத்விபரீதசீலமேயுளது. "ச்ரோத்ரியம் ப்ரஹ்மநிஷ்டம்" என்று ஆசார்யரை முண்டகம் வர்ணித்தது. ஸம்ஸ்க்ருத த்ராவிட உபயவேதங்களையும் அத்யயனம் செய்த ச்ரோத்ரியலக்ஷணத்தை ஸம்பாதித்திருந்தாலும், **"शान्तो दान्तः उपरतस्तितिक्षुः समाहितो भूत्वा आत्मन्येवात्मानं पश्येत्"** (சாந்தோ தாந்த: உபரத: திதிக்ஷு: ஸமாஹிதோ பூத்வா ஆத்மந்யேவாத்மாநம் பச்யேத்) என்று ப்ருஹதாரண்யகத்தில் ப்ரஹ்மநிஷ்டைக்கு அவச்யாபேக்ஷிதமாக விதிக்கப்பட்டிருக்கும் சமதமாதி அந்தரங்கஸம்பத்துக்களைத் தேடவில்லை. அநுஷ்டிக்கவில்லை. அதற்கு விபரீதமாகவே நடக்கிறேன். ஸாதுதமரான பெரியோர்கள் வர்த்திப்பதைப்போலே ஆசார்யஸ்தானத்தில் இருப்பவர் வர்த்திக்கவேணும் என்னுடைய ஆந்தரவ்ருத்திகள் விபரீதமாக இருக்கின்றன. தேஹவ்ருத்திகள் மூலத்தைபோலவே வேஷமாக நடிப்பு.

நானுண்மையில் மூலவிபரீதமாகவே வர்த்திக்கிறேன். மூலத்தைப்போல சரிக்கவேண்டும் அநுஷ்டிக்கவேண்டுமென்ற அதிதேசத்தில் தேஹஸம்பந்தமான பாஹ்யவேஷங்களிலும் பாஹ்யக்ரியைகளிலும் மட்டுமே ப்ரக்ருதி தர்மசரணம். ஆத்மாவைப்பற்றிய அத்யாவச்யகமான ஆத்மதர்மங்களின் சரணம் அடியோடு இல்லை. இப்படி மூலமான ப்ரக்ருதியின் தர்மங்களை அநுஷ்டிப்பதில் தேஹஸம்பந்தமான ப்ராக்ருத பாஹ்யதர்மங்களை மட்டும் அநுஷ்டித்து, அத்யாவச்யகமான ஆத்மதர்மங்களை அடியோடு லோபம் செய்கிறேன். என்னுடைய பாஹ்யகாஷாயாதி வேஷங்களாலும் எம்பெருமானார் ஸ்தானத்தில் ஆஸிகையாலும் ஸ்வயம் ப்ரஹ்மநிஷ்டா ஸம்பத்துக்களால் பூர்ணஸம்பன்னரும், ஸித்தர்களும் க்ருதிகளுமான என்னைச் சுற்றியுள்ள ப்ராஜ்ஞதம சிஷ்யர்கள் எல்லோரையும் நான் சமதமாதி ஆத்மகுணபூர்த்தியுடையவன்போலே நம்பச்செய்து ஏமாற்றி வருகிறேன். எப்பொழுதும் சமீபத்திலேயே இருக்கும் அந்தேவாஸிகளான மஹாப்ராஜ்ஞர்களையும் இப்படியே முழுமோசமாய் நிபுணசடனாக இருந்து ஏமாற்றிவருகிறேன். வஞ்சனத்தில் என்னிலும் நிபுணரில்லை. வஞ்சனையையே ஓர் வ்யஸனமாகவும் வ்ருத்தியாகவும் கொண்டு வஞ்சனபரனாகவே வர்த்திக்கிறேன். 'வஞ்சனபர:' என்று யாமுனர் நைச்யத்தால் செய்தது நைச்யாநுஸந்தானம். எனக்கு வஞ்சனம் உண்மையான வ்ருத்தி. ஸ்த்தாயியானசீலம். ராமாநுஜதர்சனமூல ஆசார்யரின் ஸாத்ருச்யம் எனக்கு மேல் தேஹ வேஷமான காஷாயத்ரிதண்டாதிகளில் மட்டுமேயுளது. 1. ப்ரக்ருதிக்குள்ள அங்கதர்மங்களை விக்ருதியிலும் அனுஷ்டிக்கவேண்டுமென்று அதிதேசம். ப்ரக்ருதிக்கும் விக்ருதிக்கும் ஸாத்ருச்ய மிருக்கவேணும். ''ப்ரத்யக்ஷ வசனம், நாமதேயம், சோதனா லிங்காநுமித வசனம்'' என்ற மூன்றைக்கொண்டு எந்த ப்ரக்ருதிக்கு எது விக்ருதி என்று அறியவேணும். **''त्रिविधश्चातिदेशः प्रत्यक्षवचनात् नामधेयात् चोदनालिङ्गानुमितवचनाच्च''** (த்ரிவித:ச அதிதேச:, ப்ரத்யக்ஷவசநாத், **நாமதேயாத், சோதனாலிங்காநுமித** வசநாச்ச) என்று சாஸ்த்ரதீபிகை. தீர்த்தகரரான ஸ்ரீபாஷ்யகாரர் போற்றிய ஸதாசாரங்களையே அவர் ஸ்தானத்தில் பின்வரும் பரம்பராசார்யர்கள் பற்றி நடக்கவேண்டும். ப்ரபன்னஜனகூடஸ்த்தரான ஆத்யகுலபதி சடகோபனுடைய குணசீலாசாரங்களை ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயஸ்த்தரான ஆசார்யர்கள் பின்பற்ற வேணும்: சடகோபர் பரம்பரையில் வருமாசார்யர்களே சடராய் வஞ்சனபரராய் இருக்கலாமோ? என்னுடைய வஞ்சனபரதையால் அத்திருவுள்ளம் புண்படாதோ? ஆதிகுருவான பதரிகாச்ரமதாபஸ நாராயணனைப் போல் இருக்கவேண்டாவோ? **''तदात्मनिरते उपनिषत्सु ये धर्माः ते मयि सन्तु ते मयि सन्तु''** (ததாத்மநிரதே உபநிஷத்ஸு யே தர்மா: தே. **மயி** ஸந்து தே மயி ஸந்து) என்று தினமும் சாந்திபாடம் ஓதுவிக்கிறேன்

2. உபநிஷத்தில் சிக்ஷிக்கப்பட்ட ஆந்தர ஆத்ம குணங்களில் ஒன்றுகூட என்னிடமில்லை. ஸ்ரீவைஷ்ணவ வேதாந்த ஸம்ப்ரதாய ஆசார்யர் என்கிற நாமதேயம் எனக்கு இருப்பதாலும், ப்ராசீன மூலாசார்யர்களின் ஆசாராதிகளை நானும் அங்கங்களாக அநுஷ்டிக்கவேணும். அக்நிஹோத்ரம் என்ற ஸத்ருசமான நாமதேயத்தைக்கொண்டே குண்டபாயிகளின் அயனமென்னும் விக்ருதியில் நித்யாக்நிஹோத்ர தர்மங்களைச் செய்யவேண்டுமென்று, பூர்வமீமாம்ஸை ஏழாவது அத்யாயம் மூன்றாவதுபாதத்தில் முதலதிகரணத்தில் நிர்ணயிக்கப்பட்டது. அதேபாதத்தில் ஆறுவது அதிகரணத்தில், **"आतिथ्यायां वैष्णवो नवकपालो भवति"** (ஆதித்யாயாம் வைஷ்ணவோ நவகபாலோ பவதி) என்று விதிக்கப்பட்ட ப்ரக்ருதிக்குள்ள அங்க தர்மங்களெல்லாம் ராஜஸூயயாகத்தில் "வைஷ்ணவ: த்ரிகபால:" என்று விதிக்கப்பட்ட மூன்று ஓட்டுப்புரோடாச கர்மத்தில் 'வைஷ்ணவ' என்ற பேர் ஒற்றுமையைக்கொண்டு அதிதேசத்தால் வருமோவென்று பூர்வபக்ஷம் பண்ணி, 'வைஷ்ணவ' என்கிற பதம் தத்திதப்ரத்யயத்தால் விஷ்ணுதேவதோத்தேச்யகம்' என்பதை மட்டும்தான் விதிக்கும். வைஷ்ணவ நவகபால கர்மத்திலுள்ள அங்கங்களைக் கொண்டுவராது என்று நிர்ணயிக்கப்பட்டுள்ளது. அந்த ந்யாயத்தால் 'வைஷ்ணவ' என்கிற பெயர் ஸாத்ருச்யத்தால் விஷ்ணுதேவதையை வழிபடுபவர் என்பது மட்டுமே ஸித்திக்குமல்லாது வைஷ்ணவருக்கு லக்ஷணமான சிலகுணுதிகள் ஸித்திக்கமாட்டாது என்றும் ஓர் ரஸப்ரதர்சனம். 3. விஷ்ணுலிங்கமென்று ஸந்யாஸாச்ரமத்திற்குப்பெயர். பெயருக்கு ஸத்ருசமாக காஷாயத்ரிதண்டயக்ஞோபவீதாதிதாரிகளான த்ரிதண்டி வைஷ்ணவருக்குள்ள பாஹ்யாசார வேஷங்களைப் பின்பற்றுகிறேனேயொழிய வைஷ்ணவயதிகளுக்கு இன்றியமையாத ஆத்மகுணங்களான யதிதர்மங்களை ஆதரிக்கவில்லை என்றும் நைச்யம் நிர்வேதம். 4. முன்ச்லோகத்தில் ஸூசிதமான அதிகாராத்யாயத்தில் அதிகார விசாரங்கள் செய்யப்பட்டன. "ஹ்ருத்யபேக்ஷயா து மநுஷ்யாதிகாரத்வாத்" என்ற ப்ரஹ்ம ஸூத்திரத்தின்படி மநுஷ்யர்கள்தான் சாஸ்த்ரவிதிகளை யநுஷ்டிக்கக்கட்டுப்பட்டவர்களும் அதிகாரிகளுமாவர். திர்யக்குகளான பசுக்களுக்கு வேத சாஸ்த்ர கர்மாதிகாரமில்லை. சாஸ்த்ரம் மநுஷ்யாதிகாரம் மட்டுமே என்று பூர்வமீமாம்ஸை ஆறுவது அதிகாரம் முதல் பாதம் இரண்டாம் அதிகரணத்தில் நிர்ணயிக்கப்பட்டது. என் உடம்பு மாநுஷ வடிவாயினும் நான் வ்ருத்தியாலும் ஸ்வபாவத்தாலும் பசுவேயாய் உளன் என்று நைச்ய ப்ரதர்சனம். 5. "சீலவ்ருத்த பலம்ச்ருதம்" என்று நாரதர் தர்மபுத்திரருக்கு ஸபாபர்வம் ஆரம்பத்தில் கச்சித் ஸர்க்கத்தில் அளித்த பதில். ஸம்ஸ்க்ருதத்தமிட உபயவேதாத்யயநச்ருதம் என்னிடமிருந்தாலும் அதற்குத்தக்க சீலமும் வ்ருத்தமுமில்லை என்று நைச்யத்தால் ஆத்மநிந்தை. மநுஷ்யதேஹத்தை வஸ்திரம்போல் போர்த்திக்கொண்டிருக்கிற பசு ஆத்மா நான். பசு ஆத்மாவின் வ்ருத்த சீலங்களே எனக்குண்டு.

மநுஷ்யாத்மாவான ஸ்ரீவைஷ்ணவ ஆசார்யர்களுக்கும் யதிகளுக்கும் வேண்டிய ஆத்மகுணங்களில்லை. 6. "க்ஞாநேந ஹீந: பசுபி: ஸமாந:" என்பர். 'க்ஞாநஹீநம் குரும் ப்ராப்ய' என்று நிந்திப்பர்; "க்ஞாநிந: தத்வ தர்சிந:" என்று அநுபவபர்யந்தமான தத்வஸாக்ஷாத்காரமுள்ள ஞானிகளே உபதேசிக்கத்தக்க ஆசார்யர்களென்று பகவானுடைய கானம். "நான் க்ஞானஹீநகுரு" என்று ஆத்மநிந்தை. 7. "மநுஜபசுபி: நிர்மர்யாதை:" என்று வேணீஸம்ஹாரத்தில், சஸ்த்ரத்தைக்கீழே எரிந்து விட்டு நிச்சேஷ்டராய் இருந்த த்ரோணாசார்யரைக்கொன்ற த்ருஷ்டத்யும்நஞதி களைப்பற்றிய அச்வத்தாமனுடைய நிந்தைச்சொல். நான் மநுஜபசு என்று இங்கே ஆத்மநிந்தை. 8. 'பசுவத் மூர்க்கோ பவேத்' என்பர். இங்கே பசு என்று ஆத்மநிந்தை. அடுத்த ச்லோக ஆரம்பத்தில் "மூர்க்க:" என்று ஸ்வநிந்தை. "தம்முடைய மூர்க்கத்வத்தை அநுஸந்தித்தருளுகிறார் மேல் ச்லோகத்தாலே" என்று பிள்ளைலோகம் ஜீயர் பணித்ததையும் இங்கே நினைக்கவேணும். பசுத்தன்மையால் மூர்க்கத்வம் சித்தம். 9. **सिद्धं सत्संप्रदाये स्थिरधियमनघं श्रोत्रियं ब्रह्मनिष्ठं सत्त्वस्थं सत्यवाचं समयनियतया साधुवृत्त्या समेतम्। डम्भासूयादिवर्जं जितविषयगणं दीर्घबन्धुं दयालुं स्खालित्ये शासितारं स्वपरहितपरं देशिकं भूष्णुरीप्सेत्॥** (ஸித்தம் ஸத்ஸம்ப்ரதாயே ஸ்த்திரதியமநகம் ச்ரோத்ரியம் ப்ரஹ்மநிஷ்டம், ஸத்வஸ்த்தம் ஸத்யவாசம் ஸமயநியதயா ஸாதுவ்ருத்யா ஸமேதம், ! டம்பாஸூயாதிவர்ஜம் ஜிதவிஷயகணம் தீர்க்கபந்தும் தயாளும், ஸ்க்காலித்யே சாஸிதாரம் ஸ்வபரஹிதபரம் தேசிகம் பூஷ்ணுரீப்ஸேத் !!) என்ற ச்லோகத்தில் ஆசார்யலக்ஷணம் கூறப்பட்டதை ஸ்வாமி உதாஹரித்துள்ளார்.

வ்யா:—வ்ருத்யா பசு: தமக்கு மூர்க்கத்வத்தை ஸாதிக்க பசுஸாத்ருச்யத்தைக்காட்டினல் போதும். **"पशुवन्मूर्खो भवेत्"**(பசுவந்மூர்க்கோ பவேத்) என்பர். ஸ்ரீசங்கரரும் தம் பாஷ்யத்தொடக்கத்தில் ப்ரஹ்மத்தை அறிய ஆசையும் யத்நமுமில்லாத கேவலகர்மடரான வைதிகர்கள்கூட பசுக்கள் போன்றவரே ஆவர்; **"पश्वादिभिश्चाविशेषात्"** (பச்வாதிபி: ச அவிசேஷாத்) என்று பணித்தார். பசும்புல் முதலிய ஆஹாரத்திலும், அதைக்கொடுப்பவரிடமும் ப்ரியமும், அச்சமின்மையும், தடிஎடுத்து ஓங்குபவரிடம் பயமும் இருப்பது பசுக்களுக்கும் மநுஷ்யர்களுக்கும் துல்யம் என்பதைக் காட்டினர். ஆஹார நித்ராபயாதிகள் இருவருக்கும் பொதுவான வ்ருத்தி. இவையெல்லாம் தேஹத்தையும் அதன் ஜீவனத்தையும் பற்றியவை. ஆத்மோஜ்ஜீவனமென்பதே பசுக்களுக்குத்தெரியாது.

மநுஷ்யதேஹம் ஆத்மோஜ்ஜீவனார்த்தமே ஈச்வரனால் அருளப்பட்டது. “ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகள் பசுவைப்போலவே” என்ற மஹாசார்யர் உரைக்கு சாஸ்த்ரவிஹித ப்ரவ்ருத்தி நிவ்ருத்திவசமான வ்ருத்தியில்லை என்று திருவுள்ளம். “நீர் மநுஷ்யர்தானே. சாஸ்த்ரங்களை ச்ரவணம் செய்து ஆஸ்திக்யாதிகளை உண்டாக்கிக்கொள்ளலாகாதோ” என்று யதிராஜர் கேட்க, “நான் தேஹத்தால் மட்டும் மநுஷ்யன். வ்ருத்தியினால் பசுவே” என்று இந்த ச்லோகத்தில் கூறுவதாக மஹாசார்யர் அவதாரிகை. “சாஸ்த்ரம் மநுஷ்யாதிகாரமென்பது உண்மையே; நான் மனுஷ்ய வடிவாயினும் வ்ருத்தியினால் பசுவே. பாஹ்யமான சதுஷ்பாத்த்வம் (நான்கு காலுடைமை) இல்லையேயாகிலும், ஆந்தரமான அஜ்ஞானம் உண்டு என்கை. (ஜ்ஞானேந ஹீந: பசுபி: ஸமாந:) என்கிறபடியே த்விபாத் (இரண்டு கால்) பசுவும் உண்டு என்கிறார்” என்றும் மஹாசார்யர் உரை. “சாஸ்த்ராப்யாஸத்திற்கு யோக்யமான நரஜன்மத்தால் மநுஷ்யத்வமும் சாஸ்த்ரவச்யதையில்லாத பசுக்களைப்போல ஆத்மக்ஷேம நினைவில்லாத பசுவ்ருத்தி மாத்ரத்தால் பசுத்வமும் ஆக இரண்டு தன்மையையும் உடையவன் அடியேன். வ்ருத்தத்தால் பசு, தேஹத்தால் மநுஷ்யன்” என்று ஜீயர் ப்ரதர்சனம். அஹம்து— (நாஹோவென்றால்) என்று பின்னுள்ள பதங்களை இங்கேயும் அந்வயித்தும், ‘நரவபு: பசு:’ என்று அதோடு சேர்த்து அந்வயித்தும், நான் பசுவிலும் ஓர் விஜாதியமான பசு என்று ஜீயர் காட்டும் ரஸம் ரஸ்யம். மேல் ஆகாரத்தால் காணும் மனுஷ்யத்வத்தை வ்யாவர்த்திப்பது. உண்மையில் பசுத்தன்மை. “வ்ருத்தி ஜ்ஞாப்ய நர பசுத்வ வாந்” என்று அண்ணா அப்பங்கார் ஸ்வாமியின் தர்க்கரீதி ப்ரதர்சனம். “வ்ருத்யா” என்று வ்ருத்தத்தை ச்லோகத்தின் தொடக்கத்தில் ஹேதுவாக படித்தது மிக்கரஸம். “வ்ருத்யா வஞ்சனபரோவர்த்தே” என்றும் மேலே அந்வயம் கொள்ள இடமுண்டு.

**நரவபு:**— தேஹத்தால் மட்டும் மநுஷ்யன். விவேகமெனும் பகுத்தறிவின்மையால் மனுஷ்யர்களிடமிருந்து பசுக்களுக்கு வேறுபாடு ப்ரஸித்தம். ஆஹார நித்ராதி க்ராம்ய வ்ருத்திகள் இருவருக்கும் ஸமானம். அதனால் மட்டும் மநுஷ்யருக்குப் பசுவைக்காட்டிலும் வேற்றுமை ஏற்படாது. “**साक्षान्नारायणो देवः कृत्वा मर्त्यमयीं तनुं। मग्नानुद्धरते लोकान् कारुण्यात् शास्त्रपाणिना ॥** (ஸாக்ஷாந்நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்யமயீம் தநும், மக்நாநுத்தரதே லோகாந் காருண்யாத் சாஸ்த்ரபாணிநா) (ஜகதீச்வரனான நாராயணதேவன் ஓர் மநுஷ்யன்போன்ற தேஹத்தை அமைத்துக்கொண்டு மற்றோர் ஜீவ வ்யவதானமில்லாமல் தானே நேரில் ஸாக்ஷாத்தாக அநுப்ரவேசித்து ஓர் ஆசார்யனாக அவதரித்து சாஸ்த்ரமெனும் கையினால் ஸம்ஸார ஸமுத்ரத்தில் மூழ்கி இருக்கும் சேதனரைக்கைதூக்கிக்கரை

யேற்றிவைக்கிறுன்) என்ற வசனப்படி நாராயணனே கருணையினால் ஆசார்யனென்ற மநுஷ்யதேஹரூபத்தோடு ஆசார்ய க்ருத்யம் செய்கிறார். நம் ஆசார்யர்கள் மானிடதேஹத்தோடு இருந்தாலும் ஸாக்ஷாத் நாராயண தேவனே. 'நர:' என்பது நாராயணனுக்குப்பெயர். "जह्नुर्नारायणो नरः" (ஜஹ்நுர் நாராயணோ நர:) என்று ஸஹஸ்ரநாமம். 'ந ரீயதே இதி நர:" அவ்யயமான சாச்வத புருஷன். ஸதாசார்யர்களுடைய திருமேனி ஸாக்ஷாத் நாராயணன் பரிக்ரஹித்து அநுப்ரவேசித்த திருமேனியே. அந்த தேஹம் நரனென்னும் நாராயணனுடைய வபுஸ்ஸாகவே இருக்க வேணும். ஸத்ஸம்ப்ரதாய ஆசார்யர்களெல்லாம் நரவடிவம் கொண்ட நாராயணன் திருமேனியேயாவார். அதற்கு நான் ஓர் அபவாதம். நரனென்னும் நாராயணதேஹமாய் இருக்கவேண்டியது போய், கேவல மநுஷ்யதேஹமான இருப்பு என்று வெறுப்பு. பசு மநுஷ்யதேஹத்தைப் பூண்டிருக்கிறதென்றும் நிந்தை. சிறுமாமனிசர் என்று இருக்கவேண்டியது போய் சிறு ம்ருகமாயிற்று. ப்ரஹ்ம ப்ராயனாய் வர்த்திக்க வேண்டியது போய் பசு ப்ராயனாய் வர்த்திக்கிறேன். நரவபுரஹம் வ்ருத்யாது பசு: - பச்வாசாரன். ஜ்ஞானஹீனமான பசுவே. அஹம் என்பதை முன்னும் பின்னும் அந்வயிக்கவேணும்; 3. நர என்பது விஷ்ணுவாசகம்; விஷ்ணுலிங்கம் என்பது ஸந்யாசம். லிங்கம் என்பது சரீரத்தையும் சொல்லுவது. ஸந்யாஸியின் திருமேனி விஷ்ணுத்திருமேனி நரவபு: என்பதால் சன்யாசி வேஷமும் ஸூசிதமாகிறது. ஸகல விஷய ஆசைகளையும் தேஹஸம்பந்த ஸம்பந்திகளையும் துறந்து சமதமாதி ஆத்ம குண ஸம்பன்னராய் அத்யாத்ம ஜ்ஞான நித்யராய் இருக்கவேண்டியது போக இப்படி பசுவ்ருத்தியாய் இருப்பதாய் நிர்வேதம்.

**அஹம் ஈத்ருசோபி**—(1) உண்மையில் ஆந்தரமாய் பசுப்ராயனாய் இருந்தாலும், (2) ஸாக்ஷாத் நாராயணனே என் மநுஷ்யசரீரத்தைப் பரிக்ரஹித்து உள்ளிருந்து நானெனும் ஆசார்யனாக விளங்குகிறுன் என்ற வசனத்திற்கேற்ப நான் ஸகல ஔபநிஷத ஆத்மகுணசீல ஸம்பன்னமாய் இருக்கவேண்டியது அவச்யமாயினும், (3) எம்பெருமானார் குருபரம்பரா பீடத்தில் இப்பொழுது நிவேசிக்கப்பட்டு விஷ்ணுலிங்க சன்யாசியாய் இருப்பதற்குத் தகுந்த ஜ்ஞான ஆத்மகுணாதி ஸம்பத்துகளோடு இருக்க வேண்டியிருந்தும், (4) ப்ரகார ஸாத்ருச்யத்தைக் காட்டும் ஈத்ருச சப்த ப்ரயோகத்தால் அதிதேசத்திற்கு மூலமான ஸாத்ருச்ய நியமம் த்வனிக்கப் படுகிறது.

**ச்ருத்யாதி ஸித்தநிகிலாத்ம குணாச்ரயோயம்**—ச்ருதி முதலிய ப்ரமாணங்களால் வேதாந்தாசிரியர்களான ப்ரஹ்ம நிஷ்டருக்கு நியதமாயிருக்க

வேண்டிய ஆத்மகுணங்கள் விதிக்கப்பட்டுள்ளன. ப்ரஹ்மோபாஸனத்திற்கு அவச்யமான ஆத்மகுணங்கள், கர்மம், ஆசாரம் முதலிய அங்கங்கள் விதிக்கப்பட்டுள்ளன. 'ஆதி' என்பதால் ஸ்ம்ருதிகள், ப்ரஹ்மஸூத்ரங்கள், ஸதாசாரங்கள் ஸம்ப்ரதாயாசரணைகள் இவற்றைக் கொள்ளவேணும். மீமாம்ஸை 3-வது அத்யாயத்தால் யாகாதிகளுக்கு அங்கங்கள் எவை என்று நிர்மாணிக்க ச்ருதி லிங்கம், வாக்ய ப்ரகரண ஸ்தான ஸமாக்யை கள் என்னும் ப்ரமாணங்கள் காட்டப்பட்டுள்ளன. "ச்ருத்யாதி பலீய ஸ்த்வாச்ச நபாத:" என்ற ப்ரஹ்மஸூத்ரத்தாலும் அந்த ச்ருத்யாதி ப்ர மாணங்களும் அவற்றின் பலாபலமும் ஆதரிக்கப்பட்டுள்ளன. இங்கே 'ஆதி' என்பதற்கு லிங்கம் முதலிய ஐந்து ப்ரமாணங்களையும் கொள்ள லாம். "சமதமாத்யுபேத: ஸ்யாத் ததாபி தததங்கதயா தத்விதே:" என்கிற ப்ரஹ்மஸூத்ரத்தால், சமம், தமம், உபரதி, திதிக்ஷை, ஸமாதானம், ச்ரத்தை முதலிய ஆந்தர ஆத்மகுணங்கள் க்ருஹஸ்தரான ப்ரஹ்மோ பாஸகருக்கும் அவச்யமான அங்கங்களாக விதிக்கப்பட்டுள்ளன. ஸந்யாஸி யான ஆசார்யர்களுக்கு அவை அவச்யவமென்பது கைமுத்ய ஸித்தம். ப்ரபன்னரான க்ருதக்ருத்ய ப்ரஹ்மநிஷ்டருக்கும் அவை ஸித்தமான அதி காரி விசேஷணங்களாக அவிச்சின்னமாய் யாவதாயுஷம் தொடர்ந்திருக்க வேண்டும். "நாவிரதோ துச்சரிதாத் நாசாந்தோ நாஸமாஹித:" என்கிற ச்ருதியையும் நினைக்கவேணும். "அத்வேஷ்டா ஸர்வபூதாநாம்" என்று தொடங்கினதும், "அமானித்வமதம்பித்வம்" என்று தொடங்கினதும், "அபயம் ஸத்வ ஸம்சுத்தி:" என்று தொடங்கியதுமான பல கீதா ச்லோகங் களையும் நினைக்கவேணும். இந்த ஆத்மகுணங்களில் பரம ஆதரத்தால் பகவான் திரும்பவும் திரும்பவும் இவற்றைப்பாடியது. "யஸ்யைதே சத்வாரிம்சத் ஸம்ஸ்காரா: அஷ்டாவாத்மகுணா:" என்று எட்டு ஆத்ம குணங்கள் கௌதமதர்ம சூத்ரத்தில் விதிக்கப்பட்டுள்ளன. தேஹஸம்ஸ் காரங்கள் ஏறத்தாழ இருந்தாலும் ஆத்மகுணங்கள் அவச்யம் பூர்ணமாய் இருக்கவேணும் என்று கௌதமர் வற்புறுத்தியிருப்பதை "ஆத்மகுண" என்பதால் சூசிக்கிறார். தேஹத்தின் வ்ருத்திகளுக்கும் வேஷங்களுக்கும் ப்ரதிகோடியாக ஆத்மகுணங்களின் மீறக்கூடாமையை ஸூசிக்கிறார். 'ஸித்த' என்பதால் இது நிர்விவாதமாய் ஸர்வவேதாந்த ஸித்தாந்த ஸித்தமென்பதையும் ஸூசிக்கிறார். 'நிகில' என்பதால் மேலேகூறிய வசனங்களில் குறிக்கப்பட்ட அசேஷ குணங்களும் இருக்கவேணுமென்றும் ஒவ்வொரு குணமும் லேமென்பதேயில்லாமல் ஸம்பூர்ணமாய் இருக்க வேணுமென்றும் ஸூசனம். ப்ரத்யேகம் ஸம்பூர்ணமாய் இந்த அசேஷ குணங்களும் இவரையே ஆச்ரயித்திருக்கின்றன. இந்த ஆச்ரயமில்லா விடில் அவை நிராச்ரயமாய் திண்டாடுமென்றும் ரஸஸூசனம். குணங் களுக்கு ஆச்ரயாபேக்ஷை நியதம்.

ச்ருதிகள், கீதை முதலிய ஸ்ம்ருதிகள், இவற்றுள் வெவ்வேறு இடங்களில் சிலசில ஆத்மகுணங்கள் கூறப்பட்டிருக்கின்றன. இவை எல்லாவற்றையும் சேர்த்து ஓர் ஸகலகுணோபஸம்ஹாரம் பண்ணி அத்தனை குணங்களின் ஸமுதாயம் நிச்சேஷமாய் என்னிடம் கூடி இருப்பதாக நினைத்து ஆச்சர்யத்துடன் பேசிக்கொள்கிருர்கள். அவர்கள் எத்தனை நிபுணரான ப்ராஜ்ஞராயினும் அவர்களுடைய அபாரமான ச்ரத்தாபக்திகளால் இப்படி எல்லா குணங்களுக்கும் ஆச்ரயமான ஓர் வ்யக்தி என்பது ''அயமேவ'' (இவர் ஒருவரே) என்று ஏமாந்து போகிருர்கள். அவர்கள் நிபுணரான க்ருதிகளாயிருந்தும் அவர்களின் நைபுண்யத்திற்குமேற்பட்டது என்னுடைய ஏமாற்றும் நைபுண்யம். அவர்களுடைய அப்ரகம்ப்யமான ச்ரத்தா பலத்தைக்கொண்டு நான் அவர்களை இப்படி வஞ்சிக்க ஸாத்யமாகிறது. அண்ணா அப்பங்கார் ஸ்வாமி உரையில் ''ஆச்ரய:'' என்பது உத்தேச்யமென்றும் ''அயம்'' என்பது விதேயஸமர்ப்பகமென்றும் மிக ரஸமாக உரைக்கப்பட்டது. உத்தேச்யம் பூர்வம் விதேயம் பரம் என்று ந்யாயம். முன்பதம் உத்தேச்யத்தைச் சொல்லும்; பின்பதம் விதேயத்தைச் சொல்லும். அந்த ந்யாயம் அந்த உரைக்கு பலம் கட்டுகிறது. இங்கே 'ஆச்ரய:' என்று முன்பும் அடுத்தாற்போல் 'அயம்' என்றும் வைக்கப்பட்டிருப்பதற்கு அப்படித்தான் பொருள் கொள்ளவேணும். ராமாயண ஸங்க்ஷேபாரம்பத்தில் ''को न्वस्मिन् सांप्रतं लोके गुणवान्'' என்று ஆரம்பித்து துர்லபமான பலகுணங்களைக் கூறி இத்தனை குணங்களும் சேர்ந்துள்ள வ்யக்தி யார் என்று அந்வேஷணம்செய்து அப்படிப்பட்ட ஓர் ஆச்ரயத்தை நிர்ணயித்துக்கொள்வதுபோல இவர்களும் ஸகல ப்ரமாண ஸமுதாயஸித்தமான எல்லா ஆத்மகுணங்களின் ஸமுதாயம் இப்பொழுது உலகத்தில் யாரிடம் கூடி உள்ளன என்று ஆலோசித்து இவர்தான் இந்த வ்யக்தி என்று நிச்சயித்துக் கொள்கிருர்கள். ''ச்ருத்யாதி நிகிலாத்ம குணாச்ரயமுத்திச்ய அயமிதி தாதாத்ம்யேந விதி: தேநச உத்தேச்யதாவச்சேதகவ்யாபகத்வம் விதேயே பாஸதே'' என்று அந்த ஸ்வாமி ஸ்ரீஸூக்தி. அயமென்பதோடு 'ஏவ' என்னும் அவதாரணத்தையும் கூட்டிக்கொள்ளலாம்.

**இத்யாதரேண**— (1) இப்படி அத்புத ரஸாநுபவத்தோடு 'ஆச்சர்யம் ஆச்சர்யம்' என்று மனமார்ந்த பரிவுடன். (2) ''குரும்ப்ரகாசயேத்தீமான்'' என்ற விதியினுல் சோதிதராய் புகழ்வரல்ல. ப்ரீத்யைவ காரிதராய் உள்ளே நாபியிலிருந்து வரும்சொல்.

**க்ருதிநோபி**—(1) ஸர்வஜ்ஞரும், குணதோஷ விசாரநிபுணரும், தோஷஜ்ஞருமான வித்வான்கள். ''வித்வான், விபச்சித், தோஷஜ்ஞன், கோவி

தன், ப்ராஜ்ஞன், ஸங்க்யாவான், பண்டிதன், கவி, தீமான், ஸூரி, க்ருதி, விசக்ஷணன்'' என்று அமரர் காட்டும் க்ருதிசப்த பர்யாயங்கள். ''ஸங்க்யா—விசாரணா அஸ்தி அஸ்யஇதி ஸங்க்யாவாந்'' என்று ஸுதை உரை. இத்தனை பொருள்களையும் இங்கே க்ருதிசப்தத்திற்குக் கொள்ள லாம். ஸதா கூடவே இருக்கும் விசாரணைகுசலரான அந்தே வாஸிகள். அவர்கள் காலக்ஷேபங்கள் முடிந்து மஹாவித்வான்களாகி க்ருதார்த்தர்களாய் இருந்தும் வெளியேசென்று ஸ்வயம் ஆசார்யகசிர்வஹணம் செய்யக்கூடிய க்ருதிகளாயிருந்தும் என்னைவிட்டு அகலாமலிருக்கிறார்கள். இந்தப்பதத்தை ''இப்படிக்கொத்த நிபுணமஹான்களையும்'' என்று இரண்டாம் வேற்றுமை பொருளாகவும் கொள்ளலாம். (2) ப்ரதமையாகவும் உரைகள் பணித் துள்ளன. இப்படிக்கொத்த திக்கஜங்களான விபச்சித்துக்களும் தங்களுக் குள்ளே ஒருவர்க்கொருவர் பேசிக்கொள்ளும்படி என்று முதல்வேற்றுமை யாகப் பொருளுரை.

மிதஃ ப்ரவக்தும்—(1) 'மிதஃ' என்பதற்கு ஒருவர்க்கொருவர் என்றும் ரஹஸ்யமாய் என்றும் இரண்டு பொருள்கள். இங்கே இரண்டையும் கொள்ளலாம். ஒருவர்க்கொருவர் ரஹஸ்யமாய் பேசிக்கொள்ளும்படி. என் ப்ரீதிக்காக என் காதில் விழும்படி பேசிக்கொள்வதல்ல. ஏகாந்த மாய், ஆசார்யநாமஸௌ (இவரே உத்தம ஆத்மகுணஸம்பன்னர்) என்று ஹார்த்தத்தைப் பேசுவது. ''ப்ரத்யக்ஷே குரவஃ ஸ்துத்யாஃ'' என்ற நிய மத்திற்குக் கட்டுப்பட்டு என்முன் பேசுவதல்ல. (2) 'வக்தும்' என்பதை அந்தர்பாவிதணிச்சாகக் கொண்டு 'ப்ரவாசயிதும்' (அவர்களைப் பேசுவிக் கும்படி) என்று பொருள்கொள்ளலாம். ''இப்படியிருந்த நிபுணர்களைப் பேசுவிக்கும்படி நான் அதிநிபுணமாய் ஏமாற்றிக்கொண்டே வர்த்திக்கிறேன்'' என்று பொருள் தேறுகிறது; நான் வர்த்திக்கி றேன் என்ற வர்த்தனைக்கிரியைக்குக் கர்த்தாவே பேசுவிக்கச் செய்ய என்ற ப்ரவசனக்ரியைக்கும் ப்ரயோஜககர்த்தாவாகிறார். பேசுகிறவர்கள் ப்ரயோஜ்யகர்த்தாக்கள் மட்டுமே; காரயித்ருத்வம் இவருக்கு, கர்த்ருத்வம் அவர்களுக்கு. (3) இப்படி அவர்கள் பேசிக்கொள்ளவேணுமெனும் என் ப்ரயோஜனத்திற்காக நான் ஏமாற்றி வர்த்திக்கிறேன் என்றும் பொருள் கொள்ளலாம். (4) ஆதரத்தோடு என்னை இப்படிப் புகழும்படி என்று பதவுரைகளில் காண்கிறோம். ''அறிவில் தலைநின்றவர்களெல்லாரும் தங்களுள் ஏககண்டராய் ப்ரீதிக்குப் போக்குவிட்டுப் புகழும்படியன்றோ அடியேன் வர்த்திப்பது'' என்று பிள்ளைலோகம் ஜீயர் உரை. "**निरूपकाः अपि यथा अभीक्ष्णं प्रवचनं कुर्युः तथा**" என்று அண்ணா அப்பங்கார்ஸ்வாமி

உரை. 'க்ருதிந:' என்பதை முதல்வேற்றுமையாகக்கொண்டு அவ்வுரைகள். (5) ஸ்ரீப்ரதிவாதி பயங்கரம் ஸ்வாமியால் "प्रचारयितुं" என்ற உரை ஆதரிக்கப் படுகிறது. 'க்ருதிந:' என்னும் பன்மைக்கு நிச்சேஷமாய் எல்லோரும் என்றுபொருள். 'ப்ர' என்பதற்கு 'ப்ரகர்ஷேண வக்தும்' என்று கருத்து. பல்கால் பேசுவிக்கும்படி, புந: புந: வசனம் ஹார்த்த தாத்பர்யத்திற்கு அடையாளம். (6) "ஸ்வயமாசரதே யஸ்மாத்" என்பது ஆசார்யலக்ஷணத் தின் ஓர் அம்சம். ஸ்வயம் எனக்கு ஆசார்யகுண ஸம்பத்தியில்லை. "ஆசாரே ஸ்த்தாபயத்யபி" என்பதற்கு அடியோடு இடமில்லை. என் அந்தேவாஸிகளான மஹான்கள் ஸ்வயம் ஸித்தர் போன்ற க்ருதிகள்.

"அந்யாபி அத்ர—இந்த உத்துங்க ஆசார்ய ஸிம்ஹாஸனத்தில் அபி ஷேசனம் செய்யப்பட்டு இதில் வீற்றிருந்து ஆசார்யகம் நடத்திக் கொண்டேயிருக்கையிலும். முன் இப்படி இருந்ததுபோகட்டும், இப் பொழுதும் அப்படியே தொடர்ந்து வர்த்திக்கிறேன். இந்த ஸ்ரீரங்க க்ஷேத்ரத்தில் பெரியபெருமாளும் திருச்செவி சாற்றியருளும்படி அவர் சன்னிதியில் மஹத்கோஷ்டியில் சாந்தி சுத்தாந்த ஸிமாவான சடகோபன் ஸாரஸ்வத ஸாரத்திற்கு ஈடு முப்பத்தாறாயிரத்தை ப்ரவசனம் செய்த பிறகும். "ஸ்ரீபக்த்யாதி குணர்வம்" என்று புகழப்பெற்ற பிறகும்.

வஞ்சனபர:— ஜ்ஞாநாதிகரான விசாரணகுசல சிஷ்யர்களையும் ஏமாற்றுவதையே ஒரு வ்யஸனமாகக் கொண்டு அதில் ஆஸக்தனாய். ஆளவந்தார் நைச்யாநுஸந்தான ச்லோகத்தை ஸூசிக்கிறார். என் அந்தேவாஸிகள் ஜ்ஞானசீலாதிகளில் க்ருதிகள். நான் வஞ்சனத்தில் க்ருதி—அதிகுசலன்.

வர்த்தே—வஞ்சனவ்ருத்தியோடே வர்த்திக்கிறேன். "यथा ते तत्र वर्तेरन् तथा तत्र वर्तेथाः" என்று வேதம்படித்த ஆசார்யாநுசாஸனம். "அநுஷ் டான பூர்த்தியுடைய ஆசார்யமூலமான ப்ரக்ருதி. அவர்களைப்போலே விக்ருதிகளான பின்னுள்ளார் வர்த்திக்கவேணும்" என்று மேல்கூறிய சிஷ்டாநுகரணாநுசாஸனச்ருதி ஓர் அதிதேசநியமனமாகும். மூலப்ரக்ருதி களான யதீந்த்ராதிகளைப்போல் அந்த ஸ்தானத்திலுள்ள விக்ருதியாகிய நான் வர்த்திக்கவில்லை. "ப்ரவக்தும் யதா ததா" என்று அந்வயம் உரைக் கப்பட்டுள்ளது.

யதீந்த்ர—தேவரீர் ஸம்யமீந்த்ரர். தேவரீர் வர்த்தித்தபீடத்தில் இங்கே நான் உட்கார்ந்துகொண்டு இப்படி வர்த்திக்கிறேன். யதிகளுக்கு ராஜா வான உம்மிடமும் பயமில்லாமல் வர்த்திக்கிறேன்.

दुःखावहोऽहमनिशं तव दुष्टचेष्टः शब्दादिभोगनिरतश्शरणागताख्यः।
त्वत्पादभक्त इव शिष्टजनौघमध्ये मिथ्याचरामि यतिराज ततोऽस्मि मूर्खः ॥८॥

8. து:காவஹோऽஹமநிசம் தவ துஷ்டசேஷ்ட:
சப்தாதிபோக நிரதச்சரணாகதாக்ய:।
த்வத்பாதபக்த இவ சிஷ்டஜநௌக மத்யே
மித்யாசராமி யதிராஜ ததோஸ்மி மூர்க்க:॥

பதவுரை:—யதிராஜ—யதிராஜனே! அஹம்—நான், அநிசம்—அல்லும் பகலும், துஷ்டசேஷ்ட:—துஷ்ட வ்யாபாரங்களைச் செய்பவனாகவும், தவ—உமக்கு, து:க்காவஹ:—துக்கத்தைத் தருபவனாகவும், சரணாகதாக்ய:—சரணாகதனென்று பெயர்வைத்துக்கொண்டு, சப்தாதி போக நிரத:—சப்தம் முதலிய விஷயங்களின் போகத்தையே மிக்கருசியோடு அநுபவித்துக் கொண்டு, சிஷ்ட ஜநௌக மத்யே—ஸாதுக்களாய் உயர்ந்த சீலமுள்ள பெரியோர்களின் திரள்நடுவில், த்வத்பாத பக்த இவ—உமது திருவடிகளில் பக்தியுடையவனைப்போல, மித்யாசராமி—பொய்யாக வேஷம் பூண்டு நடிக்கிறேன்; ஆகையால், மூர்க்கோஸ்மி—ஜ்ஞான ஹீனனாகிறேன். பொல்லாதவனாகிறேன்.

விசேஷவுரை—"पशुवन्मूर्खो भवेत्" (பசுவந் மூர்க்கோ ப⁴வேத்) "विद्याविहीनः पशुः" (வித்யாவிஹீந: பசு:) "ज्ञानेन हीनः पशुभिस्समानः" (ஜ்ஞாநேந ஹீந: பசுபி⁴: ஸமாந:) என்பர். நான் பசுவ்ருத்தியுடையவன், பசுப்ரக்ருதி என்றார் கீழ்; 'ஆகையால் நான் மூர்க்கன்' என்று இங்கு அநுமானம் செய்கிறார். பசுப்ரக்ருதியாக இருப்பவர் மூர்க்கராகத்தானே இருக்கவேண்டும். மூர்க்கத்வம் என்னும் பசுதர்மத்தைத் தமக்கு அநுமானத்தால் அதிதேசம் செய்துகொள்கிறார். 8—வது அத்யாயத்தில் அதிதேச விசேஷங்கள் நிரூபிக்கப்படுகின்றன. அப்படியே இங்கும் பசுதர்மம் தம்மிடம் அதிதேசம் செய்துகொள்ளப்படுகிறது. "मासं अग्निहोत्रं जुहोति" (மாஸம் அக்நிஹோத்ரம் ஜுஹோதி) என்னுமிடத்தில் 'அக்நிஹோத்ரம்' என்கிற பெயரின் ஸாம்யத்தால் நித்யாக்நிஹோத்ரத்தின் தர்மங்களை மாஸாக்நிஹோத்ரமென்னும் கர்மத்தில் அதிதேசம் செய்வர். நாமதேயத்தைக்கொண்டு, ஆக்யையைக் கொண்டு அதற்கு உரியதர்மங்களை அதிதேசம் செய்வர். எனக்கோ 'சரணாகதன்' என்கிற ஆக்யை 'பேர்' மட்டும்தான். அந்தப் பெயரைக்கொண்டு, ப்ரபந்நருக்குள்ள தர்மங்களெல்லாம் என்னிடமிருக்கவேண்டுமென்று அநுமானித்து அதிதேசம்செய்து ஏமாந்து போகிறார்கள். எனக்கு உம் சரணாகதன் என்ற நாமதேயம் இருந்தாலும் நான் உண்மையில் பசுப்ரக்ருதி. பசுதர்மமான மூர்க்கத்தனம்தான் என்னிடம் அதிதேசம் செய்யப்படவேண்டும் என்று நைகிறார்.

அக்ர்யப்ராய ந்யாயத்தையும் இங்கே ஸூசிக்கிறார். அக்ர்யரான ச்ரேஷ்டரோடு கூட இருப்பதால் இவரும் ச்ரேஷ்டராய் இருக்கவேணுமென்று நினைப்பது அந்த ந்யாயத்தின் கருத்து. குருபீடமலங்கரிக்கும் சிஷ்டர்களான ச்ரேஷ்டர்கள் மத்தியில் (பரம்பரையில்) நான் இருப்பதைக் கொண்டு என்னையும் சிஷ்டரான அக்ர்யராக நினைத்து விடுகிறார்கள். உண்மையில் நான் பசுக்கூட்டத்தோடு பசுவாய் இருக்கத்தக்கவன். அல்லது பசுவைப்போன்ற மூர்க்கரோடு மூர்க்கராய் இருக்கத்தக்கவனென்று ஆத்மநிந்தை.

**அநிசம்**— ஓயாமல். மாத்திரைப்போது மோர் இடைவீடின்றி, எப்பொழுதும், நாள் திங்களாண்டூழி ஊழிதோறும்.

**தவதுஃக்காவஹஃ**— உமது திருவுள்ளம் நோகும்படி செய்பவன். மக்கள் போன்றவராவர் சிஷ்ய ஜனங்கள். சிஷ்ய ஜனங்களால் சுகம் பெற வேண்டியிருக்க என்னுல் சுகமேயில்லாததோடு ஓயாத்துக்கமே விளைந்துகொண்டிருக்கிறது. **“परधर्मो भयावहः”(பரதர்மோ பயாவஹ:)** என்பர். நான் என் ஆசார்யஸ்தானம் ஆச்ரமம் இவைகளுக்குத்தக்க தர்மங்களை உள்ளபடி ஆசரித்தாலல்லவோ உமக்கு இன்பமுண்டாகும்.

**துஷ்டசேஷ்ட:**– கொடியசேஷ்டைகளை, ஆசாரங்களை உடையவனாக உளன்.

நான்காம் பாதத்தில் ‘மித்யாசாரமுடையவராக இருப்பவராகக் கூறுகிறார். **“कर्मेन्द्रियाणि संयम्य य आस्ते मनसा स्मरन्। इन्द्रियार्थान् विमूढात्मा मिथ्याचारः स उच्यते॥” (கர்மேந்த்ரியாணி ஸம்யம்ய ய ஆஸ்தே மனஸா ஸ்மரன்। இந்த்ரியார்த்தாந் விமூடாத்மா மித்யாசார: ஸ உச்யதே॥)** “கர்மேந்த்ரியங்களை ஒடுக்கி எந்த மூடஆத்மா இந்த்ரிய விஷயங்களை மனஸ்ஸால் ஸ்மரித்துக்கொண்டே இருக்கிறுனே அவன் மித்யாசாரன் என்று சொல்லப்படுவான்” என்று கீதாசார்யன் அருளிச்செய்தார். மனத்தில் தோஷங்களை நினைத்திருப்பதோடு நிற்காமல் சேஷ்டை (செய்கை) களிலும் அப்படியேயிருப்பதால் கீதா ச்லோகத்தில் சொல்லப்பட்ட மித்யாசாரனுக்கும் மேற்பட்ட ஓர்விலக்ஷண அதிகாரி விசேஷமென்று ஆத்மநிந்தை.

**சப்தாதிபோகநிரத:**—புலன் விஷயங்களின் அநுபவத்திலேயே விசேஷ ருசியுடையவனாய். **“शुकमध्यापयामास निवृत्तिनिरतं मुनिं” (சுகமத்யாபயாமாஸ நிவ்ருத்தி நிரதம் முநிம்)** விஷய நிவ்ருத்தியில் சுகர் நிரதராய் இருந்தது பற்றி அவருக்கு ஸ்ரீபாகவதத்தை வ்யாஸர் அத்யாப

நம் செய்தார்; எம் ஆச்ரமத்திற்கு நிவ்ருத்திரதியே ஸ்வரூபம். ஆத்மரதியாகவே இருக்கவேணும். பாராசர்ய ஸூத்ரங்கள், அதன் ஸ்ரீபாஷ்யம் முதலிய ஸூக்த்யம்ருதமெனும் வசஸ்ஸுதையை அங்வஹம் பானம் செய்வதில் ரதியில்லை.

சரணாகதாக்ய:— "शरणागतिशब्दभाक्" (ஶரணாகதிசப்தபாக்) என்று கூரநாதன் ஸாதித்தபடி பேர்மட்டும் 'சரணாகதன்' என்று அந்தப் பெயருக்குரிய ப்ரபந்நதர்மங்களின் அங்வயமில்லை. ஆயினுமென்னிடத்தில் அதற்குரிய தர்மங்களின் அதிதேசம் செய்கிறார்கள் சிஷ்யர்கள்; அந்தப் பெயருக்குரிய தர்மங்கள் என்னிடம் பாதிதம்.

த்வத்பாதபக்தஇவ— உம் திருவடிகளில் பக்தி உடையவன்போல் அநுகரணம்மட்டும். போலி பக்தனேயல்லாது உண்மைபக்தியில்லை.

சிஷ்டஜநௌகமத்யே—உத்தமமான சீலமுடைய ஸத்வோத்தமரான அரும்பெரியோர்கள் கூட்டத்தின் நடுவில் என்னைப்பெரியவராக நினைத்து என்னைச்சூழ்ந்திருக்கும் உண்மையான பெரியோர்களுக்குக் கணக்கில்லை. இத்தனை ஸாத்விகப்பெரியோர்கள் நடுவில் நான் இப்படி இருக்கிறேனே.

மித்யாசராமி— உள்ளொன்று வெளியொன்றாகப் பொய்யே ஆசரிக்கிறேன். 'மனத்தில் ஓர்விதமாக ஸங்கல்பித்து அதற்கு வேறுபாடாக நடப்பவன் மித்யாசாரன் எனப்படுவான்' என்று கீதாபாஷ்யம்.

"'எங்கும்மாயை' 'மித்யாத்வம்' என்பது உள்ளதை வேறாகக்காட்டுவதே என்று முடியும்" என்று தார்பர்ய சந்த்ரிகை. பிறர் மித்யாவாதிகள். நான் மித்யாசாரன்.

ததோஸ்மி மூர்க்க: — ஆகையால் நான் மூர்க்கனே. "मिथ्याचार विमूढात्मा" (மித்யாசார விமூடாத்மா) என்றார் கீதாசார்யர். மித்யாசாரனாயிருப்பதால் கீதாச்லோகப்படி நான் மூர்க்கனென்பது திண்ணமே. பசுவ்ருத்தியாயிருப்பதாலும்மூர்க்கன். "दासोऽस्मि" (தாஸோஸ்மி)என்று அநுசந்திக்க ப்ராப்தம், "मूर्खोऽस्मि" (மூர்க்கோஸ்மி) என்று உண்மை முடிந்தது. "फलं नियमं कर्ता" (பலம் நியமம் கர்த்தா) இவற்றிற்கு ப்ரக்ருதியைப்போல விக்ருதியில் அதிதேசமில்லை. ஆசார்யரான மூலப்ரக்ருதிக்குள்ள பலம் எனக்கு ஸித்திக்கமாட்டாது. "ज्ञानी त्वात्मैव मे मतं" (ஜ்ஞாநீ த்வாத்மைவ மேமதம்) என்று பெருமாளுக்கும் உயிரென ப்ரியமென்று புகழப்பட்ட ஜ்ஞாநியாவரோ என்போன்ற மூர்க்கர். "மூர்க்கனேன் வந்துநின்றேன் மூர்க்கனேன் மூர்க்கனேனே"

नित्यं त्वहं परिभवामि गुरुं च मन्त्रं
तद्देवतामपि नकिञ्चिदहं बिभेमि।
इत्थं शठोऽप्यशठवद्भवदीयसङ्घे
हृष्टश्चरामि यतिराज ततोऽस्मि मूर्खः॥९॥

9. நித்யம் த்வஹம் பரிபவாமி குரும் ச மந்த்ரம்
தத்தேவதாமபி நகிஞ்சிதஹம் பிபேமி।
இத்தம் சடோப்யசடவத் பவதீயஸங்கே
ஹ்ருஷ்ட: சராமி யதிராஜ ததோஸ்மி மூர்க்க:॥

பதவுரை:—யதிராஜ!—யதிராஜனே, அஹம்—நான், நித்யம்து—நித்ய காலமும், குரும்—மந்த்ரோபதேசம் செய்த ஆசார்யனையும், மந்த்ரம்—மனனம் செய்தவனைக்காக்கும் மந்த்ரத்தையும், தத்தேவதாமபி—பலத்தைக்கொடுக்கும் மந்த்ரப்ரதிபாத்யமான தேவதையையும், பரிபவாமி—அவமதிக்கிறேன்; ந கிஞ்சித் பிபேமி—சிறிதும் அச்சப்படுகிற தில்லை, அஹோ-இதென்ன விந்தை, இத்தம்-இப்படி. சடோபி—ஏமாற்றும் சீலமுடையவனாயிருந்தும், பவதீய ஸங்கே-உம்மடியார் திரளில், அசடவத்-மோசக்காரரல்லவர் போல், ஹ்ருஷ்ட:—ஸந்தோஷமாக, சராமி—நடிக்கிறேன். (திரிகிறேன்). தத:—ஆகையால், மூர்க்கோஸ்மி-நான் மூர்க்கன். பிக்ஷாடனம் எனினும் பிக்ஷாசர்யத்தை ஸந்யாஸிவேஷத்தோடு சரிக்கிறேன்.

மந்த்ரத்திலும், மந்த்ரப்ரதனான ஆசார்யன் பக்கலிலும், மந்த்ரப்ரதிபாத்யமான தேவதையினிடமும் மிருந்த பக்தியிருக்கவேண்டும் என்று சாஸ்த்ரக்கட்டளை. திருமந்த்ரத்தை ஆசார்யருபதேசிக்குமழகிய க்ரமம் ப்ரக்ருதியாகும். யதாவத்தாக அர்த்தஜ்ஞானத்தோடு ச்ரத்தையோடு ஸ்வர வர்ணாதிகளோடு உச்சரித்து எனக்குக் கற்பித்தார்கள். நான் அநுஸந்திக்கும் க்ரமம் விகாரமேயாகும். ச்ரத்தையல்லவோ முக்யதனம். அச்ரத்தையோடு மந்த்ரஜபாநுஸந்தானங்கள் விகாரமே; ஆபாஸமேயாகும். ஊஹம் என்பது மாறுபாடு (விபரிணாமம்). ஆசார்யர்கள் கற்பித்த விதத்திற்கும் நான் உச்சரிப்பதும் அநுஸந்திப்பதும் மாறுபாடே ஆகுமென்று ஆத்மநிந்தை. தர்சபூர்ணமாஸ ப்ரக்ருதியில் "अग्नेरहमुज्जितिमनूज्जेषं" (அக்நேரஹமுஜ்ஜிதி மநூஜ்ஜேஷம்) என்றிருப்பதை ஸௌர்ய விக்ருதியில் "सूर्यस्य" (ஸூர்யஸ்ய)என்று மாறுபடுத்துவர். "अग्नयेजुष्टं" (அக்நயேஜுஷ்டம்) என்பதை "सूर्यायजुष्टं" (ஸூர்யாய ஜுஷ்டம்) என்று மாற்றுவர். அப்படி மாறுபடுத்துவது 'ஊஹம்' எனப்படும். இது மீமாம்ஸை 9-வது அத்யாய விஷயம். மந்த்ர ஸாமஸம்ஸ்காரங்களின் அந்யதா பாவாத்மகம்

ஊஹம். "ப்ரோக்ஷிக்கப்பட்ட உரல் உலக்கைகளைக்கொண்டு வ்ரீஹி தான்யத்தைக்குத்தி மாவாக்கவேண்டும்" என்று மூலப்ரக்ருதியிலிருப்பதை நைருதசரு என்ற விக்ருதியில் "कृष्णानां व्रीहीणां नखनिर्भिन्नं (க்ருஷ்ணாநாம் வ்ரீஹீணாம் நகநிர்பின்னம்) என்றிருப்பதில் நகங்களை ப்ரோக்ஷிக்கவேண்டும். ப்ரக்ருதியிலுள்ள ப்ரோக்ஷணத்தை இங்கே நகங்கள் விஷயத்தில் மாற்றிவைத்துக் கொள்ளவேண்டும்.

நித்யம் து—ஸர்வகாலமுமே; ஒரு காலத்திலாவது நன்றாய் நடக்கிறேன் என்பதில்லை. அஹம்—நான்.

குரும், மந்த்ரம், தத்தேவதாம் ச பரிபவாமி—குருவையும், அவருபதேசித்த மந்திரத்தையும், அந்த மந்திரத்தின் தேவதையையும் பரிபவம் செய்கிறேன். அவமதிக்கிறேன். "मुनित्रयं नमस्कृत्य तदुक्तीः परिभाव्य च" (முநித்ரயம் நமஸ்க்ருத்ய ததுக்தீ: பரிபாவ்ய ச) என்பர் வையாகரணர். மும்முனிகளை நமஸ்கரிப்பர், பூஜிப்பர். அவர்கள் ஸூக்திகளை நன்றாய் ஆலோசனம் பண்ணுவர். நம் ஸம்ப்ரதாயத்திலும் ஸ்ரீமந்நாதமுனி, ஸ்ரீமத்யாமுநமுனி, ஸ்ரீமத்ராமாநுஜமுனி என்னும் மும்முனிகளான குருக்களை நமஸ்கரிக்கவேண்டியது. அவர்கள் விவரித்திருக்கும் மந்த்ரங்களையும், அவர்கள் ஸ்ரீஸூக்திகளையும் பரிபாவநம் செய்யவேண்டியிருக்க, பரிபவம் செய்கிறேன் என்று ரஸம். தீர்க்கம் ஹ்ரஸ்வமாயிற்று. 'பரிபாவயாமி' என்றபடி நடந்தால் அது உசிதம்.

நகிம்சித் அஹோபிபேமி:— "धिगशुचिमविनीतं निर्भयं मामलज्जम्" (திகசுசிமவிநீதம் நிர்ப்பயம் மாமலஜ்ஜம்) என்றபெரியமுதலியாரின் ஆத்ம நிந்தையை நினைக்கிறார். குருவினிடத்திலும், மந்திரத்தினிடமும், அம்மந்திரத்தின் தேவதையினிடமும் விச்சேதமில்லாத நிஷ்டை இருக்கவேண்டும். அந்த நிஷ்டைக்குத் துளியேனும் விச்சேதம் வந்தால் "अथ तस्य भयं भवति" (அத தஸ்ய பயம் பவதி) என்றபடிபயம் உண்டாகவேண்டும், நடுங்கவேண்டும். மதி (நிஷ்டை)யில்லை என்பது மட்டுமல்ல; அவமதியும் செய்கிறேன். பயலேசமுமில்லாமலிருக்கிறேன். "तत्त्वेव भयं विदुषो मन्वानस्य" (தத்வேவ பயம் விதுஷோ மந்வாநஸ்ய) நிஷ்டையில் சோர்வு வந்தால் வித்வானுக்கு அதுவே பயகாரணம். வித்வானுக்கல்லவோ பயம்; மூர்க்கனுக்கு பயமேது என்று அந்த ச்ருதியை நினைத்து பயமில்லாததால் அவித்வான் என்பதை அனுமிக்கிறார் 'ததோஸ்மிமூர்க்க:' என்று.

'மங்வானஸ்ய'-ப்ரஹ்மமதி செய்பவனுக்கு நிஷ்டாவிச்சேதம் பயம். அவமதிசெய்யும் அவித்வானுக்கு என்ன பயம்? மதிசெய்ய நொடிப்பொழுது தவறுவதற்கே நடுங்குவரே, அவமதி செய்யும் நான் அஞ்சவில்லையே என்றும் பாவம். "न बिभेति कुतश्चन नबिभेतिकदाचन" (நபிபேதிகுதச்சந, நபிபேதிகதாசந) என்று ப்ரஹ்மானந்தத்தின் அநுபவமுள்ள வித்வான் விஷயத்தில் நிர்ப்பயத்வம் ஓதப்பட்டது. விஷயானந்த வித்வானும், ப்ரஹ்மானந்த அவித்வானுமான எனக்குப்பயமில்லை என்றும் பாவம்.

அஹோ—இதென்ன விபரீதம் என்று ஆச்சர்ய சோகங்கள். ஸ்காஸித்யே சாஸிதாவான குருவினிடமும் பயமில்லை. மந்த்ரமென்றால் நியமம் தவிரக் கூடாதென்று உலகம் பயப்பட்டு நடுங்கும். அந்த மந்த்ரலோபத்திலும் பயமில்லை. விச்வசாஸ்தாவும் தண்ட தரனும், "भीषास्माद्वातःपवते" (பீஷாஸ்மாத்வாத:பவதே) என்றும், "महद्भयं वज्रमिवोद्यतं" (மஹத்பயம் வஜ்ரமிவோத்யதம்) என்று மோதப்படும் ஜகத்கம்பக மான மந்த்ரதேவதையிடமும் பயமில்லை. வித்வானுயிருந்தால் இப்படி பயமில்லாமலிருப்பேனு.

இத்தம் சடோபி—இப்படி சாட்யஸ்வபாவனுகவிருந்தும். ஊஹாத்யாய மான ஒன்பதாவது அத்யாயத்தில் இரண்டாம் பாதத்தில் ஸாமகான க்ரமவிஷயமாகப்பல அதிகரணங்கள் உள. ஊஹமென்றே ஓர் ஸாம க்ரந்தமுண்டு. "छान्दोग्ये तलवकारादिसहस्रसामशाखागतानां गीतिप्रकाराणाम्" (சாந்தோக்யே தல்வகாராதி ஸஹஸ்ர ஸாமசாகா கதாநாம் கீதிப்ரகாராணும்) என்று கீதிஸ்பாதகாக்ஷர விகார விகல் பாதிகரணத்தில் சாஸ்த்ரதீபிகை. வேதம் தமிழ்செய்த மாறன் தமிழ் மறையே மஹத்தான ஓர் ஊஹமாகக்கூடும். மூலமறையின் ஓர் மாற்றம் (ஊஹம்) மாறன்மறை. இங்கே ஊஹாத்யாய ஸ்மரணத்தில் சடகோபனை யும், அவர் திருவாய்மொழி மறையையும் நினைத்து, திருவாய்மொழிப் பிள்ளையை ஆச்ரயித்து சடகோபன் மறையையும் சுட்டையும் ப்ரவர்த்திப் பிப்பதையே தமக்கு அஸாதாரணமான ஸ்வரூபமாக உடையவர் என்று எட்டுதிக்குகளிலும் யசஸ் பரவியதாம் அசடராக இருக்கவேண்டிய நிர்ப் பந்தம் இருந்தும் சடராக இருக்கிறேமே என்று தம்மை இங்கே விசேஷித்து நிந்தை செய்கிறார். குருவுக்கு பயப்படவேண்டாம். மந்திரத் திற்கு பயப்படவேண்டாம். பெருமாளுக்குப் பயப்படவேண்டாம். சடனுய் இருந்தால் சடகோபருடைய கோபத்திற்கு அஞ்சவேண்டாமோ? அதற்கும் அச்சமில்லையேயென்று திருவுள்ளம். நான் அவர் கோபத்திற்கு பயப்பட

வேண்டியிருக்க, "**बिभेत्यल्पश्रुताद्वेदः**" (**பிபேத்யல்பச்ருதாத்வேத:**) என்ற கணக்கில் என்னைக்கண்டு அவர்தாமும் அவர் வேதமும் பயப் படும்படி செய்கிறேன்.

**அசடவத்**—சாட்யலேசமுமில்லாமலிருந்தால்தானே சடகோபன் மறையை ப்ரவசனம் செய்யலாம். சடன் எப்படி அம்மறையை அணு கலாம். அதற்காக அசடன்போல் நான் நடிக்கிறேன்.

**பவதீய ஸங்கே**—திருவாய்மொழியை ஈன்ற தாய் சடகோபன், வளர்த்த தாய் நீர். அப்படிப்பட்ட உமது கடாக்ஷ பாத்ரரான உத்தம சீலமுள்ள உம்மடியார்களனேகர் குழாம்நடுவில் ஒருவரும் உண்மையை யறியாதபடி மறைத்து வஞ்சிக்கிறேனே. என்னிலும் சடருண்டோ? "**देव्या निह्नोतुमिच्छोः इति सुरसरितः शाठ्यमव्याद्विभोर्वः**" (**தேவ்யா நிந்ஹோதுமிச்சோ: இதி ஸுரஸரித: சாட்யமவ்யாத்விபோர்வ:**) என்று முத்ரா ராக்ஷஸ நாடக நாந்தீச்லோகம். சடையிலுள்ள கங்கையை பார்வதிதேவிக்கும் மறைக்கும் தந்திரத்தை சாட்யமென்கிறார் கவி.

**ஹ்ருஷ்ட: சராமி**—துளிபயமுமில்லாமல், துளியும் நெஞ்சம் நோவாமல் ஸந்தோஷத்தோடு ச்ருதி சொல்லுகிறபடி 'ஜ்யோக்காய்' திரிகிறேனே "**ज्योक् जीवति**" என்று சாந்தோக்யம்.

**யதிராஜ**—யதிகட்கு நீர் இறைவராயிற்றே. ராஜனான உம் ராஜ தண்டனை வருமே என்றும் அச்சமில்லையே.

**மூர்க்க:**—இப்படி பஹ்வபாயமான நடத்தையிலிருந்தும் வரும் தண்டனைகளை, ப்ரத்யவாயங்களை, நினையாமல் நிர்ப்பயனாயிருப்பதற்குக் காரணம் மூர்க்கனாயிருப்பதே. பிறரை ஏமாற்றுவதால் பலிப்பது ஆத்ம வஞ்சனையேயென்று அறியாத மூர்க்கன். "**यश्च मूढतमो लोके यश्च बुद्धेः परं गतः। तावुभौ सुखमेधेते क्लिश्यत्यन्तरितोजनः**" (**யச்ச மூட தமோ லோகே யச்ச புத்தே: பரம் கத: தாவுபௌ ஸுகமேதேதே க்லிச்யத்யந்தரிதோ ஜந:**) என்றார் சுகர். அடியோடு மதிகேடனான மூர்க்கன், ஜ்ஞாநத்தின் கரையையடைந்த தத்வதர்சி இவ்விருவரும் மேலும் மேலும் சுகப்பெருக்கையடைகிறார்கள். இரண்டிலும் சேராமல் நடுவிலிருப்பவர் க்லேசப்பட்டுத் திண்டாடுகிறார்கள். நான் மூடதம னென்னும் கோஷ்டியில் சேர்ந்தவனாகையால் ஹ்ருஷ்டனாய் ஸஞ்சரிக் கிறேன். 'பிக்ஷாசர்யம் சரிக்கிறேன்; பிக்ஷையையும் ஹ்ருஷ்டனாய் உண்கிறேன்' 'சர கதிபக்ஷணயோ:'.

हा हन्त हन्त मनसा क्रियया च वाचा
योऽहं चरामि सततं त्रिविधापचारान्।
सोऽहं तवाप्रियकरः प्रियकृद्वदेव
कालं नयामि यतिराज ततोऽस्मि मूर्खः॥ १०॥

10. ஹாஹந்த ஹந்த மனஸா க்ரியயாச வாசா
யோஹம் சராமி ஸததம் த்ரிவிதாபசாராந்।
ஸோஹம் தவாப்ரியகர: ப்ரியக்ருத்வதேவ
காலம் நயாமி யதிராஜ ததோஸ்மி மூர்க்க:॥

பதவுரை:—யதிராஜ—யதிராஜனே, ஹா ஹந்த ஹந்த—ஆ, ஆ, ஐயோ, ஐயோ, ய: அஹம்—யாதொருநான், மநஸா—மனத்தாலும், க்ரியயா—செய்கையாலும், வாசா ச—சொல்லாலும், ஸததம் — ஸர்வகாலத்திலும், த்ரிவிதாபசாரந்—மூன்றுவித அபசாரங்களையும், சராமி—ஆசரிக்கிறேனோ, ஸோஹம்—அந்தநானே, தவஅப்ரியகர:(ஏவ)— உமக்கு அப்ரியமானதையே செய்து கொண்டு, ப்ரிய க்ருத்வதேவ—ப்ரியத்தை செய்பவன் போலேயே (நடித்துக்கொண்டு), காலம் நயாமி—காலக்ஷேபம் செய்து வருகிறேனே, ததோஸ்மி மூர்க்க:—ஆகையால் யான் மூர்க்கனே ஆவேன்.

மீமாம்ஸையில் பத்தாவது அத்யாயம் பாதாத்யாயம். மூலமான ப்ருகிருதியிலுள்ள தர்மங்கள் விகிருதியில் பொருந்தற் கூடாமற்போனால் அந்த தர்மங்கள் பாதிக்கப்பட்டு அவை வராமல் நிவர்த்திக்கும். தர்மங்களை பாதிப்பதும் பாதத்தால் தர்ம நிவிருத்தியும், அந்த அத்யாயத்தில் விஷயம். தர்மங்களை அதர்மம் பாதிக்கும் "अधर्मो धर्मनाशनः" (அதர்மோ தர்மநாசன:) என்றார் திருவடி ராவணனிடம் அவன் ஸதஸ்ஸில். ப்ரவிருத்தி நிவிருத்தி என்பதில் ப்ரபன்னருக்கு நிவிருத்தி தர்மமாகும். நான் பலவிதமான கொடிய அபசாரங்களால் தர்மங்களை பாதிக்கிறேன். அவச்ய கர்த்தவ்யங்களான தர்மங்களைச் செய்யாமல் நிவர்த்திப்பதால், எனக்கு நிவிருத்தியுண்டு என்று காட்டி இந்த இரண்டு விதங்களால் பாதாத்யாய விஷயங்களை இந்த பத்தாவது ச்லோகத்தில் ஒருவாறு சூசிக்கிறார். அவ் அத்யாயத்தில் உபபாதித்தபடியில்லாவிடினும், ஒருவாறு தர்மங்களின் பாதமும் நிவிருத்தியும் தம்மிடமுளவென்றுபேசும் ரஸம் ரஸிக்க மனோஹரம்.

யதிராஜ—யதிராஜனே! தானே குற்றம் செய்திருந்தாலும் தன்குற்றத்திற்கு ராஜதண்டனையை ராஜனிடம்சென்று தானே கோறி சுத்தி பெறவேண்டும். **"राजभिः कृतदण्डास्तत्" (ராஜபி: க்ருததண்டாஸ்தத்)** என்கிற மனுச்லோகத்தை பெருமாள் வாலியிடம் உதாஹரித்துக் காட்டினார். ராஜதண்டத்தால் குற்றம்நீங்கி சுத்திபெறலாம். அதனால் (யதி) ராஜனிடம் சென்று அவரை முறையிடுகிறார்.

ஹா ஹந்த ஹந்த— **"हा हन्त हन्त भवतश्चरणारविन्दद्वन्द्वं कदानु भविता विषयो ममाक्ष्णोः" (ஹா ஹந்த ஹந்த பவதः சரணாரவிந்த த்வந்த்வம் கதாநுபவிதா விஷயோ மமாக்ஷ்ணோ:)** என்று ஆழ்வான் அதிமாநுஷ ஸ்தவத்தில் கதறியுள்ளதை நினைக்கிறார். மரங்கள் புற்பூண்டுகள் முதலியனவும் தங்கள் உள்ளிருள் (தமஸ்) எல்லாம் நீங்கி நற்பாலுககு உய்ந்த ஸமயத்தையும் இழந்த எனக்கு என்றுகொலோ உம் தாமரையடியிலை கண்ணுக்கு விஷயமாவது என்று ஆழ்வான் "ஆ, ஆ, மோசம் போனேனே, மோசம் போனேனே" என்று கதறினார். இங்கே ஜகத்குருபீடத்திலிருக்கும் நான் இப்படி அபசாரசிலனாக இருக்கிறேனே என்று கதறுகிறார். "கஷ்டம் கஷ்டதரம் கஷ்டதமம்" என்று ஸ்ரீபிள்ளைலோகம்ஜீயர் உரை.

(மநஸா)—மனத்தினாலும்.கரணத்ரயங்களின் ஸரூபத்வமார்ஜவம் என்பர் **"करणत्रयसारूप्यमिति सौख्यरसायनम्" (கரணத்ரய ஸாரூப்யம் இதி ஸௌக்ய ரஸாயனம்).** மூன்று கரணங்களும் கெடுதலிலேயே ப்ரவர்த்திப்பதென்கிற ஒரேவிதமான ஸாரூப்யம் என்னிடமுளது.

க்ரியயாச—என்னுமதோடு நிற்கிறதில்லை. செய்யவும் செய்கிறேன். செய்யக்கூசுவதில்லை. 'வாசாச'— ஜகத்குருவாகப் பிறருக்கு உபதேசம் செய்யும் வாக்கினாலும் தீதே பேசுகிறேன். வெளிக்காவது ஸாதுவேஷம் போடக்கூடாதோ? வாயாலும் பாபமே பேசுகிறேன். **"अरुन्मुखान् यतीन् सालावृकेभ्यः प्रायच्छम्" (அருந்முகாந்யதீந் ஸாலாவ்ருகேப்ய: ப்ராயச்சம்)** (பகவந்நாமங்களை உச்சரியாமலிருக்கும் யதிகளை ஓநாய்களுக்கு தின்னக்கொடுத்தேன்) என்று ப்ரதர்தந வித்யையில் இந்திரன் கூறினான். க்ருஹஸ்தர் ஏதாவது ஸம்ஸாரவார்த்தைகள் பேசினால் பேசட்டும். ஸந்யாஸிகள் வம்பு பேசுவது மிகக்கொடியது என்று அந்த ச்ருதியின் கருத்து.

'யோஹம்'— 'ஸோஹம்' பெருமாளை வர்ணிக்கத்தொடங்கிய வேதம் இப்படி அப்படி என்று வர்ணிக்கமுடியாமல் "योऽसि सोऽसि" (யோஸி ஸோஸி) "நீர் யாரோ அவர்தான் நீர்" என்றது. என்நிமை வர்ணனைக்கு உள்ளடங்காது. நான் யாவனோ அவன்தான் நான். எனக்கு உவமையில்லை. பெருமாள் குணங்கள் எண்ணிலடங்காததால் அவரை வர்ணிக்க இயலாது. என்தோஷங்கள் எண்ணற்றவையாதலாலும், குணம் சூந்ய மானதாலும் என்னையும் வர்ணிக்கமுடியாது. 'வர்ணனைக்கு இயலாத நான்'

த்ரிவிதாப சாராங்—மூன்றுவிதமான கொடிய அபசாரங்களையும். அபசாரங்கள் தர்மத்தைப் பாதிப்பவை, நிவ்ருத்தி தர்மநிஷ்டராயிருந்தாலும் பாகவதாபசாரமிருந்தால் முக்திபலத்திற்கு ப்ரதிபந்தக மேற்படுவது நிச்சயமென்றுர் ஸூத்ரகாரர் ஸாதனாத்யாயத்தின் முடிவு ஸூத்ரத்தில். "त्रस्य ब्रह्मविदागसः" (த்ரஸ்ய ப்ரஹ்ம விதாகஸ:) "अनघतत्त्व विन्निग्रहः" (அநக தத்வ விந்நிக்ரஹ:) என்றபடி பாகவதாபசாரத் திற்கு நடுங்கவேண்டும். நான் ஒன்றுக்கும் பயப்படுவதில்லையே.

'ஸததம் சராமி ஸோஹம்'—ஓயாமல் எக்காலமும் அநுஷ்டிக்கிறேனே. "ரமணீய சரணராய் இருக்கவேண்டும், கபூயசரணராயிருக்கலாகாது" என்பர். அபசரணமே என்சரணம். அப்படி அபசரணத்தையே சரண மாக, சீலமாகவுடைய நான்.

'தவஅப்ரியகர:'—உமது திருவுள்ளம் நோவச்செய்து கொண்டு. பத்தாவது அத்யாயம் இரண்டாம் பாதம் பதினூறுவது அதிகரணத்தில் தர்சபூர்ணமாஸத்தில் வைச்வாநரேஷ்டியில் "ஒருவயதுள்ள பசுமாட்டை தக்ஷிணையாகக்கொடுக்கவேண்டும்" என்று விதிக்கப்பட்டிருப்பதில் தக்ஷிணை யைக்கொடுத்து யாகத்தில் ஊழியமாக ரித்விக்கை க்ரயம் வாங்கவேண்டிய தாகையால் ரித்விக்குக்குத்தான் இந்த தக்ஷிணை கொடுக்கவேண்டுமென்று பூர்வபக்ஷம் வர, ரித்விக்கான ஆசார்யன் புரோஹிதன் த்வேஷ்யனாக மாட்டான். "ऋत्विगाचार्यौ नाभिचरितव्यौ" (ரித்விகாசார்யௌ நாபி சரிதவ்யௌ) என்று சாஸ்த்ரமிருப்பது ப்ரஸித்தமல்லவா. ஆகையால் த்வேஷ்யனுயிருப்பவன் யாதாமொருவனுக்கு அந்த தக்ஷிணையை அநுஷ் டத்தின் பொருட்டுக் கொடுக்கவேண்டும் என்று தீர்மானித்தார்கள். நான் ஆசார்யரான உமக்கே அப்ரியனாகிறேன்; த்வேஷ்யனாகிறேன் உம் முடைய திவ்யாக்ஞையை உல்லங்கநம் செய்து உமக்கு த்ரோஹியா கிறேன் என்று நிந்தை.

'ப்ரியக்ருத்வதேவ காலம் நயாமி'—உம் திருவுள்ளப்படி நடந்து உம்மை உகப்பிக்குமவனைப்போல் காலத்தைக் கழிக்கிறேன். இதுதான் உண்மையில் நான் செய்யும் காலக்ஷேபம், என்று ஆத்மநிந்தை.

'ததோஸ்மி மூர்க்க:'—ஆகையால் நான் மூர்க்கனே. இப்படி ஊஹாபோஹங்கள் செய்து தாம் மூர்க்கரென்று தீர்மானித்துக் கொள்ளுகிறார்.

पापे कृते यदि भवन्ति भयानुताप-
लज्जाः पुनः करणमस्य कथं घटेत।
मोहेन मे न भवतीह भयादिलेशः
तस्मात्पुनः पुनरघं यतिराज कुर्वे॥ ११॥

11. பாபே க்ருதே யதிபவந்தி பயாநுதாப
லஜ்ஜா: புந: கரணமஸ்ய கதம் கடேத।
மோஹேந மே ந பவதீஹ பயாதிலேச:
தஸ்மாத் புந: புநரகம் யதிராஜ குர்வே॥

பதவுரை:—யதிராஜ!—யதிராஜனே, பாபே க்ருதே—பாபம் செய்யப் பட்டவளவில், பயாநுதாப லஜ்ஜா:—என்ன தீங்கு விளையுமோ என்கிற பயம், தீமை செய்துவிட்டோமே என்கிற பச்சாத்தாபம் (வருத்தம்) வெட்கம் ஆகிய இவை, யதி பவந்தி—உண்டாகுமேயானால் (இருக்குமேயாகில்), அஸ்ய—இவ்விதமான செய்கையை, புந: கரணம்—திரும்பவும் செய்வதென்பது, கதம் கடேத—எப்படிக்கூடும்? மோஹேந-மோஹத்தால், மதிமயக்கத்தால், மே—எனக்கு, இஹ—இந்த விஷயத்தில், (பாபம் செய்தலில்) பயாதிலேச:—பயம் முதலியதுகள் ஈஷத்தேனும், ந பவதி—உண்டாகிறதேயில்லை, தஸ்மாத்-அதனால், அஹம்—நான், புந: புந:-திரும்பவும் திரும்பவும், அகம்—தீங்கை, குர்வே—செய்கிறேன்.

பதினோராவது அத்யாயம் தந்த்ராத்யாயம். தந்த்ரம் என்பது ஒரு கர்மத்தை ஒரேதடவை அநுஷ்டிப்பதால் இரண்டு கார்யங்களுக்கு உபயோகப்படுவதைச் சொல்லும். தந்த்ரம் என்பது ஸக்ருத்க்ருதம் என்று பொருளுள்ளது. ப்ரஹ்மநிஷ்டர் நித்யகர்மங்களை அநுஷ்டிப்பது அவர்கள் பக்திநிஷ்டைக்கும் அங்கமாகும். பக்தியோகத்திற்காக ஒருதடவை யநுஷ்டிப்பது, வர்ணாச்ரம தர்மத்திற்காக மற்றொருதடவை அநுஷ்டிப்பது என்பதில்லை. **"सर्वथापि त एव उभयलिङ्गात्"** (ஸர்வதாபி த எவ உபயலிங்காத்) என்னும் ப்ரஹ்ம ஸூத்ரத்தால் இது காட்டப்பட்டது.

ஒரேதடவை செய்வது தந்த்ரம். பலதடவை செய்வது ஆவ்ருத்தி. ஏழு முதல் பத்து அத்யாயங்கள்வரை விக்ருதிகளில் ப்ரக்ருதிகளிலிருந்து தர்மங்களை வாங்கிக்கொள்ளவதைப்பற்றின விசாரம். தந்த்ரமா? ஆவ்ருத்தியா? என்கிற விசாரம் ப்ரக்ருதி விக்ருதி ஆகிய இரண்டு கர்மங்களுக்கும் பொது. "தான்யத்தை உலக்கையால் உரலில்குத்தி உமியை எடுக்கவேணும்" என்பது இரண்டிலுமுண்டு. அது ஒருதடவையா பலதடவையா என்கிற விசாரம் இரண்டிற்கும் பொது. உலக்கையின் ஒருகுத்தினால் உமி போவதில்லை. உமியைப்போக்கி மாவு ஆக்கி புரோடாசத்தைத் தட்டவேணும். இந்த மாவாக்கும் த்ருஷ்டப்ரயோஜனத்திற்கு உலக்கைக் குத்துகளை திரும்பவும் திரும்பவும் மாவாகும் வரையில் ஆவ்ருத்தி செய்யவேணும். ப்ரயாஜங்களென்னும் அத்ருஷ்டப்ரயோஜனமான அங்கங்களை ஒருதடவை செய்தால் போதும். அது அத்ருஷ்டத்திற்காக "सकृत्कृतः शास्त्रार्थः"(ஸக்ருத்க்ருதः சாஸ்த்ரார்த்தः) அத்ருஷ்டப்ரயோஜனத்திற்காக சாஸ்த்ரம் செய்யவிதிப்பதை ஒருதடவை செய்தால் போதும் என்பது ஸாமான்ய ந்யாயம். கார்யகர்மங்களைப் பலதடவை செய்தால் அதிகப்பலம் கிடைக்கும். "सकृदेव प्रपन्नाय" (ஸக்ருதேவ ப்ரபந்நாய) ப்ரபத்தி என்னும் சாஸ்த்ரார்த்தத்திற்கு ஓரநுஷ்டாநம். "आवृत्तिरसकृत्" (ஆவ்ருத்திரஸக்ருத்) என்று பகவான் விஷயமான பக்தி ஸ்மரணத்திற்கு யாவதாயுஷம் ஆவர்த்திக்கவேண்டுமென்று ஸூத்ரம். "நான் பாபம் செய்தாலும் தந்த்ரமாக ஒருதடவை செய்துவிட்டு விடுகிறேனோ? திரும்பவும் திரும்பவும் ஆவ்ருத்தி செய்கிறேனே" என்று தந்த்ரம் ஆவ்ருத்தி என்னும் பத்தாவது அத்யாய விஷயத்தை இங்கே ஸூசிப்பது ஸ்பஷ்டமென்பது ரஸிகர் ரஸிக்கத்தக்க விஷயமாகும். 'புநः புநः கரணம்' என்பது தந்த்ரத்திற்கு எதிர்த்தட்டான ஆவ்ருத்தி. சாஸ்த்ரார்த்தமான அத்ருஷ்டத்திற்காக என்று அநுஷ்டிப்பதற்கல்லவோ ஒரேதடவை என்னும் 'ஸக்ருத்' மர்யாதை. ருசியினால் ஸ்வேச்சையினால் அதிக சிற்றின்பத்திற்கென்று பாபம் செய்கையில் அதில் ஆவ்ருத்தியே போக்யமாயிருக்குமென்று பாபத்தின் புநः புநः கரணத்தைக் கூறுகிறார். பதினொருவது அத்யாயத்தின் நான்காவது பாதத்தில் "तस्य पुनः प्रयोगात् मन्त्रस्य च तत्स्मरणत्वात् पुनः प्रयोगः" (தஸ்ய புநः ப்ரயோகாத் மந்த்ரஸ்ய ச தத்ஸ்மரணத்வாத் புநः ப்ரயோகः) என்னும் வேதப்ரோக்தங்களை "मन्त्राभ्यासः कर्मणः पुनः प्रयोगात्" (மந்த்ராப்யாஸः கர்மணः புநः ப்ரயோகாத்) என்றது முதலிய ஸூத்ரங்கள் விஶதமாக்குகின்றன.

'பாபேக்ருதே'–"**कृते पापेऽनुतापो वै यस्य पुंसः प्रजायते। प्रायश्चित्तं तु तस्यैकं हरिसंस्मरणं स्मृतम्॥**" (**க்ருதே பாபேऽநுதாபோ வை யஸ்ய பும்ஸ: ப்ரஜாயதே। ப்ராயச்சித்தம் து தஸ்யைகம் ஹரிஸம்ஸ்மரணம் ஸ்ம்ருதம்॥**) என்று ஸ்ரீவிஷ்ணுபுராணம் இரண்டாவது அம்சம் ஆருவது அத்யாயத்தில் உள்ளது. அந்தச்லோகத்தை ஸ்மரித்து, அதே பதங்களைக்கொண்டு தொடங்குகிருர். ஆனுல் ருஷிபேசிய க்ரமப்படி பாவியேனும் பேசலாமோவென்று நினைத்து க்ரமத்தை மாற்றுகிருர். அநுதாபமுள்ளவனுக்குத்தான் ப்ராயச்சித்தத்தில் அதிகாரம். ஹரிஸ்மரணம் ப்ராயச்சித்தமே; ஆனுலும் அநுதாபம் இருந்துதிரவேணும். என்று ஸ்ரீவிஷ்ணுசித்தர் வ்யாக்யானம். 'க்ருதே' என்ருல் ஒருதடவை செய்யப்பட்டவளவில் என்று ஆகலாம். ஒருதடவை செய்தால் மறுதடவை செய்யவேண்டியதில்லை என்கிற ந்யாயம் தர்மாநுஷ்டான விஷயம். பாபம் செய்வது சாஸ்த்ரார்த்தமல்ல. பாபத்தை ஒருதடவைகூட செய்யக்கூடாது. சாஸ்த்ரத்தைமீறி ஸ்வதந்த்ரனுகச் செய்யத்துணிந்தபோதுகூட 'ஸக்ருத்' என்கிற சாஸ்த்ர நியதியுண்டோ? என்பது இதில் ரஸம்.

'**பயாநுதாப லஜ்ஜா:**'—சிக்ஷை வருமோ என்கிற பயம். பாபம் செய்தோமே என்கிற பச்சாத்தாபம். பாபியான நான் எங்ஙனே ஜனங்கள் முகத்தில் விழிப்பது, தலைகாட்டுவது என்கிற வெட்கம். "**धिगशुचिमविनीतं निर्दयं (निर्भयं) मामलज्जम्**" (**திகசுசிமவிநீதம் நிர்தயம் (நிர்ப்பயம்) மாமலஜ்ஜம்**) என்கிறபடி பாபம் செய்தும் பயமும் அநுதாபமும் லஜ்ஜையும் இல்லாதிருக்கிறது மிகவும் தீமை. பாபம் செய்ததும் லஜ்ஜையும் அநுதாபமும் பின்னொருதடவைகூட பாபம் செய்கிறதில்லை என்கிற உபரதியும் (நிறுத்தலும்) வேணும். "**अनुतापादुपरमात्प्रायश्चित्तोन्मुखत्वतः**" (**அநுதாபாதுபரமாத் ப்ராயச்சித்தோந்முகத்வத:**) என்பர். இவை பாபத்தை லகுப்படுத்திக்கழிக்க உபாயங்கள்.

'**யதி பவந்தி**'—உண்டாகுமேயானுல். '**அஸ்ய**'— இந்தப் பாபத்தை. பாபத்தை இன்னதென்று குறிப்பிட்டுச்சொல்லக்கூட நாவெழும்பவில்லை, பொதுவான பேச்சே முதலில் இங்கே. இன்னதென்று குறிப்பிட்டுப் பேசக்கூடாததால் 'இது' என்று பொதுவானபேச்சு. "பேதை பாலகன் அது ஆகும்" என்ருர் போல. 'இது' என்பதால் செய்த பாபம் எதிரே நிற்கிறது என்றும் பொருள் கிடைக்கும்.

'**புந: கரணம்**'—இரண்டாவது தடவை செய்தால் ஆவ்ருத்தி. நினைப்பதோடு நிற்காமல் செய்து தீருவது இங்கே புந:கரணம். நான்காவது பாதத்தில் "புந: புந: குர்வே" என்கிருர்.

**'கதம் கடேந'**—எப்படிக்கூடும்? பயம், அநுதாபம், லஜ்ஜை இவைகள் இருந்தால் அதைத்திரும்பவும் செய்வரோ? மறுபடியும் மறுபடியும் செய்வதால் நிறுத்துவதற்குக்காரணமான இவற்றின்லேசமுமில்லையென்று தீர்மானம். **"विरुद्धकार्यसत्वात् कारणाभावः" "व्यापक विरुद्धोपलब्धिः" (விருத்தகார்யஸத்வாத் காரணுபாவ:, — வ்யாபகவிருத்தோ பலப்தி:)** பாபத்தின் உபரதி, நிறுத்துதல் என்ற கார்யமில்லாததால் நிறுத்துவதற்குக்காரணங்களான இவைகளின் லேசமுமில்லையென்பது திண்ணம்.

**'மோஹேந'**—மோஹத்தால்; பாபருசி வெறிமயக்கத்தால் விவேகம் இருள் மூடிப்போய், புகையால் அக்நிபோலும், அழுக்கால் கண்ணுடி போலும், கர்ப்பப்பையினுல் கர்ப்பம்போலும் ஜ்ஞாநம் மூடித்தலை யெடுக்கமாளாமல் அழுந்திப்போய் விட்டது. பயாநுதாபலஜ்ஜைகள் ஏன் உண்டாகவில்லை என்று கேட்பீரோ? அவை உண்டாகாமற்செய்யும் காரணம் மோஹமென்னும் இருள் சூழ்ந்திருப்பதே. பாபருசி என்னும் விகாரம், வெறி, மோஹம் மண்டிப்போய்விட்டது.

**மே**—எனக்கு; **பயாதிலேஶ:**— மூன்றுமுண்டாக வேண்டாம். ஒன்றில் துளியாவது உண்டாகவில்லையே. **'ந பவதி இஹ'**— இந்த தர்மக்ஷேத்ர மான கோயிலிலும் ஸந்யாஸியான எனக்கும் ஸத்வம் தலையெடுக்காமல் மோஹம் மூடுகிறதே. **"पीडयन्ते गृहिणः कथं नु"(பீட்யந்தே க்ருஹிண: கதம் நு)** ஸம்ஸாரிகள் என்ன பாடுபடுவரோ?

**'தஸ்மாத் புந:'**—அதனுலேயல்லவோ, இம்மூன்றின் லேசமுமில்லாத காரணத்தினுலல்லவோ, என்றும் அந்வயிக்கலாம். புந: கரணம் ஸம்ப விக்குமோ என்று முதலில் கேட்டதற்கு, புந: கரணம் மட்டுமல்ல, புந: புந: கரணமும் ஸம்பவிக்கலாம் என்பதை ஸ்தாபிப்பதாகும்.

**'புந: புந:'**— திரும்பவும் திரும்பவும்; இத்தனைதடவை என்று கணக் கில்லை. சப்தத்தால் இரண்டு தடவை வீப்ஸை செய்வதற்கு எண்ணற்ற அநேகம் தடவைகள் என்றுபொருள்.

**'அகம் குர்வே'**—பாபத்தை செய்கிறேன். என்சந்தோஷத்திற்கே செய்கிறேன். செய்து சந்தோஷிக்கிறேன். ஆத்மநேபதப்ரயோகம் அழகு

अन्तर्बहिस्सकलवस्तुषु सन्तमीशं
अन्धः पुरस्स्थितमिवाहमवीक्षमाणः।
कन्दर्पवश्यहृदयः सततं भवामि
हन्त त्वदग्रगमनस्य यतीन्द्र नार्हः॥१२॥

12. அந்தர் பஹிஸ்ஸகலவஸ்துஷு ஸந்தமீசம்
அந்த: புரஸ்ஸ்த்திதமிவாஹ மவீக்ஷமாண:।
கந்தர்ப்ப வச்யஹ்ருதய: ஸததம் பவாமி
ஹந்த த்வதக்ரகமநஸ்ய யதீந்த்ர! நார்ஹ:॥

பதவுரை:—ஸகல வஸ்துஷு—எல்லாப் பொருள்களிலும், அந்த:—உள்ளேயும், பஹி:—வெளியிலும், ஸந்தம்—இருக்கிற, ஈசம்—ஈச்வரனை, அந்த:—குருடன், புரஸ்த்திதம் இவ—எதிரே நிற்பவனைப் (பார்க்காதது) போல, அஹம்—நான், அவீக்ஷமாண:—பார்க்காமல், ஸததம்—எப்பொழுதும், கந்தர்ப்பவச்ய ஹ்ருதய:—மன்மதனுக்கு வசப்பட்ட மனமுடையவனுகவே, பவாமி—இருக்கிறேன், யதீந்த்ர—மனத்தையடக்கிய யதிகளுக்கு அக்ரகண்யரே, ஹந்த—ஐயோ, த்வதக்ரகமநஸ்ய—உம் எதிரில் செல்ல, (அஹம்—நான்,) நார்ஹ:—யோக்யனல்லேன்.

பனிரண்டாவது அத்யாயம் ப்ரஸங்கம் என்பதைப்பற்றியது. இரண்டு கார்யங்களுக்கும் உபயோகப்படுவதையுத்தேசித்து ஒரே தடவை தந்த்ரமாக அநுஷ்டிக்கும் கர்மம் இரண்டுக்கும் உபயோகப்பட்டு உபகரிக்கிறதென்று முன் அத்யாயத்தில் கூறப்பட்டது. இரண்டு கர்மங்களையும் உத்தேசிக்காமல் ஒரே கர்மத்தை மட்டும் உத்தேசித்துச்செய்ய அதேயிடத்தில் செய்யப்படும் மற்றொரு கர்மத்திற்கும் இதற்கென்று எண்ணிச்செய்யாமற் போனாலும் தானாக (ப்ராஸங்கிகமாக) உபயோகப்படுவதை ப்ரஸங்கமென்பர். இரண்டையும் உத்தேசித்து ஒரேதடவையநுஷ்டிப்பது தந்த்ரம். ஒன்றையே உத்தேசித்துச்செய்தது மற்றொன்றுக்கும் தானாக (அதற்கென்று உத்தேசிக்காமல் போனாலும்) உபயோகப்படுவது ப்ரஸங்கம். வீட்டு வாசல்திண்ணையில் வீட்டுத்திண்ணையின் ப்ரகாசத்திற்காக வைக்கப்பட்ட தீபம் தெருவில் போகிறவர்களுக்கும் தெருவுக்கும் வெளிச்சத்தைத்தருவது போல. அவர்களுக்கென்று உத்தேசித்து வைத்ததீபமல்ல, ஆனாலும் ஒளியின் வ்யாப்தி அந்ததேசத்திலும் பரவியிருப்பதால் அது வழிப்போக்கருக்கும் உபயோகப்படுகிறது. ஸோமயாகத்திற்கென்று உத்தேசித்து அமைத்த வேதி இஷ்டிஹவிஸ்ஸுக்களுக்கும் வேதியாகும்.

பெருமாள் எங்கும் ஜ்யோதிஸ்ஸாக வ்யாபித்திருக்கிறார். உள்ளும் வெளியிலும் வ்யாபித்திருக்கிறார். நாம் மனம், கண் முதலியவற்றால் மற்ற பொருள்களைக் காண்கிறோம். நாம் காணும் மற்ற பொருள்களுக்கு உள்ளும் புறமும் பெருமாள் வர்த்திக்கிறார். பெருமாளைப் பார்க்கவேண்டுமென்ற உத்தேசமில்லாமற்போனாலும் மற்றபொருள்களைப் பார்க்கையில் தாமாக ஜ்வலிக்கும் பெருமாளையும் ப்ராஸங்கிகமாகவாவது பாவியேன் பார்க்கக்கூடாதோ? ப்ராஸங்கிகமாகக்கூடப் பார்க்காமல் ஸாரதமமான அவரை நீக்கி அஸாரதமமான மற்றபொருள்களையே பார்க்கிறேனே என்று இங்கே ப்ரஸங்காத்யாய ஸூசனத்தில் திருவுள்ளம். எங்கும் ப்ரகாசிக்கும் பெருமாளைப் பார்க்காமலிருப்பது என்பதுதான் கடினம், பார்ப்பது மிக எளிது. வேணுமென்று அவரைப் பார்க்கக்கூடாதென்று கண்ணைமூடிக்கொண்டு குருடரைப்போல இருந்தாலொழிய அவரைக் காணாமலிருக்கமுடியாது. "கண்ணுள்ளே நிற்கும் காதன்மையால் தொழில்; எண்ணினும் வரும், என்னினி வேண்டுவம், மண்ணும் நீருமெரியும் நல் வாயுவும் விண்ணுமாய் விரியும் எம்பிரானையே" என்ற பாசுரம் திருவுள்ளத்திலோடுகிறது. கண்ணுள்ளே நிற்பதைக்காட்டுவது அந்தரதிகரண விஷயவாக்யம்.

அந்தராதித்யனிலும் அந்தச்சக்ஷுஸ்ஸிலும் இருக்கிற அந்த புருஷன் மண் முதலிய ஸர்வ ப்ரபஞ்சமாக விரிந்து எங்கும் ப்ரகாசிப்பவன். **"अन्तर्बहिश्च तत्सर्वं व्याप्य नारायणः स्थितः" (அந்தர்பஹிச்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்த்தித:)** என்கிற ச்ருதியையும் நினைத்து "அந்தர்பஹி:" என்று தொடங்கி 'தத்ஸர்வம்' என்பதை 'ஸகலவஸ்துஷு' என்றும், 'ஸ்த்தித:' என்கிற ச்ருதிபதத்தை ஸந்தம் என்றும் வைக்கிறார். மன்மதனுக்கும் மன்மதனான அழகுக்கடலான பெருமாள் சேதனன் எப்பொழுதேனும் எந்த வ்யாஜத்தாலாவது என்னைக்காண ஆசைப்படானோ, துளி ஆசைப்பட்டால் உடனே காட்சி தருவோமென்று மிக்க ஆசையுடன் காத்துக்கொண்டிருக்கிறார். **"दिदृक्षा दृश्यत्वात्" (தித்ருக்ஷா த்ருச்யத்வாத்)** என்று ரத்னாவளி. 'எண்ணினும் வரும்' என்ற ஸௌலப்ய மிகுதியில் நான் எண்ணவேணுமே; தித்ருக்ஷா (காணவாசை) துளி இருந்தால் எதிரில் புலப்பட ஸஜ்ஜமே; 'எங்குமுளன் கண்ணன்' என்றல்லவோ அவாவுள்ள சிசுவான ப்ரஹ்லாதர் உறுதிச்சொல். **"हरिः सर्वत्र दृश्यते" (ஹரி:ஸர்வத்ர த்ருச்யதே)** என்ற அவர் ப்ரதிஜ்ஞை ஸத்யமென்று காட்டவல்லவோ ஸ்தம்பத்தைப் பிளந்து கொண்டு வெளிவந்து பெருமாள் எங்கும் ப்ரகாசிக்கிறார். நான் தான் குருடன். நான்தான் காணநசையற்றவன். அல்பரூபங்களில்

காமத்தால் மன்மதவசனுகி அழகுக்கடலே ஸாக்ஷான்மன்மதமன்மதனைக் கண்ணெடுத்துப்பாராமலிருக்கிறேன் என்று ஆத்ம நிந்தை.

'ஸகலவஸ்துஷு'—எல்லா வஸ்துகளிலும்; நிரவயவங்களுக்குள் அந்தர்வ்யாப்தியில்லை என்று சொல்லுவரேல், அவர்களோடு கலகம் செய்யோம். 'ஸகல' என்பது 'அவயவமுள்ள' என்பதையும் சொல்லும். நிரவயவப்பொருள் நிஷ்கலம். நிரவயவத்தில் அந்தர் வ்யாப்தி இருந்தாலும் இல்லாதிருந்தாலும் அதனுலென்ன, ஒருவருக்கும் உத்வேகம் வேண்டாம்.

அந்தர்பஹி:—உள்ளும் புறமும். நெஞ்சத்தினுள் கோயில் கொண்டவனை மனத்தினுல் தர்சிக்கலாம். "मनसा तु विशुद्धेन" (மனஸா து விசுத்தேந) "दृश्यते त्वग्र्यया बुद्ध्या सूक्ष्मया सूक्ष्मदर्शिभिः" (த்ருச்யதே த்வக்ர்யயா புத்யா ஸூக்ஷ்மயா ஸூக்ஷ்ம தர்சிபி:) உள்ளே "विद्युल्लेखेव भास्वरा" (வித்யுல்லேகேவ பாஸ்வரா) என்று மின்னும் ஸர்வ சரீரியான பரமாத்மா ப்ரதான ப்ரதிதந்த்ரமாக யதிராஜன் ப்ரகாசப்படுத்திய ஸர்வசரீரத்வத்தை இங்கே பனிரண்டு அத்யாயங்கள் முடிகையில் ஸூசிக்கிறுர். "यदतः परो दिवो ज्योतिर्दीप्यते विश्वतः पृष्ठेषु अनूत्तमेषु उत्तमेषु वा" (யதத: பரோ திவோ ஜ்யோதிர் தீப்யதே விச்வத: ப்ருஷ்டேஷு அநூத்தமேஷு உத்தமேஷுவா) என்றபடி ஜ்வலிக்கும் விச்வவ்யாப்த ஜ்யோதிஸ் ஸு.

'ஸகல வஸ்துஷு'—எல்லாவஸ்துக்களிலும். அவன் உள்ளே உயிராயிருந்துதான் எப்பொருளும் வஸ்துவாகும், உளதாகும். ப்ரஹ்மாத்மகமாயில்லாவிடில் வஸ்துவாகாது. அவன் ஆத்மாவாய் உள்ளேயிருந்து முழுவதும் வ்யாபித்து அதை உளதாக்கவேணும். இதை ஸூசிக்கவே 'வஸ்து' என்கிறுர்.

'ஸந்தம்'—'ஸ்வத: ஸத்' அநந்யாதீந ஸத்தையுடையது அதுவே. "सन्मूलाः" (ஸந்மூலா:) என்று ஸத்வித்யை. எல்லாப்பொருள்களுக்கும் உயிராய் மூலமாய் ஆயதனமாய் ப்ரதிஷ்டையாய் ஓதப்பட்ட 'ஸத்' என்ற உபநிஷத் ப்ரஸித்தப்பொருள். "सहैव सन्तं न विजानन्ति देवाः"(ஸஹைவ ஸந்தம் ந விஜாநந்தி தேவா:) கூடவே அருகில், எதிரிலிருப்பதை தேவர்கள் (இந்திரியங்கள்) அறிகிறதில்லை.

'ஈசம்'— "समाने वृक्षे पुरुषो निमग्नः अनीशया शोचति मुह्यमानः। जुष्टं यदा पश्यत्यन्यमीशं" (ஸமாநே வ்ருக்ஷே புருஷோ நிமக்ந: அநீசயா சோசதி முஹ்யமான: । ஜுஷ்டம் யதா பச்யத்யந்யமீசம்) என்ற ச்ருதியில் ஓதப்பட்ட நெஞ்சிலுள்ள ஈச்வரப்பொருள். அந்த ச்ருதியை திருவுள்ளத்திற்கொண்டு இங்கே 'ஈசம்' என்கிறார். நாம் ஈச்வரன் தர்சனத்திற்கு ப்ரஹ்மபுரத்தில் அவர் ராஜதானியில் அவர் அரண்மனைக் குப் போகவேண்டியிருக்கும். அவர் நம் நெஞ்சிற்குள் கோயில் கொண்டிருக்கிறார். ஸ்ரீசங்கராசாரியரும் 'ஹ்ருதயாலயர்' என்று ஹார்த்தப் பெருமானை வர்ணித்தார். 'என் நெஞ்சம் கோயில் கொண்டான்' என்று அவர் அநுபவம். "வடதளமும் வைகுந்தமும் மதிள்துவராபதியும் இடவகைகள் இகழ்ந்திட்டு என்பால் இடவகை கொண்டனையே" என்றும், "பனிக்கடலுள் பள்ளிகோளைப் பழக விட்டோடிவந்து என் மனக்கடலுள் வாழவல்ல மாயமணாள நம்பி" என்றுமிறே விஷ்ணுவையே நெஞ்சிற் கொண்ட விஷ்ணுசித்தர் முதலிய அபியுக்தர்களின் ஹார்த்தாநுபவரஸம் இருக்கும்படி.

புர: ஸ்த்திதமிவ ஸந்தம்—எதிரே நிற்பதுபோலே நிறைந்து நிற்கும் பொருள்.

அந்த: அஹம் அவீக்ஷமாண:—கண்ணில்லாதவன் (பிறவிக்குருடன்) கண்ணுக்கெதிரேயுள்ளதையும் பார்க்கமாட்டான். அவாவிருந்தால், பெருமாள் கருணையால் சக்ஷுர் விஷயமாவார். ஆசையற்றிருப்பது சூன்யத் தன்மை. அத்யயநமாகிய சக்ஷுஸ்ஸால் பார்க்கலாம். மாம்ஸக்கண்ணால் காணமுடியாது. "न मांसचक्षुरभिवीक्षते तं" (ந மாம்ஸ சக்ஷுரபி வீக்ஷதே தம்) என்ற ச்ருதியிலுள்ள 'வீக்ஷ' தாதுவை ப்ரயோகிக்கிறார்.

'கந்தர்ப்பவச்யஹ்ருதய:'—வலுவில் நெஞ்சிற் புகுந்து நிற்கும் மன்மத மன்மதனான பெருமானைக் கண்ணெடுத்துப்பாராமல் விரோதியான காமனை நெஞ்சில் ஈசனாக வைத்து அவன் வசமாக நெஞ்சம் இருக்கிறபோது ஈசன் அனுக்ருகைக்கு இடமேது. த்வைராஜ்ய முண்டோ?

ஸததம் பவாமி—எக்காலத்தும் மன்மதன் ராஜ்யத்திற்கு ஓய்வில்லை. அவனே என் ஹ்ருதயத்தில் அந்தர்யாமியான ஈசன். ஹந்த—இது கொடுமை; அநியாயம். த்வதக்ரகமனஸ்ய—தேவரீர் திருவீதி எழுந்தருளும் உத்ஸவங்களிலும், அத்யாபக கோஷ்டிகளிலும் யதீச்வர ஸம்ச்ரிதன்போல முன் செல்ல. யதீந்த்ர—இந்திரியஜயமுள்ள ஸம்யமிகளுக்குள் முதல்வரே!

நார்ஹ:—யோக்யனல்லன். "मदनकदनैर्न क्लिश्यन्ते यतीश्वरसंश्रयाः" (மதநகதநைர்ந க்லிச்யந்தே யதீச்வரஸம்ச்ரயா:) என்பர். ஜைமினியின் பனிரண்டாவது அத்யாயம் கடைசி அதிகரணத்தில், "ரித்விக்காக யாகத்தை நடத்திவைக்க விப்ரர் மட்டும்தான் அர்ஹர். மற்ற த்விஜர்கள் அர்ஹரல்லர்' என்று தீர்மானம். "त्रयो वर्णाः..." (த்ரயோவர்ணா:....) என்று பூர்வபக்ஷ வார்த்திகம். விப்ரர்தான் அர்ஹர். மற்றவர் அர்ஹரல்லர் என்று ஸித்தாந்தம். இங்கு 'அஹம் நார்ஹ:' என்றுமுடிவு. இங்கே பனிரண்டாவது ச்லோகத்தின் முடிவில் இப்படி வர்ணிப்பது ரஸிக்கத் தக்கது. ஆத்மயாகத்தைச் செய்துவைக்கும் ரித்விக்குப் பதவிக்கு நான் அர்ஹனல்ல என்றும் ஸூசனம்.

तापत्रयीजनितदुःखनिपातिनोऽपि
देहस्थितौ मम रुचिस्तु न तन्निवृत्तौ
एतस्य कारणमहो मम पापमेव
नाथ त्वमेव हर तत् यतिराज शीघ्रम् ॥ १३ ॥

13. தாபத்ரயீஜநித து:க்க நிபாதிநோऽபி
தேஹ ஸ்த்திதௌ மம ருசிஸ்து ந தந்நிவ்ருத்தௌ ।
ஏதஸ்ய காரணமஹோ மம பாபமேவ
நாத! த்வமேவ ஹர தத் யதிராஜ! சீக்ரம் ॥

பதவுரை:—தாபத்ரயீஜநித து:க்க நிபாதிநோபி—ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் என்று மூன்றுவித தாபங்களாலுண்டாகும் துக்கத்தில் விழுந்து வருந்தினுலும், மம—எனக்கு, தேஹஸ்த்திதௌ—சரீரம் இருப்பதிலேயே, ருசி:—ஆசை, நது தந்நிவ்ருத்தௌ—அதை விடுவதில் ஆசையில்லை, ஏதஸ்ய—இதற்கு, காரணம்—ஹேது, அஹோ—ஐயோ, மம பாபமேவ—என் பாபமேதான், நாத—என் நாதனே!, யதிராஜ—யதிராஜரே, த்வமேவ—தேவரீரே, தத்—அந்த பாபத்தை, சீக்ரம்—விரைவில் ஹர—போக்கியருளவேணும்.

பதின்மூன்று முதல் பதினாறு வரையில் உள்ள நான்கு அத்யாயங்கள் தேவதோபாஸன காண்டமென்றும், ஸங்கர்ஷ காண்டமென்றும் சொல்லுவர். அந்த நான்கு அத்தியாயங்கள் எம்பெருமானார் காலத்திலேயே அகப்படவில்லை என்று தெரிகிறது. தத்வடீகையில், தேவதாகாண்டம் அகப்படவில்லை. அதன் விஷயங்கள் தெரியவில்லை என்று கூறப்பட்

டுள்ளது. "नाना वा देवता" (நாநா வா தேவதா) என்று அந்த காண்டத்தில் ஸூத்ரமிருப்பதாகப் பிறர்பாஷ்யத்திலிருந்தும் தெரிகிறது. அந்த தேவதோபாஸன காண்டத்தின் விவரங்கள் தெரியாததாலும், ஈச்வர சரீரமான மற்ற தேவதைகளை உபாஸிக்க முமுக்ஷுக்களுக்கு அதிகாரமில்லாததலாலும் ஆசார்யனென்னும்தேவதையை உபாஸிக்கும்படி "देवमिवाचार्यमुपासीत" (தேவமிவாசார்ய முபாஸீத) "आचार्यदेवो भव" (ஆசார்யதேவோ பவ) "यस्य देवे पराभक्तिः यथा देवे तथा गुरौ। तस्यैते कथिता ह्यर्थाः प्रकाशन्ते महात्मनः॥" (யஸ்ய தேவே பராபக்தி: யதா தேவே ததா குரௌ। தஸ்யைதே கதிதா ஹ்யர்த்தா: ப்ரகாசந்தே மஹாத்மந: ॥) என்றும், "आचार्यादिह देवतां समधिकामन्यां न मन्यामहे" (ஆசார்யாதிஹ தேவதாம் ஸமதிகாமந்யாம் ந மந்யாமஹே) என்றும் ஈச்வரனைப்போல் ஆசார்ய தேவதையையும் உபாஸிப்பதும் முமுக்ஷுக்களின் கடமையாதலாலும், இந்த ஸ்துதி முக்கியமாக ஆசார்ய தேவதை விஷயமாகையாலும் பதின்மூன்று முதல் பதினாறுவரை நான்கு ச்லோகங்களால் எம்பெருமானார் உபாஸனை யாகவும், பதினேழாவது ச்லோகத்தில் பெரியபெருமாளிடம் வேதாந்தங்களில்சொல்லப்பட்ட ஸகல குணங்களின் ஸமன்வயத்தைப்பேசி சாரீரக ஸமன்வயாத்யாயத்தை ஸூசித்து, பதினெட்டில், "लोकवत्तु लीलाकैवल्यं" (லோகவத்து லீலாகைவல்யம்) என்று தொடங்கி இரண்டாவது அத்யாயத்தில் காட்டிய பகவானுடைய தயையால் தான் பாபங்கள் க்ஷமிக்கப்பட அவை நசிக்கவேணுமென்றும், எம்பெருமானாருடைய ப்ரார்த்தனைக்கிணங்கி ஸ்ரீரங்கராஜன் நம்மை நம்முடைய பாபங்களிலிருந்து மோக்ஷமென்னும் உத்தமமான க்ஷேமத்தையளிப்பாராதலால் அவர் தயைக்கும் பெருமாள் தயைக்கும் உபாய பா (भा) வத்தில் விரோதமில்லையென்று அவிரோதத்தையும், பத்தொன்பதாவது ச்லோத்தில், எம்பெருமானார் திருவடிகளை ஆச்ரயிக்க ஸாதனம் தம் ஆசார்யரான ஸ்ரீசைலேசருடைய தயையேயென்றும், இருபதில், தம்மையும் தம் சரணாகதி ஸ்துதியையும் எம்பெருமானார் அங்கீகரித்தருளவேணுமென்று பலத்தையும் ப்ரார்த்தித்து அந்த பலத்தோடு துதினயத்தலைக்கட்டுகிறார்.

தாபத்ரயீஜநிததுக்கநிபாதிநோபி மம— மூன்றுவித தாபங்களாலுண்டாகும் துக்கங்களில் தள்ளப்பட்டு அதில் அழுந்தி இருந்தாலும். "तापत्रयातुरैरमृतत्वाय स एव जिज्ञास्यः" (தாபத்ரயாதுரைரம்ருவத்வாய ஸ ஏவ ஜிஜ்ஞாஸ்ய:) [மூன்றுவித தாபங்களால் வருந்தும் ஆதுரர்களால் மோக்ஷத்திற்காக ஸர்வேச்வரனான பகவானே விரும்பி

விசாரித்தறிந்து உபாஸிக்கத்தக்கவன்] என்ற ஸ்ரீபாஷ்யாரம்பத்திலுள்ள ஸ்ரீஸூக்தியை இங்கே நினைக்கிறது ஸ்பஷ்டம். துக்கம் கழிய வேண்டு மென்கிற ஆசை ப்ரஹ்மஜிஜ்ஞாஸைக்குக் கொண்டுபோய் விடும். "दुःखत्रयाभिघातात् जिज्ञासा" (துக்கத்ரயாபிகாதாத் ஜிஜ்ஞாஸா) என்பர்.

தேஹஸ்த்திதௌ ருசி: நது தந்நிவ்ருத்தௌ—தேஹமிருக்கவேண்டும் என்பதில் ஆசை குறையவில்லை; துக்கம் மட்டும்தொலைந்தே தீரவேண்டும். ஆனாலும் தேஹமிருக்கவேண்டுமென்று ஆசையிருக்கிறது. தேஹம் தொலைவதில் ஆசையில்லை. தேஹம் தொலைந்தாலல்லது துக்கம் தொலை யாதே என்பதை நன்றாய் அநுபவபர்யந்தமாக உணரவில்லை. "मघवन् मर्त्यं वा इदं शरीरं मृत्युनैव तदात्तं न ह वै सशरीरस्य सतः प्रियाप्रिययोरपहतिरस्ति" (மகவந் மர்த்யம் வா இதம் சரீரம் ம்ருத்யுநைவ ததாத்தம் நஹ வை ஸசரீரஸ்ய ஸத: ப்ரியா ப்ரிய யோரபஹதிரஸ்தி) என்று ப்ரஜாபதி இந்திரனுக்கு உபதேசித்ததை நினைக்கிறார். ப்ராக்ருத தேஹம்தானே ஸர்வதுக்கங்களுக்கும் மூலம். தேஹமும் வேண்டும், துக்கம் கூடாது என்று இரண்டையும் கோலுவது எப்படிக்கூடும்.

ஏதஸ்ய—இந்த துக்கம் தொலையவேணும், ஆனாலும் தேஹம் மட்டும் இருக்கவேணுமென்கிற இந்த ஆசைக்கு. அஹோ மம பாபமேவ காரணம்—ஐயோ என் பாபமே தான் ஹேது. யதிராஜ! யதிராஜனே. நாத—என் தெய்வமே. த்வமேவ—தேவரீரே தான்.

தத்ஹர—அதைப்போக்கவேணும். என் பாபத்தைப்போக்கி எனக்கு தேஹத்திலும் வைராக்ய முண்டாக வேணுமாக அநுக்ரஹிக்கவேணும். குருசரணத்தின் ஸஹாயமில்லாமல் இந்திரியங்களை ஜயிக்க முடியாதென் பதை ச்ருதிகீதை, "विजितहृषीकवाजिभिरदान्तमनस्तुरगम्" (விஜித ஹ்ருஷீகவாஜிபிரதாந்தமநஸ்துரகம்) என்று கூறியுள்ளது.

वाचामगोचरमहागुण देशिकाग्र्य कूराधिनाथकथिताखिलनैच्यपात्रम् ।
एषोऽहमेव न पुनर्जगतीदृशस्तत् रामानुजार्य करुणैव तु मद्गतिस्ते ॥ १४ ॥

14. வாசாமகோசரமஹாகுண! தேசிகாக்ர்ய!
கூராதிநாதகதிதாகிலநைச்ய பாத்ரம்।
ஏஷோஹமேவ ந புநர்ஜகதீத்ருசஸ்தத்
ராமாநுஜார்ய! கருணைவ து மத்கதிஸ்தே॥

பதவுரை:—வாசாமகோசரமஹாகுண! — வாக்குக்களுக்கு எட்டாத (கரணங்களுக்குள் அடங்காத) அரும்பெரும் குணவிசேஷ முடையவரே!, (வாசாமகோசர மஹாகுண—என்று தனிப்பதங்களாகவும் கொள்ளலாம்; "यतो वाचो निवर्तन्ते" (யதோ வாசோ நிவர்த்தந்தே) என்று ப்ரஹ்மத்தின் ஆனந்த குணத்தைப்பற்றி ச்ருதி பேசிற்று. அது மற்ற குணங்களுக்கும் உபலக்ஷணம்.) தேசிகாக்ர்ய—ஆசார்யர்களுக்குள் ச்ரேஷ்டரே! "अमुना तपनातिशायिभूम्ना यतिराजेन निबद्धनायकश्रीः। महती गुरुपङ्क्तिहारयष्टिः विबुधानां हृदयङ्गमा विभाति" (அமுநா தபநாதிசாயிபூம்நா யதிராஜேந நிபத்த நாயகஶ்ரீ:। மஹதீ குருபங்க்திஹாரயஷ்டி: விபுதாநாம் ஹ்ருதயங்கமா விபாதி ॥) என்று யதிராஜஸப்ததி. பெருமாள் தொடக்கமான குருபரம்பரையென்னும் ஹாரத்தில் யதிராஜனே நடுநாயகம்; பின்பு எத்தனை ஆசார்யர்கள் வந்து அந்த ஹாரத்தில் சேர்க்கப்பட்டாலும் என்றைக்கும் யதிராஜரே நடுநாயகம்.), கூராதிநாத கதிதாகிலநைச்யபாத்ரம்—கூரத்தாழ்வான் அருளிச்செய்த ஸகலநைச்ய வார்த்தைகளுக்கும் விஷயமான பாத்ரம், (வ்யக்தி), ஏஷ: அஹமேவ— இந்த நானேதான், ஜகதி—பொங்கோதம் சூழ்ந்த புவனியில், ஈத்ருச: புந:ந—என்போன்ற இவ்வித அதிகாரி இல்லவேயில்லை; இனி உண்டாகப் போவதுமில்லை; (நபூதோநபவிஷ்யதி) தத்—ஆகையால், ராமாநுஜார்ய— ராமாநுஜாசார்யரே!, தே கருணைவ து—தேவரீருடைய கருணையொன்றே தான், மத்கதி:—எனக்குக்கதி; எனக்குச்சரண்.

தேவதாகாண்டம் முதல் அத்யாயத்தில் தேவதா ஸ்வரூபத்தையும், இரண்டாவது அத்யாயத்தில் தேவதா விசேஷத்தையும் சொல்லியதென்பர். முன் பதின்மூன்றுவது ச்லோகத்தில் "अज्ञानध्वान्तरोधात् अघपरिहरणात्" (அஜ்ஞாநத்வாந்தரோதாத் அகபரிஹரணாத்) என்றபடி அஜ்ஞாந இருளைநீக்கி பாபத்தைக்கழித்து சுத்தியைத்தரும் ஆசார்ய ஸ்வரூபத்தைக் காட்டினார். இங்கே எம்பெருமானாருடைய "ராமாநுஜ" என்னும் சதுரக்ஷர நாமத்தைக்குறித்துக்காட்டி தேவதா விசேஷத்தைப் பேசுகிறார். தேவதையைப்போல் ஆசார்யனையுபாஸிக்கவேணுமென்பதற்கு, "अज्ञानध्वान्तरोधात्" (அஜ்ஞாநத்வாந்தரோதாத்) என்று தொடங்கிய ச்லோகத்தில் பல ஸாம்யங்கள் காட்டப்பட்டன.

"பெருமாளுடைய ஆனந்தாதி மஹாகுணங்கள் வாசாமகோசரம்" என்று ச்ருதி வர்ணித்தது. இவர் எம்பெருமானார் விஷயத்திலும் அது துல்யமென்கிறார். "कमप्याद्यं गुरुं वन्दे" (கமப்யாத்யம் குரும் வந்தே)

**"प्रथमगुरूकृपागृह्यमाण:"** (**ப்ரதமகுருக்ருபாக்ருஹ்யமாண:**) என்றபடி பெருமாள் ஆதிகுரு. எம்பெருமானார் குருபரம்பரையில் உத்தமர், நான் சிஷ்யபரம்பரையில் அதமன். என்னிலும் கடையோனில்லை என்று நைச்யாநுஸந்தாநம் செய்கிறார். கருணையல்லால் வேறு கதியில்லையென்று கருணைக்கு உத்தம்பகமான ஆகிஞ்சன்யாநந்யகதிகத்வங்களைப் பேசுகிறார்.

வாசாமகோசர– **"आगोचरं वचसां"** (**அகோசரம் வசஸாம்**) என்று சுத்தஜீவ விஷயமான பராசர வசனத்தையும் அநுஸரிக்கிறார். **"यतो वाचो निवर्तन्ते"** (**யதோவாசோ நிவர்த்தந்தே**) என்ற ச்ருதியை நினைத்து 'வசஸாம்' என்பதை 'வாசாம்' என்று வைத்தார். அந்த ச்ருதி பெருமாள் விஷயம். எம்பெருமானார் விஷயத்தில் இரண்டையும் கூட்டுகிறார்.

மஹாகுண–பெருமானுடைய குணத்தை ச்ருதி வாக்குக் கெட்டாததென்றது. அங்கே ஆநந்தகுணம் மற்ற கல்யாணகுணங்களுக்கு உபலக்ஷணம். மநுஷ்யானந்தம், தேவர்களானந்தம், அகாமஹதச்ரோத்ரியரான முக்தர் முக்ததுல்யரானந்தம், ப்ரஹ்மானந்தம் இவையெல்லாம் வேதபுருஷன் மீமாம்ஸைசெய்த ப்ரஹ்மானந்த மீமாம்ஸாப்ரகரணத்தையே இங்கே ஸூசிப்பது ரஸிக்கத்தக்கது.

'ஆசார்யோபாஸனம் என்பது பகவானிடம் அநந்யபோகத்தால் வ்யபிசரியாத பக்தி'— என்னும் கீதாசார்யனுபதேசிக்கும் ஸாதனங்கள், ஆசார்யப்ரபாவ மஹாகுணமீமாம்ஸை ப்ரஹ்மகுணமீமாம்ஸை என்ற மீமாம்ஸைகளைச்சேர்த்து தேவதோபாஸநாகாண்டத்தையும் ப்ரஹ்மஜ்ஞான காண்டத்தையும் சேர்த்து இந்த எட்டுச்லோகங்களிலும் எட்டு அத்யாயங்களையும் ஸூசிப்பதில் திருவுள்ளம்.

தேசிகாக்ர்ய— **"समित्पाणि: श्रोत्रियं ब्रह्मनिष्ठम्"** (**ஸமித்பாணி: ச்ரோத்ரியம் ப்ரஹ்மநிஷ்டம்**) என்றபடி ப்ரஹ்மநிஷ்டச்ரோத்ரியாசார்யோபஸதநத்தை ஸூசிக்கிறார்.

கூராதிநாத...பாத்ரம்—இந்த தயாபாத்ரம் அந்த தயாபாத்ரம் என்று என்னை உத்கோஷிப்பார்கள். உண்மையில் நைச்யபாத்ரம் என்பதே தகும் என்று ரஸமாக நைச்யாநுஸந்தானம். இந்த நைச்யாநுஸந்தானத்தின் பலம் தயாபாத்ரம், கருணாபாத்ரம் ஆவதென்று பின்பாதியில் ஸூசிக்கும் அழகு ரஸிக்கத்தக்கது. முக்குறும்பறுத்த கூரத்தாழ்வானிலும் நிர்தோஷரான மஹாகுணவான்களுண்டோ? அவர் கூறியநைச்யமெல்லாம் எனக்காகவே என்கிறார். எம்பெருமானாரை நாதன் என்றார் முன் ச்லோகத்தில்;

ஆழ்வானை இங்கே அதிநாதன் என்னும்படி அவருடைய வாசாமகோசர மான மகிமையை சூசிக்கிறார்.

அகிலநைச்யபாத்ரம்—எல்லா நைச்யங்களும், ஒவ்வொருநைச்யத்தில் முழுவதும், எல்லாம் எனக்குள் அடங்கும். வாசாமகோசரமுதல் பாத்ரம் வரையில் ஒரே பதமாகவைத்து முதல் பாதம் முழுவதையும் கூராதி நாதருக்கே மூன்று விசேஷணங்களாகக் கொள்வதும் ரஸம். அவர் மாசற்றவர்; ஸர்வோத்தமர் அவர். ''पापीयसोपि....नैव पापं पराक्रमितुमर्हति मामकीनं'' (பாபீயஸோபி....நைவபாபம் பராக்ரமிதுமர்ஹதி மாமகீனம்) என்றதெல்லாம் அவர் விஷயமாகாது.

ஏஷோஹமேவ— நாரதபகவான் ஸனத்குமாரரிடம் சென்றபோது ''பகவன்'' என்று கூப்பிட்டு ''நான் சோக ஸாகரத்தில் மூழ்கியுள்ளேன். அந்த என்னை இந்த சோகஸாகரத்தின் அக்கரையில் சேர்ப்பிக்கவேண்டும்'' என்று ப்ரார்த்தித்தார். அதேவிதமாக இங்கு எம்பெருமானாரை ''தேசிகாக்ர்ய'' என்று கூப்பிட்டு ''நீசனேன் நிறையொன்றுமிலேன்'' என்று முறையிட்டு, நாரதர் 'ஸோஹம் சோசாமி' என்றதுபோலே ''ஏஷோஹமேவ'' என்று பேசுவது ரஸிக்கத்தக்கது. ஸோஹம் என்றால் வேதாந்தத்தில் பெருமாளோடு ஸமாநாதிகரணமாக ''அஹம் ப்ரஹ்ம'' ''கடல்ஞாலம் செய்தேனும்யானே'' என்பது போலேயோ என்று பெருமாளுக்குள்ளே ஒன்றாகச் சொருகி முழுகுவதாக அர்த்தமாகலாம். இங்கே நைச்யத்தில் நராதமனாக அனுஸந்திக்குமிடத்தில் புருஷோத்தமனோடு ஸமாநாதிகரணப்பேச்சாக நினைக்கக்கூடிய சப்தம் அநுசிதம். ஆகையால் ச்ருதியில்போலே ''ஸோஹம்'' என்று இங்கு பேசாமல் ஏஷோஹம் என்கிறார் ''இந்த நானே'' எல்லோரும் ஜகதாசாரியன் ''தீபக்த்யாதி குணார்ணவ:'' என்று மகிழ்ந்து புகழ்ந்து பாடும் நானே என்கிறார்.

ந புனர் ஜகதி ஈத்ருச:-அந்வயமுகமாக அவதாரணத்தோடு அறுதியிடுதல்போதாது. ''நான்ய: பந்தா:'' ''அஹமேவநாந்ய:'' என்றது போல வ்யதிரேகமுகமாகவும் பேசி அகம்பனீயந்யாயமாக இதை உறுதிப்படுத்த வேணும். தயாபாத்ரம் என்பதும் நைச்யபாத்ரமாக இருப்பதால் ஸித்திப்பது. ''अनुत्तमं पात्रमिदं दयायाः'' (அநுத்தமம் பாத்ரமிதம் தயாயா:) என்றபடி நீசத்தன்மையின் கடைப்படியே தயாபாத்ரத்தில் உச்சிப்படியை அளிக்கும். அந்த ச்லோகத்தின் அனுபவமும் நாரதபகவானின் அநுபவமும் திருவுள்ளத்தில் கலந்தோடுகிறது. ஆளவந்தார் ச்லோகத்தில் நாரதர் சோகஸாகரத்தில் முழுகி அலைநீர்க்கடலிலழுந்தும் நாவாய்போல் தத்தளித்த அனுபவம் ஓடுகிறது. நாரதர் சோகஸாகரத்தில் முழுகிய

தைப்பேசியதுபோல் **"निमज्जतोऽनन्तभवार्णवान्तः"** (**நிமஜ்ஜதோநந்த பவார்ணவாந்த:**) என்று யாமுனார்யரும் அருளிச்செய்கிறார்.

"போனால் வராது, அகப்பட்ட மஹா லாபத்தை நழுவவிடாதேயும், என்னைப்போல் நீசனில்லை. என்னிலும் தயாபாத்ரமில்லை. ஸித்தமான இந்த உத்தமானந்தத்தைப் பரியஜித்து வேறு பிக்ஷாடநம் செய்ய வேண்டாம். என்னைக் கரையேற்றி உம்முடைய அபாரகருணையை ஸபலமாக்கிக் கொள்ளும்" இப்படி இந்த ச்லோகத்தில் ஆளவந்தார் ச்லோக மும் நெஞ்சில் ஓடுகிறதென்பது அடுத்த ச்லோகத்தில் "சுத்தாத்மயாமுன" என்று துடங்குவதாலும் நிச்சயமென்று ஸஹ்ருதய மனஸ்ஸாக்ஷிகமாகத் தட்டில்லை.

**தத்**—ஆகையால் கொள்வாரில்லாவிடில் கொடுப்பார் கொடைக்குணம் கானக நிலவாகும். உம் தயையை ப்ரகாசப்படுத்த உம் கருணைக்கடலை ஸபலமாக்க என்போன்ற நீசன் வேணும். என்னைக் காப்பாற்ற கருணை வருணாலயரான பெருமாள் போதாது. காரேய்கருணை இராமாநுசன் கருணை தான் என்னைக் காப்பாற்ற வல்லமையுள்ளது. **"कृतार्थोऽहं भविष्यामि तव चार्थः प्रकल्पते"** (**க்ருதார்த்தோஹம் பவிஷ்யாமி தவ சார்த்த: பரகல்பதே**)

**ராமானுஜார்ய**—தேவதாகாண்டத்தின் இரண்டாவது அத்யாயத்தில் தேவதா விசேஷத்தைப் பேசியதென்பர். இங்கே பெருமாளைத்தவிர ஆசார்ய தேவர் ஒருவரையே வழிபடுவதால் அந்த ஆசார்ய தேவருடைய நாமவிசேஷமாகிய சதுரக்ஷரீ நாமத்தைக் குறித்து தேவதாஹ்வானம் செய்கிறார். இங்கோரிடத்தில் ராமானுஜ என்று கூப்பிடுவது. முதல் ச்லோகத்தில் பரோக்ஷமாக நாம நிர்த்தேசம். இங்கேதான் ப்ரத்யக்ஷ ஆஹ்வானம் செய்கிறார். ராமாநுஜ காயத்ரியில் 'காரேய்கருணை இராமநுச' என்று அழைத்ததை அனுஸரித்து இங்கே "ராமாநுஜார்ய கருணைவ"என்று அந்த சப்தங்கள் வைக்கப்படுகின்றன. காயத்ரீ மந்த்ரத்தில் "ய:" என்று பரோக்ஷ நிர்த்தேசம்.

**தே கருணைவ**—உம் கருணை ஒன்றேதான். **மத்கதி**:-எனக்கு உய்யும் வழி. **தே கருணைவ**—எனக்கு உய்யும் வழி உபாயம் உன்கருணையே. **தே கருணா மத்கதிரேவ**—உம் கருணை என்னையே கதியாக உடையது என்னும் பொருளைக் கொண்டு ஆளவந்தார் ச்லோகத்தின் பூர்ணஸார்யம் ஸம்பாதிக்கலாம். எனக்கும் உம் கருணையே கதி. உம் கருணைக்கும் நானே கதி. என்போன்ற கதி வேறு கிடையாது.

शुद्धात्मयामुनगुरूत्तमकूरनाथ -
भट्टाख्यदेशिकवरोक्तसमस्तनैच्यम् ।
अद्यास्त्यसङ्कुचितमेव मयीह लोके
तस्मात् यतीन्द्र करुणैव तु मद्गतिस्ते ॥ १५ ॥

15. சுத்தாத்மயாமுந குருத்தம கூரநாத
பட்டாக்ய தேசிக வரோக்த ஸமஸ்த நைச்யம்।
அத்யாஸ்த்யஸங்குசிதமேவ மயீஹ லோகே
தஸ்மாத் யதீந்தர கருணைவ து மத்கதிஸ்தே ॥

பதவுரை:—சுத்தாத்ம யாமுன குருத்தம கூர நாத பட்டாக்ய தேசிக வரோக்த ஸமஸ்த நைச்யம்—பரிசுத்தமான மனமுடைய ஸ்ரீஆளவந்தாராலும், ஆசார்யோத்தமரான ஸ்ரீஆழ்வானாலும் பட்டரென்கிற ஆசார்ய ச்ரேஷ்டராலும் சொல்லப்பட்ட எல்லா நீசத்தன்மையும் (தோஷங்களும்) இஹ லோகே—இப்பூமண்டலத்திலேயே, அத்ய-இன்று, மயி-என்னிடத்தில். அஸங்குசிதமேவ—எள்ளளவும் சுருங்காமல், மிக்கவிரிவாய், அஸ்தி—இருக்கிறது; தஸ்மாத்—ஆகையால், யதீந்தர—யதிகட்கிறைவனே, தே கருணைவ மத்கதி:—உம் கிருபைதான் எனக்கு உத்தாரகமான கதி, உம்கருணைக்கு நானேதான் உத்தமமான கதி.

ஆழ்வான் அனுஸந்தித்த நைச்யங்கள் வேறு. என் நைச்யத்தை அளக்க அந்த பாத்ரம் போதாது. இன்னமும் நிறைய நைச்யங்களால் பூர்ணமான பாத்ரம் வேண்டும். அடியேனுடைய நைச்யபாத்ரம் நிரம்பியுளது. ஸ்ரீயாமுனர், ஆழ்வான், பட்டர் முதலிய தேசிகர் எல்லோருடைய எல்லா நைச்யானுஸந்தானங்களையும் ஒருமிக்கச் சேர்த்தால் நானெனும் நைச்யபாத்ரம் நிரம்புமென்று ஆத்மநிந்தை செய்யும் ரஸம். தேவதோபாஸநம் மூன்றாவது அத்யாயத்தின் விஷயமென்பர். நாம் சரணாகதியிலிழிபவர். ஆசாரியருடைய கருணையையே கதியாக வரிக்கிறோர். இந்திரன் தேவராஜன், ஸுரநாயகன். தேவதா காண்டத்திற்கு ஏற்கும்படி யதிராஜனை இங்கே ''யதீந்த்ர'' என்று அழைப்பதும் ரஸிக்கத்தக்கது.

சுத்தாத்ம—இவர் குறிக்கும் எல்லா ஆசிரியர்களுக்கும் அடைமொழியாவது ரஸம். இவர்களெல்லோரும் மாசற்றவர்கள். மனதை மலமறக் கழுவினவர்கள். அவர்களுக்கு உண்மையில் தோஷலேசமும் கிடையாது.

அவர்கள் தங்கள் சிஷ்யபரம்பரையில் அடியேன் ஒருவன் நீசதமனாக வரப்போகிறேனென்று எனக்காகவே அவ்வளவு நைச்யங்களெல்லாம் கருணையால் அநுஸந்தித்துள்ளார்கள் என்கிறார்.

யாமுன—"தூயபெருநீர் யமுனை" என்பர். அதுபோன்ற பரிசுத்தி. "दर्शनादेव साधवः" (தர்சநாதேவ ஸாதவ:) என்றபடி உலகத்தைப் பரிசுத்தமாக்கும் பெரியவர். குருத்தமகூரநாத — ஆசாரியரோத்தமரான ஆழ்வான்.

பட்டாக்யதேசிகவர—பட்டரென்று திருநாமமுடைய ஆசாரிய ச்ரேஷ்டர். (தேசிகவர என்று தனித்து யோஜித்து இதர தேசிகர்களையும் கொள்ளலாம்) உக்த—சொல்லிய, சுத்தாத்மாக்களான அவர்கள் விஷயத்தில் அவை எல்லாம் உக்திமாத்ரமேயொழிய உண்மையல்ல.

ஸமஸ்தநைச்யம்—எல்லா நீசபாவமும். இஹ லோகே அத்ய அஸ்தி மயி ஏவ—"को न्वस्मिन् साम्प्रतं लोके गुणवान्"(கோன்வஸ்மின் ஸாம்ப்ரதம் லோகே குணவான்)என்று ஸ்ரீராமாயண ஆரம்பத்தில் ஸ்ரீநாரத பகவானைக்குறித்து வால்மீகிமுனிவர் ப்ரச்னம் பண்ணினதை நினைத்து இங்கே குணஹீனரில், துர்க்குணமுடையாரில் இந்த உலகத்தில் இப்போது யார் முதல்வர் என்று ப்ரசனம் செய்தால் என்னையே பொறுக்கி எடுத்து நிர்த்தாரணம் செய்யவேண்டியிருக்குமென்று ஆத்ம நிந்தாரஸம். ஸங்க்ஷேப ப்ரச்னத்தில் "ஸாம்ப்ரதம்" என்பதை இங்கே 'அத்ய' என்றும், "அஸ்மின் லோகே" என்பதை "இஹலோகே" என்றும் வைக்கிறார். குணவானான புருஷோத்தமனுக்கு எதிர்த்தட்டு.

அஸங்குசிதமேவ அஸ்தி—"वलिभुजि शिशुपाले तादृगागस्करे वा गुण लवसहवासात् त्वत्क्षमा सङ्कुचन्ती। मयि गुणपरमाणूदन्तचिन्तानभिज्ञे विहरतु वरदासौ सर्वदा सार्वभौमी"(பலிபுஜி சிசுபாலே தாத்ருகாகஸ்கரே வா குணலவஸஹவாஸாத் த்வத்க்ஷமா ஸங்குசந்தீ। மயி குண பரமாணூதந்த சிந்தாநபிக்ஞே விஹரது வரதாஸௌ ஸர்வதா ஸார்வபௌமீ॥) என்ற பட்டர் நைச்ய ச்லோகத்தை அநுஸரிப்பது ஸ்பஷ்டம். ஸங்கோசம் என்பது சுருக்கம். அஸங்கோசம் என்பது சுருக்கமே இல்லாத மிக்க விஸ்தாரம். "ஸமஸ்த" என்று இரண்டாம் பாதத்தில் வியாஸமான விரிவுக்கு எதிர்த்தட்டான ஸமாஸமென்னும் ஸங்க்ஷேபமும் பொருளாகும். அவர்கள் பேசிய நைச்யமெல்லாம் ஸங்க்ஷேபம். சுருக்கம். அந்த ஸங்க்ஷேபங்களெல்லாம் கூடி என்னிடம் அஸங்கு

சிதமாய் விஸ்தாரமடைகின்றன என்னும்ரஸம் கவனிக்கத்தக்கது; இதற்கேற்ப ஸ்ரீராமாயண ஸங்க்ஷேப ச்லோகமும் திருவுள்ளத்தில் ஓடுகிறது.

தஸ்மாத்—ஆகையாலே. "அஸங்கோச ந்யாயம்" என்று சாஸ்த்ரகாரர் கூறுவர். எங்கே அஸங்கோசமாகப் பொருந்துமோ அந்த விஷயம் தான் பிரபலம்; அதையே தான் அநுஸரிக்கவேண்டும். ஸங்கோசத்திலும் அஸங்கோசமே பொருந்துவது. "அந்த அஸங்கோசந்யாயத்தால்" என்று ந்யாயத்தை நேராகக் காட்டுவதற்காக "ஸங்குசந்தி" என்று பட்டர் ச்லோகத்திலிருப்பதை "அஸங்குசித" என்று மாற்றியிருப்பதும் ரஸம்.

யதீந்த்ர—தேவதாகாண்டத்தில் தேவேந்த்ரனை ஸுரநாயகனை ஹவிர்ப்பாகம் வாங்க "இந்த்ர ஆயாஹி" என்று கூப்பிடுவர். இங்கு தம் ஆத்ம ஹவிஸ்ஸை ஸமர்ப்பிக்கையில் அதைப்போல் "யதீந்த்ர" என்று கூப்பிடுவது ரஸிக்கத்தக்கது. கருணைவது மந்கதிஸ்தே—உம்முடைய கருணை தான் எனக்குப்புகல்.

शब्दादिभोगविषया रुचिरस्मदीया
नष्टा भवत्विह भवद्दयया यतीन्द्र ।
त्वद्दासदासगणनाचरमावधौ यः
तद्दासतैकरसताऽविरता ममास्तु॥ १६ ॥

16. சப்தாதிபோக விஷயா ருசிரஸ்மதீயா
நஷ்டா பவத்விஹ பவத் தயயா யதீந்த்ர।
த்வத்தாஸ தாஸ கணநா சரமாவதௌ ய:
தத் தாஸதைக ரஸதாவிரதா மமாஸ்து॥

பதவுரை:—சப்தாதிபோக விஷயா—சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் இவைகளை அனுபவிக்கும் விஷயமான, அஸ்மதீயா—எங்களுடையதான, ருசி:-ஆசையானது, யதீந்த்ர-யதிந்த்ரரே! பவத் தயயா-தேவருடைய க்ருபையாலே, இஹ—இங்கே, நஷ்டா பவது—அடியோடு அழியட்டும். த்வத் தாஸ தாஸ கணநா சரமாவதௌ—தேவரீருடைய தாஸ தாஸ தாஸனென்று தாழத் தாழப்போகும் எண்ணிக்கைக் கணக்கில் கடைப்படியில், ய:—எவன் இருக்கிறானோ, தத் தாஸதைகரஸதா—அவருக்கு ஆட்பட்டு அடிமை புரிவதிலேயே இன்புறும் தன்மை, அவிரதா—ஓய்வில்லாமல் நீங்காமல், மமாஸ்து—எனக்கிருக்கவேண்டும்.

தேவதாகாண்டம் இந்த (4) அத்யாயத்தில் பலம் விஷயம். தேவ போகத்தில் (ஸ்வர்க்கத்தில்) கந்தர்வகானங்களும், ஸ்வர்க்க ஸ்த்ரீகளின் ரூபதர்சனமும், ஸ்பர்சமும், அம்ருதரஸமும், பாரிஜாத குஸும கந்தமும், போகங்களாகக் கிடைக்கும். அந்த தேவதோபாஸனத்தால் கிடைக்கும் அந்த ஸ்வர்க்கம் வேண்டாம். இங்கேயே ஓர் அத்புத ஸ்வர்க்க ஸுகமுண்டு. அந்த ஸுகம் எனக்கு நீங்காமல் இருக்கவேண்டும். ஸ்வர்க்கத்திற்குப் போய் அனுபவிப்பது என்பது தேவர்களுக்குப் பசுவைப்போல ஊழியம் செய்வதாகுமென்று வேதமோதுகிறது. அவர்களுக்குப் பசுவாக அடிமையாக இருக்கிறதைவிட இங்குள்ள உம்முடைய அடியார்க்கடியார்களில் கடைசித் தாழ்ந்தபடியில் எந்த மனுஷ்யன் இருப்பனோ அந்த மனுஷ்யனுக்குப் பசுவைப்போல ஊழியம் செய்வதிலேயே எனக்கு ரஸம் மீளாமல் இருக்கும்படி அநுக்ரஹிக்கவேண்டும். எனக்கு அதுவே உத்தம பலமென்று ப்ரார்த்திக்கிறார்; இந்த ரஸமேதான் எனக்கு அம்ருதரஸம். இப்படி பாகவத தாஸ்யமே எனக்குப் புருஷார்த்த காஷ்டையென்று கூறுகிறார்.

சப்தாதிபோகவிஷயா—ஸ்வர்க்கத்திலும் விஷயபோகங்கள் தானே உண்டு. ஸ்வர்க்கபோகங்கள் விஷய ருசியை மேல்மேலும் வ்ருத்திசெய்யுமே நெய் வார்ப்பதால் நெருப்பு வ்ருத்தியடைவதுபோலே. இந்த்ரன் ரஸிப்பது விஷயபோகமும் அதன்மேல் தீராத ஆசையும். அந்த இந்த்ரனால் கிடைப்பதும் விஷயபோகமும் அதன் மேல் மேல் ருசியுமே. அந்தருசி அடியோடு நசிக்கும்படி யதிந்த்ரரான தேவரீர்தான் அநுக்ரஹிக்க வேண்டுமென்று "யதிந்த்ர" என்ற சப்தத்தால் இங்கே கூப்பிடுவது அழகு.

அஸ்மதீயா ருசி:—எங்கள் ருசி. விஷயருசியைப்பலர் கூடிச்சேர்ந்து அனுபவிப்பர். "நட விட காயக ராஸ கோஷ்ட்யாம்" அந்த ருசிக்கும் மோகத்திற்கும் தனிமை உதவாதது. ஆகையால் இதுவரையில் "அஹம்" "மம" என்று ஒருமையாகப்பேசியதை மாற்றி 'அஸ்மதீயா' என்று பன்மையாகப்பேசுகிறார். "विषया विनिवर्तन्ते निराहारस्य देहिनः। रसवर्जं रसोऽप्यस्य परं दृष्ट्वा निवर्तते॥" (விஷயா விநிவர்த்தந்தே நிராஹாரஸ்ய தேஹின: ரஸவர்ஜம் ரஸோப்யஸ்ய பரம் த்ருஷ்ட்வா நிவர்த்ததே) என்ற கீதாசாரியனின் ஸ்ரீஸூக்தியை நினைத்து ருசி நசிக்க வேண்டும் என்று ப்ரார்த்திக்கிறார்.

பவத்தயயா—தேவரீருடைய க்ருபையால். நஷ்டாபவது—நாசமாய் போகட்டும். அடியோடு தொலையட்டும்.

இஹ-(அமுத்ர)லோகாந்தரம்போய்க் கிடைக்கும் ஸ்வர்க்கம் வேண்டாம் "யான்போய் இந்திரலோகமாளும், அச்சுவைபெறினும் வேண்டேன்" என்று பரமபதத்தையும் திரஸ்கரிக்கும் இங்கே இச்சுவை. இங்கே இவ்வரங்கமா நகரில், யதீந்த்ர—விஷயருசி அறுவதற்கு ஈஷணா த்ரயங்களையும் அறுத்த இந்த யதீந்த்ரனைத்தானே கூப்பிடவேண்டும்.

த்வத்தாஸதாஸகணநாசரமாவதௌ ய:—எவன் உமக்கு அடிமைப்பரம் பரையில் கடையோனாகத்தாழ்ந்தவனோ. ஆனந்தம் மேலே படி ஏற ஏறப் பெருகும். இங்கே ஊழியப்படி தாழத்தாழ ஆனந்தம் பெருகுகிறது.

தத்தாஸதைகரஸதா—உம்மடியாரில் எல்லோருக்கும் தாழ்ந்தபடியி லுள்ளவர்க்கு தாஸ்யம் புரிவதிலேயே இன்புறும் தன்மை; ரஸம். "नित्याभिवाञ्छितपरस्परनीचभावैः"(நித்யாபிவாஞ்சிதபரஸ்பர நீசபாவை:) என்று பரமபதத்திலுள்ளார்க்கு ஒருவருக்கொருவர் சேஷத்வத்தில் ஆசை. அப்படி நீசத்வத்தில் ஆசை இங்கேயே "இஹ" என்று கோறப்படுகிறது. முன்சொன்ன நைச்யமெல்லாம் கழிந்து இந்த நைச்யத்திற்குப் பாத்ரமாக வேண்டுமென்கிறார். யதிசக்ரவர்த்தியின் பதபத்தனத்தில் வஸித்து ஹரி பக்த தாஸ்ய ரஸிகராய் வாழவேண்டும்.

அவிரதா—"அநாவ்ருத்தி: சப்தாத்" நீங்காமல்—மீளாமல். மமாஸ்து—அஸ்து என்று பலமாசை. "அஸ்துமே, அஸ்துதே" என்றதுபோலே.

श्रुत्यग्रवेद्यनिजदिव्यगुणस्वरूपः
प्रत्यक्षतामुपगतस्त्विह रङ्गराजः।
वश्यस्सदा भवति ते यतिराज तस्मात्
शक्तः स्वकीयजनपापविमोचने त्वम्॥ १७॥

17. ச்ருத்யக்ர வேத்ய நிஜ திவ்ய குணஸ்வரூப:
ப்ரத்யக்ஷதாமுபகதஸ்த்விஹ ரங்கராஜ:।
வச்யஸ் ஸதா பவதி தே யதிராஜ தஸ்மாத்
சக்த: ஸ்வகீய ஜனபாப விமோசனே த்வம்॥

பதவுரை:—யதிராஜ—யதிராஜனே! ச்ருத்யக்ர—ச்ருதிகளின் சிரஸ்ஸாக வான உபநிஷத்துக்களால், வேத்ய—அறியவேண்டிய, நிஜ திவ்ய குண ஸ்வரூப:—தன் ஸ்வாபாவிக திவ்யகுணங்களையும், ஸ்வரூபத்தையுமுடைய

வராய், இஹ—இங்கே, ப்ரத்யக்ஷதாம்—கண்களால் காணும்படி, உபகத:—அருகே வந்திருக்கிற, ரங்கராஜ:—அரங்கத்தம்மான், தே—உமக்கு, ஸதா—எப்பொழுதும், வச்ய:—வச்யராக, பவதி—இருக்கிறார்; தஸ்மாத்—ஆகையால், ஸ்வகீய ஜநபாப விமோசநே—உம்மைச் சேர்ந்த ஜனங்களின் பாபத்தைப் போக்குவதில், த்வம்—நீர், சக்த:—சக்தியுள்ளவரே.

மீமாம்ஸையில் பதினேழாம் அத்யாயம் ப்ரஹ்மஸூத்ரம் முதலத்யாயமாகும். "श्रुतिशिरसि विदीप्ते ब्रह्मणि" (ச்ருதிசிரஸி விதீப்தே ப்ரஹ்மணி) என்ற ஸ்ரீபாஷ்ய துடக்க ச்லோகத்தை அநுஸரிப்பது ஸ்பஷ்டம். இங்கே வேதாந்த விசார ஆரம்பம். வேதாந்தம் ச்ருதிசிரஸ்ஸு; ச்ருத்யக்ரம். "சுடர்மிகு சுருதியுள்" என்ற முதல் திருவாய்மொழியையும் நினைக்கிறார். திருவாய்மொழியும் சாரீரக மீமாம்ஸை. முதலிரண்டு திருவாய்மொழிகளும் சாரீரகாதிகரணங்களைக் கோர்வையாக நிரூபிக்கின்றன. "அணியரங்கர் மேலாயிரம்" முதலத்யாயம் ஸமன்வயாத்யாயம். திவ்யகுண விசிஷ்டமான ஸ்வரூபத்தையுடைய ப்ரஹ்மத்தினிடம் ஸகல வேதாந்தங்களும் ஸமன்விதமாவதை நிரூபிப்பது ஸமன்வயாத்யாயம். ஸர்வ வேதாந்தவேத்யமென்பதை விளக்குவது. "சாஸ்த்ரயோநித்வாத்" என்பதை "ச்ருத்யக்ரவேத்ய" என்பதால் ஸூசிக்கிறார்; "தத்து ஸமந்வயாத்" என்ற ஸூத்ரப் பொருளையும் ஸூசிக்கிறார். "தத்" (அது) என்ற பரோக்ஷப்ரஹ்மமே இங்கே ப்ரத்யக்ஷமாகப் பெரிய பெருமாளாக ஸேவை ஸாதிக்கிறது. ஆனந்தமயம் என்று ஆனந்தகுண பூர்ணத்வத்தைப் பேசியதும், அடுத்து அந்தரதிகரணத்தில் அந்த திவ்யாத்ம ஸ்வரூபத்திலும் ஆனந்த குணத்திலும் இன்னமும் அதிக போக்யமான திவ்யமங்கள விக்ரஹத்தை ஸூத்ரகாரர் விளக்கினார். "பரம் ப்ரஹ்ம புருஷோத்தமோ நாராயண:" என்று புலப்படாப் பரம்பொருள் கண்ணனாக அவதரித்து ஸகல மனுஜநயன விஷயதாங்கதனானதுபோல் இங்கே அப்பரதத்துவமே "ப்ரத்யக்ஷதாமுபகத:" என்கிறார்.

ச்ருத்யக்ர வேத்ய:—ச்ருதியின் உச்சியில் வேதாந்தத்தில் மலையின்மேல் ஜ்வலிக்கும் தீபம்போல் வேதகிரி சிகரத்தில் ஜ்வலிக்கும். "வேதைச்ச ஸர்வைரஹமேவ வேத்ய:" "வேதவேத்யே பரேபும்ஸி" ச்ருதியின் அக்ர வேத்யமான முதல் வேத்யப்பொருள். மூலவேத்யம் அக்ரகுணமுள்ளது. அக்ரஸ்வரூபமுடையது. அக்ரம் என்பது உயர்வு, உச்சி என்பதையும் சொல்லும். "உயர்வற உயர்நலமுடையவனவன்" நிஜமென்பது உடையவன் என்னும் பொருளை சூசிக்கிறது. திவ்யகுணமும் திவ்யஸ்வரூபமும் நலம். அக்ரமான நலம் ச்ருத்யக்ரம்-வேதாதியான ப்ரணவம். ப்ரஹ்மம் வேதமயமான ப்ரணவ விமானத்தில் ஜ்வலிக்கும் பொருள். ப்ரணவத்திற்குள் எல்லா வேதமும் அடங்கியது.

ப்ரத்யக்ஷதாமுபகத:—"ப்ரத்யக்" ப்ரயக்ஷிதமாகிறது. ப்த்ரயக்கு பராக்குபோல் விஷயமாகிறது. "தத்" ஏதத் ஆகிறது. "அது" இது வாகிறது. "மயர்வறமதிநலமருளினன்" அப்ரோக்ஷ ஸாக்ஷாத்கார ஜ்ஞானம் நம் ஸமீபத்தில் வந்துளது.

இஹ—இந்த இருள் தருமாஞாலத்திலே, எல்லோருக்கும் கிட்டவரி தான கோயிலில். ரங்கராஜ:—அர்ச்சை திருமேனிகளுக்கு மூலப்ரக்ருதி யான இந்த ரூபங்கொண்ட அரங்கன்.

தே வச்ய:—"ஸர்வஸ்யவசீ, ஸர்வஸ்யேசான:" என்ற விச்வபதியாகிய ரங்கராஜர் உமக்கு வச்யராக நீர்இட்டது சட்டமாகவிருக்கிறார். முதலத் யாயம் ஆனுமானிகாதிகரணத்தில் "ஈச்வரனை வசப்படுத்தும் உபாயம் அவனை சரணாகதி செய்வதுதான்" என்று ஸ்ரீபாஷ்யம். "तस्य च वशीकरणं तच्छरणागतिरेव" (தஸ்ய ச வசீகரணம் தச்சரணாகதிரேவ) பெரியகத்யம் தவிர ஸ்ரீரங்ககத்யமும் தனியாக அருளப்பட்டது. "संवाद एष शरणागतिमन्त्रसारः" (ஸம்வாத ஏஷ சரணாகதிமந்த்ரஸார:)

ஸதா பவதி—என்றைக்கும் உமக்குப் பரதந்த்ரராகவே இருக்கிறார். "ஸ்ரீரங்க ஸ்ரீரனுதினம் ஸம்வர்த்ததாம்" என்று அனுதினம் ஜபிக்கிறபடி, அரங்கனும் "ராமானுஜார்ய திவ்யாக்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்" என்று நம் ஆக்ஞையை அபிவிருத்தியடையும்படி அனுசாசனம் செய்கிறார்.

தஸ்மாத்—ஆகையால் ஸர்வலோக சரண்யனான அரங்கனை சரணம் பற்றவேண்டியிருக்க "दासभूताः स्वतस्सर्वे ह्यात्मानः परमात्मनः।अतोऽहमपि ते दासः"(தாஸபூதா: ஸ்வதஸ்ஸர்வே ஹ்யாத்மான: பரமாத்மன: । அதோऽஹமபி தே தாஸ:) என்று அனுமானாகாரமாக "அத:" ஆகையால் நானும் அவனுக்கு தாஸன். என்று ப்ரமாணவசனம் அறுதி யிடுகையால் என்னடியார்க்கு தாஸன் என்னலாமோவென்று கேள்விவர இங்கும் "அத:" என்பதுபோல் "தஸ்மாத்" என்று அதுமாதிரியாகவே நிகமனம் செய்கிறார். பெருமானை நீர் நேரில் சரணாகதி செய்து உம் வசமாக்கிவிட்டீர். உம் திருவடிகளைச் சரணம் பற்றினால் உம் வசமான அவர் எனக்கு மோக்ஷமளிப்பார். உம் தாஸானுதாஸருக்கு தாஸ்யம் செய்தால் நீர் உகப்பதுபோல்.

ஸ்வகீய ஜனபாப விமோசனே—"என்னொருவனையே சரணம் பற்று; நான் உன்னை எல்லாப் பாபங்களிலிருந்து மோக்ஷணம் செய்து வைக்கக் கடவேன். உனக்கு சோகநிமித்தமில்லை" என்று கண்ணன் கீதோபநிஷத்தில்

முடிவில் வேதாந்தாந்தமாக அருளிச்செய்தார். பெருமாள் திருவடி உம் திருமுடியில் கிரீடமாக விளங்குவதால் உம் திருவடியில் செய்யும் ப்ரணாமம் பெருமாள் திருவடிகளில் சேர்ந்துவிடுகிறது. கீதாச்லோகத்தில் உமக்கு வச்யரான பெருமாளுக்குச் சொன்ன ஸர்வபாப விமோசன மஹிமை உமக்குமுள்ளதே. ''த்வா'' என்பது உபலக்ஷணமாக எல்லோரையுஞ் சொல்லும். **"विनतविविधभूतव्रातरक्षैकदीक्ष"** (**விநத விவித பூத வ்ராத ரக்ஷைக தீக்ஷ**) என்றதை அனுஸரிப்பதாகும் இந்த நான்காம் பாதம்.

**कालत्रयेपि करणत्रयनिर्मितातिपापक्रियस्य शरणं भगवत्क्षमैव।**
**सा च त्वयैव कमलारमणेऽर्थिता यत्**
**क्षेमस्स एव हि यतीन्द्र भवच्छ्रितानाम्॥१८॥**

**18. காலத்ரயேபி கரணத்ரய நிர்மிதாதி-**
**பாபக்ரியஸ்ய சரணம் பகவத் க்ஷமைவ।**
**ஸா சத்வயைவ கமலாரமணேர்த்திதா யத்**
**க்ஷேமஸ்ஸ ஏவ ஹி யதீந்த்ர பவச்ச்ரிதாநாம்॥**

**பதவுரை:–யதீந்த்ர**—யதிந்த்ரரே, **காலத்ரயேபி**—எதிர்நிகழ்கழிவிலும், **கரணத்ரயநிர்மிதாதிபாபக்க்ரியஸ்ய** — முக்கரணங்களாலும் மிகக்கொடிய பாபங்களைச் செய்பவனுக்கு, **பகவத்க்ஷமைவ**–பகவானுடைய க்ஷமா குணமேதான், **சரணம்**–தஞ்சமாகும்; **ஸா ச**—அந்த க்ஷமையும், (அபராத ஸஹனமும்; குற்றம் பொறுத்தலும்) **கமலாரமணே**—ஸ்ரீகாந்தனிடம் (ஸ்ரீமாதவனிடம்) **த்வயைவ**—உம்மாலேயே, **அர்த்திதா யத்**–ப்ரார்திக்கப் பட்டதென்பது யாதொன்றுண்டோ, **ஸ:ஏவ**–அதுவே, **பவச்ச்ரிதாநாம்**–உம்மை ஆச்ரயித்தவர்களுக்கு, **க்ஷேம:**—மோக்ஷமெனும் க்ஷேமமாகும்.

சரணாகதருடைய ஸர்வபாபவிமோசனத்தில் எம்பெருமானார் சக்தர் என்றார். ஸ்ரீகாந்தனுக்கல்லவோ அந்த சக்தி. எம்பெருமானார் அது விஷயத்தில் சக்தரென்று எப்படி கூறுவது என்று விரோத சங்கை உதிக்க அதை அவிரோதமாக ஸமர்த்திக்கிறார். ''அபாத்யத்வ நிரூபணம்'' என்பது அவிரோதாத்யாயமென்னும் இரண்டாமத்யாயத்தின் விஷயம். எம்பெருமானார் மோக்ஷகாரணத்வத்திற்கும் ஸ்ரிய:பதியின் மோக்ஷகாரணத்வத்திற்கும் அவிரோதம் ஸமர்த்திக்கப்படுகிறது இங்கே. உம்முடைய ஆச்ரிதராகிவிட்டால் ஸ்ரீகாந்தனுடைய க்ஷமை அவர்கள் செய்த எத்தகைய கொடுமைகளாலும் பாதிக்கப்படுவதில்லை. அக்கொடுமைகளெல்லாம் அவர் க்ஷமையே பாதித்து விடுகிறதென்றும் ரஸமாக ''அபாத்யத்வம்'' என்னும் விஷயத்தை ஸூசிக்கிறார்.

"அஹம் ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்று சரமச்லோகத்தில் ப்ரதிக்ஞை செய்தவர்தான் எம்பெருமானுராச்ரிதர் விஷயத்தில் பாப விமோசனம் செய்கிறவர். எம்பெருமானுர் தமக்காகவும் தம்மோடு குடல்துவக்குள்ள பவிஷ்யத்வர்த்தமான ஸகல ஆச்ரிதருக்காகவும் செய்த ஸர்வ பாபக்ஷமாப்ரார்த்தனையான சரணுகதியென்னும் ப்ரார்த்தனுமதிக் கிணங்கி அன்றே கமலா ரமணன், 'அப்படியே உம் திருவடிகளே சரணம் என்னும் திருவுடையாரான பவிஷ்யத்காலத்தில் வரும் உம் ஆச்ரிதருக்கும் பொறுக்க ஸங்கல்பித்துவிட்டேன்" என்று எல்லோருக்கும் ஸர்வபாப விமோசன ஸங்கல்பம் செய்துவிட்டார். அன்று நீர் எல்லோருக்குமாகச் செய்த சரணுகதி என்னும் ஸர்வபாபவிமோசன ப்ரார்த்தனையால் அவன் த்வாரமாக உமக்கும், உம் சரணுகதர்களுக்கும் ஸர்வபாப விமோசன சக்தியுள்ளதே; ஆகையால் விரோதமில்லை; அவிரோதமே. இன்று ஆச்ரயிப்பவருக்கும் அன்றே செய்த ஸங்கல்பப்படி ஸர்வபாபவிமோசனம் லப்தப்ராயமே; அன்றே லப்தமானதை இன்று நழுவாமல் நாங்கள் பூர்வலப்தபரிபாலனம் செய்யவேண்டியது மட்டுமே என்பதை வ்யஞ்ஜனம் செய்வது க்ஷேமசப்தம். "யோகம்" என்பது முன் கிடையாததின் லாபம். க்ஷேமமென்பது "லப்தஸ்ய பரிபாலனம்"–முன் கிடைத்ததை இழக்காமல் காப்பாற்றுவது.

**காலத்ரயேபி**—ரஹஸ்யத்ரயத்தால் ஸர்வகாலத்திலும் காலக்ஷேபம் செய்வது உசிதம். அதற்கெதிர்த்தட்டாய் அதிபாபச்செயல்களாலேயே முக்காலத்தையும் கழித்து வருகிறவன்.

**கரணத்ரயநிர்மித**—முக்கரணங்களும் ரஹஸ்யத்ரயநிஷ்டையில் பொருந்தியிருக்கவேண்டியிருந்தும் அதற்கு நேர் விரோதமான அதிபாபாசரணை செய்பவன். முக்காலங்களிலும் முக்கரணங்களாலும் பாபப் பெருக்கு மும்மூன்றென்பதாகப் பெருகுகிறது.

**அதிபாபக்ரியஸ்ய**--வாங்மனஸ்ஸுக்களுக்கு அதீதமான பாபங்களைச் செய்கிறவனுக்கு. "வாங்மனஸீ அதி' என்றார் ஆழ்வான். "பாபிஷ்ட: க்ஷத்ரபந்து: ச" என்றதின் ஜ்ஞாபகம். **"अपि चेदसि पापेभ्यः सर्वेभ्यः पाप कृत्तमः" (அபிசேதஸி பாபேப்ய: ஸர்வேப்ய: பாபக்ருத்தம:)** என்று கீதையில் பெருமாள் அருளிச்செய்தார். தமப்பின்பொருளை 'அதி' என்று காட்டுகிறார். கீதாச்லோகத்தையநுஸரிக்கிறார். அங்கும் வ்ருஜிந ஸந்தரணம்-பாபவிமோசநம். "வ்ருஜிநம் ஸந்தரிஷ்யஸி" **சரணம்**—தஞ்சமாவது, ரக்ஷிப்பது.

பகவத்க்ஷமைவ—பாபவிமோசநத்தில் நீர் சக்தரென்று நான் சொன்னது பகவத்த்வாரமாகத்தான். அவர்க்ஷமைதான் பொறுத்தருளுவது. உமக்கு வச்யரானபடியால் உம் ஆச்ரிதர் விஷயத்திலும் அவர் க்ஷமை ப்ரஸரிக்கிறது. உமது பாபவிமோசநசக்தி அவருடைய க்ஷமாத்வாரமானது. ஆகையால் 'நீர்சக்தர்' என்று சொன்னதோடு விரோதமில்லை.

ஸா ச த்வயைவ கமலாரமணே அர்த்திதா யத்— அந்த பகவத் க்ஷமையும் உம்மாலேயேதான் சரணாகதிரூப ப்ரார்த்தனைசெய்யப்பட்டதே. 'யத்' என்பதற்கு 'அது' என்றும், 'யஸ்மாத்' என்றும் பொருள் கொள்ளலாம். யஸ்மாத்-யாது காரணம் பற்றி என்று முன் ச்லோகங்களில் கூறி 'தஸ்மாத்' என்று அநுமானநிகமநக்ரமத்தையாதரிப்பதுபோல இங்கும் 'யஸ்மாத் தஸ்மாத்' என்றும் பொருள் கொள்ளலாம்.

க்ஷேம: ஸ ஏவஹி—யத் என்றது உத்தேச்யம். விதேயமான க்ஷேம: என்பது ஆண்பாலானதால் அதையநுஸரித்து புல்லிங்கப்ரயோகம். உத்தேச்யாநுகுணமாயும் விதேயாநுகுணமாயும் லிங்கத்தை உபயோகிக்கலாம். க்ஷேம ஏவ ஹி—எங்களுக்குப் புதிதாக லாபமென்னும் யோகமல்ல. முன்பே லப்தமானதின் பரிபாலனமான க்ஷேமம்தான் என்றும் திருவுள்ளம். யோகக்ஷேமநிர்வாஹம் எம்பெருமானுராச்ரயணத்தால்.

யதீந்த்ர—தேவராஜனுன இந்திரனைப்போல் "क्षीणे पुण्ये" (க்ஷீணே புண்யே) "स्वर्गेऽपि पातभीतस्य क्षयिष्णोर्नास्ति निर्वृतिः" (ஸ்வர்க்கேபி பாதபீதஸ்ய க்ஷயிஷ்ணோர் நாஸ்தி நிர்வ்ருதி:) என்று சொல்லுகிறபடி புண்யம் கழியும்பொழுது கீழே தள்ளிவிடுகிறதென்பதே கிடையாது. கிடைத்தது அக்ஷயமாகவேயிருக்கும்.

பவச்ச்ரிதாநாம்—யதீந்த்ரரே! உம்மை ஆச்ரயித்தவருக்கு 'க்ஷேமஏவ' என்றும் க்ஷேமமே. நிரதிசயமான க்ஷேமமேயல்லாது புநராவ்ருத்தி ப்ரஸக்தியேயில்லையென்கிறுர்.

श्रीमन् यतीन्द्र तव दिव्यपदाब्जसेवां श्रीशैलनाथकरुणापरिणामदत्ताम् ।
तामन्वहं मम विवर्धय नाथ तस्याः कामं विरुद्धमखिलं च निवर्तय त्वम् ॥१९॥

19. ஸ்ரீமந் யதீந்த்ர தவ திவ்யபதாப்ஜஸேவாம்
ஸ்ரீசைலநாதகருணுபரிணுமதத்தாம் ।
தாமந்வஹம் மம விவர்த்தய நாத தஸ்யா:
காமம் விருத்தமகிலம் ச நிவர்த்தய த்வம் ॥

பதவுரை:-ஸ்ரீமந் யதீந்த்ர-பகவத் பக்திபரீவாஹ கைங்கர்யஸ்ரீயையுடைய லக்ஷ்மணயோகியே!, ஸ்ரீசைலநாத கருணாபரிணாமதத்தாம்—எம் ஆசார்யர் ஸ்ரீசைலேசர் தயாகாஷ்டையாகத்தந்தருளிய, தவ திவ்யபதாப்ஜஸேவாம்—உம்முடைய திவ்யமான திருவடித்தாமரைகளின் ஸேவையான, தாம்—அந்த அரும்பெரும் பேற்றை, அந்வஹம்—தினந்தோறும், மம—எனக்கு, விவர்த்தய—விசேஷமாகப் பெருகச்செய்யவேண்டும், தஸ்யா: விருத்தம்—அந்தப்பேற்றுக்கு இடையூறான, அகிலம்—எல்லாவற்றையும், காமம் நிவர்த்தய—அடியோடு தொலைக்கவேண்டும். அல்லது அகிலம் காமம்—எல்லா காமத்தையும், நிவர்த்தய—போக்கவேண்டும்.

சாரீரகத்தில் மூன்றாமத்யாயம் ஸாதநாத்யாயம். ப்ரஹ்மப்ராப்தி ஸாதநத்தில் "आचार्योपासनं शौचम्" (ஆசார்யோபாஸநம் சௌசம்) ஆசார்யோபாஸநம் முக்யம்; ஸ்வாசார்ய பரமாசார்யர் எம்பெருமானார். இந்த ஆசார்யர்களின் உபாஸநம் ப்ரஹ்மப்ராப்தி ஸாதநமாகும். புருஷகாரத்தில் எம்பெருமானார் புருஷகாரம் வேண்டும். பெரியபிராட்டியாரின் புருஷகாரமும் வேண்டும். அந்த ஸ்ரீ ஒரு முக்யஸாதநம். 'ஸ்ரீமந்' என்று ஸாதநமான ஸ்ரீவிசிஷ்டனான நாராயணனை ஸ்ரீமந் ஸ்ரீமந் என்று கத்யத்தில் திரும்பவும் திரும்பவும் கூப்பிடுவதுபோலக் கூப்பிடவேண்டும். ஸ்ரீசப்தத்தை முதலில் வைப்பதால் ஸ்ரீயும் ஸ்ரீமானும் முக்யஸாதநமென்பதையும், பக்திபரீவாஹமான கைங்கர்ய லக்ஷ்மியான ஸ்ரீயின் வைசிஷ்ட்யம் முக்யஸாதநம் என்பதையும் ஸூசித்து இந்த ச்லோகத்தை ஸாதநாத்யாய ஸூசகமாக அமைக்கிறார். பகவத்ஸேவாஸாதநம். ஸேவா—பக்தி—உபாஸநம் இவை பர்யாயங்கள். "माधवं सेवनीयं" (மாதவம் ஸேவநீயம்) என்று முதல் பத்தில் மாதவஸேவை கூறப்பட்டது. அதல்லவோ ப்ரஹ்ம ப்ராப்தி. அதல்லவோ ப்ராப்யமான பலம். இங்கே எம்பெருமானார் பதாப்ஜஸேவையை ஸாதநமாகவும் பலமாகவும் கூறலாமோ என்றால் இதற்கு ஸமாதாநம் ஸ்தோத்ரத்தின் தொடக்கத்திலேயே காட்டப்பட்டது. அங்கே தம்முடைய உத்தேச்யம், "श्रीमाधवाङ्घ्रिजलजद्वयनित्यसेवाप्रेमाविलाशयपराङ्कुशपादभक्तम्" (ஸ்ரீமாதவாங்க்ரிஜலஜத்வயநித்ய ஸேவாப்ரேமா விலாசயபராங்குச பாதபக்தம்) என்ற விசேஷணங்களால் ஆழ்வார் கையில் பெருமாள் திருவடிகள் ஆழ்வார் திருவடிகள் எம்பெருமானார் திருமுடியிலுமாக அநுஸந்தாநம். எம்பெருமானார் திருவடிகளின் ஸேவை கிடைத்தால் தன்னடைவே பெருமாள் திருவடிகளின் ஸேவை ஸித்திக்கிறது.

**ஸ்ரீமந்**—''லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:'' என்று லக்ஷ்மணன் விஷயத்தில் ருஷி கூறியது லக்ஷ்மணமுநிக்கும் பொருந்தியதே. ''அந்தரிக்ஷ கத: ஸ்ரீமாந்'' என்று விஷ்ணுபதமான அந்தரிக்ஷத்தில் நின்றவனை ஸ்ரீமாந் என்றார் ருஷி. ''ஸா ஹி ஸ்ரீரம்ருதா ஸதாம்'' அம்ருத ஸ்ரீஸம்பன்னர். இந்த ஸ்ரீ அவர் கையில் ஸித்தமாயுள்ளதாய் அவர் பாதாப்ஜஸேவை பகவத் பாதாப்ஜஸேவையை உட்கொண்டேதீரும். மதுப் நித்யயோகத்தையும் காட்டுகிறது சேஷத்வமே ஸ்ரீயாகும். நீர் சேஷனே. நிவாஸசய்யாஸநம்.

**யதீந்த்ர**—ஸ்ரிய:பதித்வமென்பது பெருமாளுக்கு என்றைக்கும் அஸாதாரணம். ஸ்ரீமந் என்று கூப்பிட்டதில் அந்தப் பொருளல்ல. ஸன்யாஸியான யதீந்த்ரரையல்லவோ கூப்பிடுகிறேன். செல்வநாரணனென்ற சேஷியல்ல. ஸந்யாஸியாகிய சேஷனைக் கூப்பிடுகிறேன் என்று உடனே வ்யாவ்ருத்தி செய்கிறார். '''ஆம்பரிசறிந்துகொண்டு' என்று ப்ராப்யமான கைங்கர்யத்தைச் சொன்னவனந்தரம் 'ஐம்புலனகத்தடக்கி' என்று அதிலே ஸ்வப்ரயோஜன புத்தியாலே ப்ரவணமாகிற இந்த்ரியங்களை நியமித்துக்கொண்டு போரும்படியைச் சொல்லிற்றிறே'' என்று பிள்ளைலோகம் ஜீயர் அருளியது ரஸிக்கத்தக்கது.

**தவ**—முன்சொன்ன இரண்டு விசேஷணங்களோடு விசிஷ்டமான உம்முடைய. முனிவிசேஷணங்களல்ல. பெருமாள் திருவடி ஸேவையோடு கூடியவரென்று ஸித்தித்துவிட்டது. இதற்காகவே விசேஷணங்களை முந்துறக்கூறி பின்பு 'தவ' என்கிறார்.

**திவ்ய பதாப்ஜஸேவாம்**—தாமரைப்பூப்போன்ற ஸௌகுமாரமான மெல்லடி. தாமரைப்பூவை விளையாட்டிற்காக கையில் வைத்துக்கொண்டு அதன் பரிமளத்தை ஆக்ராணம் செய்துகொண்டு கண்களில் ஒத்திக்கொள்வர். லீலாரவிந்தமென்பர். ஆகையால் இந்த ஸேவை பரமபோக்யமே. ஸபலமாக ஆசைப்பட்டுச் செய்வது.

**ஸ்ரீசைலநாத**—எம்மடிகளான ஸ்ரீசைலநாதருடைய. **கருணாபரிணாம**—கருணைகாஷ்டையால், பேரருளாளன் **''भूतानि हन्त निखिलानि निशामयन्ति''** **(பூதாநி ஹந்த நிகிலாநி நிசாமயந்தி)** என்றுஸகல மநுஜநயன விஷயமான பொருள். **''करुणापरिणामतस्ते''** **(கருணாபரிணாமதஸ் தே)** என்று அருளின் காஷ்டையாக் அபியுக்தரான தூப்புல்பிள்ளையுமருளிச் செய்தார். அதுபோன்ற அருளின் காஷ்டை. இந்த ச்லோகம் திருவுள்ளத்திலோடுகிறது.

**தத்தாம்**—எனக்கு அருளப்பட்டது. தானம் செய்யப்பட்டது. ஸ்ரீசைல நாதருக்கு உம்முடைய பாதாப்ஜஸேவை ஸ்வம்சொந்ததநம். தம்முடைய தான ஸ்வத்தை (தனத்தை) எனக்கு ஸ்வம் ஆகச்செய்தார். பரஸ்வத்வா பாதநம் செய்துவைத்தார். என்னை யதீந்த்ர ப்ரவணராக்கினார். "ஸ்ரீசைலேச தயாபாத்ரம்" என்பது யதீந்த்ர ப்ராவண்யத்தில் பரிணமித்தது.

**தாம்**—எம்மாசார்யர் தந்தருளினாரென்று சொல்லலாமேயொழிய அவர் தந்தருளிய பாக்யத்தை 'இத்தம்' என்று வர்ணிக்கமுடியாது. '*தாம்-தஸ்யா:*' என்றேதான் பேசலாம்.

**அங்வஹம்**—"பௌமா: பிபங்த்வங்வஹம்" திருவடிஸேவை எனக்கு ஸததமாயிருந்தால் போதும். **விவர்த்தய**—மேன்மேலும் வளரச்செய்ய வேணும். **நாத**—ஸ்ரீசைலநாத என்று நாதசப்தாங்கிதமான திருநாமத்தைச் சொன்னேன். அவரை நாதன் என்று நான் சொன்னால் சீறுவர். கருணை யெல்லாம் பரந்துபோம். **தஸ்யா:**—அந்த ஸேவைக்கு.

விருத்தமகிலம்ச— **"श्रेयांसि बहुविघ्नानि"** (ச்ரேயாம்ஸி பஹு விக்நாநி) **"त्रिदशाः परिपन्थिनः"** (த்ரிதசா: பரிபந்த்திந:) இந்திரன் முதல் பரிபந்தி. யதீந்த்ரரே நீர்தான் இந்திராதி தேவபரிந்திகளை **நிவாரணம்** செய்யவேண்டும். ஸம்ஸாரத்தின் வ்ருத்தியில் அவர்களுக்கு **மிகுந்தவாசை.** ஸம்ஸாரங்யூநதை-ஸம்ஸாரநிவ்ருத்தி அவர்களுக்காகாது. **ஸம்ஸாரநிவ்ருத்தி** யதிந்த்ரரால்தான் ஆகும்.

**த்வம்**—யதீந்த்ரராகிய நீர். **காமம் நிவர்த்தய**—அடியோடு போக்க வேண்டும்.

**विज्ञापनं यदिदमद्य तु मामकीनं अङ्गीकुरुष्व यतिराज दयाम्बुराशे।**
**अज्ञोऽयमात्मगुणलेशविवर्जितश्च तस्मादनन्यशरणो भवतीति मत्वा॥ २०॥**

20. விஜ்ஞாபநம் யதிதமத்ய து மாமகீநம்
அங்கீகுருஷ்வ யதிராஜ தயாம்புராசே।
அஜ்ஞோऽயமாத்ம குணலேச விவர்ஜிதச் ச
தஸ்மாதநந்யசரணோ பவதீதி மத்வா॥

பதவுரை:—**தயாம்புராசே**—கருணைக்கடலான, **யதிராஜ**—யதிராஜரே!, **அத்ய**—இன்று, **மாமகீநம்**—அடியேனுடையதான, **இதம்**—இந்த, **விஜ்ஞா**

பரம்—துதி விண்ணப்பம் என்ற உம் திருவடித்தாமரையின் நித்யஸேவை யான ப்ரார்த்தனை, யத்—யாதொன்றுண்டோ, (அதை) அஜ்ஞோயம்— இவன் அறியாதவன். ஸம்யக்ஜ்ஞானமில்லாதவன், ஆத்மகுணலேசவிவர் ஜிதச்ச—ஆத்மகுணலேசமும் அடியோடு இல்லாதவன். ஸம்பந்த குண லேசமுமில்லாதவன். தஸ்மாத்—ஆகையால், அநந்யசரணோ பவதி—வேறு கதியில்லாதவனாகவிருக்கிறான், இதி—என்று, மத்வா—எண்ணி. அங்கீ குருஷ்வ—திருவுள்ளம் பற்றவேணும்.

பலாத்யாயம் விம்சதிலக்ஷணமீமாம்ஸையில் கடைசி அத்யாயம். ஸாதனமும் பலமும் ஒருவாறு ஒத்தே இருக்கும்; ஒன்றுமாகும். ஸித்த லக்ஷணமான ப்ரஹ்மமே பலமுமாகிறது. ஆகையால் பலமான பரப்ரஹ்ம ஸ்வரூபமே ஸாதனாத்யாயத்தின் நடுவில் உபயலிங்காதிகரணம் முதல் சில அதிகரணங்களில் விசாரிக்கப்படுகிறதென்று அதிகரணஸாராவளியில் காட்டப்பட்டது. முக்திபலத்தைக் கீர்த்தனம் செய்து முக்தி பலாதி கரணத்தோடு ஸாதனாத்யாயம் முடிந்தது.

" आवृत्तिरसकृदुपदेशात् " (ஆவ்ருத்திரஸக்ருதுபதேசாத்) என்று அந்வஹம் த்யானம் செய்யும் பக்த்யுபாயத்தோடு பலாத்யாயம் தொடங்கிற்று. முதல்பாதம் முன்பாகத்தில் ஸாதநமான பக்தியின் ஸ்வரூபத்தை விசாரித்தது. ஸாதனமான பக்தியும் மிகுந்த ஸுகமா யிருப்பதால் பலகோடியில் சேருவதால் ஸாதனத்தையும் விசாரித்ததென்று ச்ருதப்ரகாசிகைகாட்டிற்று. பலத்திற்காக ஸாதனமா அல்லது ஸாதனமே பலமா என்கிற விசாரம் கேவலம் ச்ரமபலமேயல்லாது முடிவேற்படுவது கஷ்டமென்றது ஸங்கல்பஸூர்யோதயம். "फलार्थं तत् किं वा फलमिति वितर्कः श्रमफलः" (பலார்த்தம் தத்கிம்வா பலமிதி விதர்க்க: ச்ரமபல:) "फलानां नेता यः फलमिति च शारीरकमितः" (பலாநாம் நேதா ய: பல மிதி ச சாரீரகமித:) என்று சது:ச்லோகீபாஷ்யமங்கள ச்லோகம். பத் தொன்பதாம் ச்லோகத்திலேயே போகபலத்தையும் ஸூசித்து விட்ட தாகவும் சொல்லலாம். " नित्यशेषित्वयोगात् " (நித்யசேஷித்வ யோகாத்) என்றபடி பெருமாளுக்கு சேஷித்வமே நித்யமென்பதுபோல் "नित्यं यदीयचरणौ शरणं मदीयम्" (நித்யம் யதீய சரணௌ சரணம் மதீயம்) என்று ஆழ்வார் திருவடிகளே எக்காலத்திலும் சரண மென்றது எமக்கு எம்பெருமானார் விஷயத்திலும் துல்யமே. இந்த ஸ்துதி முடிவிலும் 'எம்பெருமானார் திருவடிகளே சரணம்' என்பது, 'அநந்ய சரணோ பவதீதி' என்று அறுதியிட்டு ஸ்துதியை முடிக்கும் அழகு ரஸிக்

கத்தக்கது. ஸ்துதியின் கடைசி பாகத்திலேயே உம் திருவடிகளே சரணம் என்று சொல்லிவிட்டார். ஸ்துதியை முடித்துவிட்டு ஸ்துதிக்கு வெளியில் சொல்லிக் கொள்ளும்படி விட்டுவிடவில்லை. "எம்பெருமானார் திருவடிகளே சரணம்" என்னும் ஸ்ரீவைஷ்ணவமுத்திரை ஸ்தோத்திரத்தின் கடைசி பாகத்திலேயே அமைந்துவிட்டது. பெருமாள் திருவடிஸேவாபலமான மோக்ஷபலமும் முன் ச்லோகத்திலேயே கூறப்பட்டுளது. இந்த ஸ்துதிக்கு புலம் ஸ்துத்யரான எம்பெருமானருடைய அங்கீகாரம். அது இந்த ஸ்துதிக்கு ஸாக்ஷாத்தான பலம். அந்த பலத்தை இங்கே கூறுகிறார். 'मधुमथनविज्ञापनमिदम्' (மதுமதந விஜ்ஞாபநமிதம்) என்று ஸ்தோத்ர ரத்ந முடிவிலுள்ளதையும், " प्रसीद मद्वृत्तमचिन्तयित्वा " (ப்ரஸீத மத் வ்ருத்தமசிந்தயித்வா) என்கிற கடைசி வார்த்தையையும் இங்கே அநுஸந்திப்பதும் ஸ்பஷ்டம். "पितामहं नाथमुनिं विलोक्य" (பிதா மஹம் நாதமுநிம் விலோக்ய) என்று அங்கே ப்ரார்த்தித்தபடி இங்கும் ஸ்ரீசைலநாதர் என்கிற ஓர் நாதர் திருநாமத்தைச்சொல்லி அவர் கொடுத்த தானத்தை நீர் யதார்த்தமாக்கவேண்டுமென்று முன் ச்லோகத்தில் கூறினார். அவர் செய்த தானத்தை நீர் விக்நம் வாராமல் பரிபாலநம் செய்ய வேண்டுமென்று முன்ச்லோக ப்ரார்த்தனை. உம் திருவடி ஸேவையை தானம் செய்தார். அந்த தானம் அழியாமல் நீர் பரிபாலனம் செய்ய வேண்டுமென்று அங்கே ப்ரார்த்தித்தது. தானபாலனங்களுக்குள் பாலநம் உயர்ந்தது என்பர்.

விஜ்ஞாபநம்-ருக்மிணிப்பிராட்டி கண்ணனுக்கு "विज्ञापयति ते किञ्चित्" ( விஜ்ஞாபயதி தே கிஞ்சித் ) என்று ஏழு ச்லோகங்களை விஜ்ஞாபனம் செய்தாள். அங்கே ஸப்தபதியான விவாஹ ப்ரார்த்தனைக்கேற்ப ஏழுச்லோகங்கள். இங்கே விம்சதிலக்ஷண மீமாம்ஸாதி பலமான மோக்ஷத்திற்கேற்ப இருபது ச்லோகங்களால் விஜ்ஞாபனம். உம் திருவடிஸேவை நித்யமாக நிர்விக்நமாக இருக்கும்படி காத்தருளவேணும். யதிதம்—ஏதோ விது ஒருகணக்கிலும் சேரத்தக்கதல்ல. ஏதோ ஒரு முறையானது. அத்ய—நித்யமும்பாடி இன்று இன்று என்று சொல்லும்படி இருக்கவேண்டும்.

மாமகீநம்– "विज्ञापनां वनगिरीश्वर सत्यरूपां अङ्गीकुरुष्व करुणार्णव मामकीनाम्। श्रीरङ्गधामनि यथापुरशेषभोगं रामानुजार्यवशगः परिवर्तिषीय॥" (விஜ்ஞாபநாம் வநகிரீச்வர ஸத்யரூபாம் அங்கீகுருஷ்வ கருணார்ணவ மாமகீநாம், ஸ்ரீரங்கதாமநி யதாபுர சேஷபோகம் ராமாநுஜார்யவசக: பரிவர்த்திஷீய) என்ற ஸுந்தரபாஹுஸ்தவம் முடிவில்

உள்ள ச்லோகத்தை இங்கே அநுஸரிப்பது ஸ்பஷ்டம். என்னுடைய ஸ்துதியை (ஏதோ என்று சொல்லும்படியான இத்துதியை) பெரியோர் அநுக்ரஹத்தால் வந்ததென்று அவர்கள் சிரஸ்ஸில் பாரத்தைப்போட இஷ்டமில்லை. எல்லாக் குறைகளும் என்னுடையவைகளாகவே இருக்கட்டும். என்னைச் சேர்ந்தவர் பாடும் இத்துதியையும், இத்துதிமூலம் அவர்கள் செய்யும் விஜ்ஞாபனத்தையும் அங்கீகரித்து அவர்கள் எல்லோரையும் நித்யமாக உம் திருவடி ஸேவையைத்தந்து காத்தருளவேணும். அங்கீகுருஷ்வ—திருவுள்ளம் பற்ற வேண்டும். "குருஷ்வ மாமநுசரம்"

யதிராஜ—யதிச்சக்ரவர்த்தியே! "राजा प्रकृतिरञ्जनात्" (ராஜா ப்ரக்ருதிரஜ்ஞநாத்) உம் ப்ரஜைகளை ரஞ்ஜநம் செய்யவேண்டியது உம் யதிராஜர் என்ற திருநாமத்திற்கேற்றது. தயாம்புராசே—தயை நீர்க்கடல் உப்புக்கடலல்ல. பேரருளாளன் பேரருளும், உம் சாலக்கிணற்றுஜலத்தைப்பருகிப் பெருகுகிறதென்று தத்வடீகை மங்களத்தில் அபியுக்தர் அருளிச்செய்தார். ஸப்ததியிலும் "काले नः करिशैलकृष्णजलदः काङ्क्षाधिकं वर्षति" (காலே ந: கரிசைல க்ருஷ்ண ஜலத: காங்க்ஷாதிகம் வர்ஷதி) என்றார்.

அஜ்ஞோSபம்– "अज्ञो जन्तुरनीशोऽयं आत्मनः सुखदुःखयोः" (அஜ்ஞோ ஜந்துரநீசோயம் ஆத்மந: ஸுகதுக்கயோ:) என்ற ப்ரமாணத்தை நினைக்கிறார். கர்மபாரவச்யதையையடைந்து அதனால் ஸம்ஸாரபதவியில் ப்ரமித்து வருந்துகிறான். இவன் தன்னையே ரக்ஷித்துக்கொள்ள சக்தியில்லாதவன். இவன் அஜ்ஞனான ஜந்து. பசு ப்ராயன். பெருமாள் உமக்கு வச்யராய் இருப்பதாலும், உம்முடைய கருணை கடலையொத்ததாயிருப்பதாலும், உம் திருவடியையே பற்றும் அஜ்ஞனான என்போன்ற ஆச்ரிதர்களைப் பெருமாள் திருவடிகளில் சேர்த்துக் கரையேற்றினாலொழிய உம்முடைய தயாபூர்ணமனம் த்ருப்தியடையாதாகையாலும், நீர் என் ப்ரார்த்தனையை அங்கீகரித்தருளவேணும். ஆத்மகுணலேசவிவர்ஜிதச்ச—ஜ்ஞாநம்தான் இல்லை. ஆத்மகுணம் தினையளவேனுமிருக்கலாகாதோ, அதுவும் அடியோடு இல்லை. வர்ஜித: விவர்ஜித:

தஸ்மாத்—நற்குணமொன்றும் லேசமேனும் இல்லை. ஜ்ஞாநமுமில்லை. "आश्रितेत्यानृशंस्यतः" (ஆச்ரிதேத்யாந்ருசம்ஸ்யத:) "आनृशंस्यं परो धर्मः" (ஆந்ருசம்ஸ்யம் பரோ தர்ம:) ஆச்ரிதனைக் கைவிட்டால் ந்ருசம்ஸதாதோஷம் வரும். கருணைக்கடலாயிருப்பாருக்கு ந்ருசம்ஸதை அணுகலாமோ? அஜ்ஞத்வமும் ஆத்மகுணலேசவிவர்ஜிதத்வமும் வேறு புகலொன்றுமில்லையென்பதை ஸ்தாபிக்கின்றன. மீமாம்ஸா ஸூத்ரங்கள், ந்யாயஸூத்ரங்கள் தஸ்மாத், தஸ்மாத் என்று ஹேதுக்களால் நிகமநமாக ஸாதித்து வருகின்றன.

“इदं भूयो भूयः पुनरपि च भूयः पुनरपि स्फुटं विज्ञप्स्यामीत्यगतिरबुधोऽनन्यशरणः। कृतागा दुष्टात्मा कलुषमतिरस्मीत्यनवधेर्दयायास्ते पात्रं वनगिरिपते सुन्दरभुज॥” (இதம் பூயோ பூய: புநரபிச பூய: புநரபி ஸ்ப்புடம் விஜ்ஞப்ஸ்யாமீத்ய கதிரபுதோऽநந்ய சரண:। க்ருதாகா துஷ்டாத்மா கலுஷமதிரஸ்மீத்யநவதேர் தயாயாஸ்தே பாத்ரம் வநகிரிபதே ஸுந்தர புஜ ||) என்ற ஸுந்தர பாஹுஸ்தவம் முடிவுச்லோகத்தையும் நினைத்து அதை இங்கே அநுஸரிப்பதும் ஸ்பஷ்டம். ஸ்துதி ஆரம்பத்தில் இரண்டாம் ச்லோகத்திலேயே ஆழ்வான் நினைவுடன் தொடங்கி ஆழ்வான் ஸ்மரணத்தோடேயே ஸ்துதியை முடிக்கிறார்.

அநந்ய சரணோ பவதி—தன்னிடம் குணமொன்றுமில்லை. ஜ்ஞாநமுமில்லை. கருணைக்கடலான எம்பெருமானார் தயையைச் சரணம்பற்றுவது தவிர வேறுகதியில்லை. அவரோடு ஸம்பந்தத்தைத்தேடி அவர் கடாக்ஷத்தையருளப்பெறுவதுதவிர வேறு புகலில்லை.

இதி மத்வா—என்று நினைத்து. “प्रणत इति दयालुः” (ப்ரணத இதி தயாளு:) என்றபடி தாமிருக்குமிடம் (சரணம்—வீடு) வந்து பூமியில் நிபதிதனான காகனை சரணாகதனென்று தம் நினைவாலே நினைத்து க்ருபையால் பரிபாலநம் பண்ணியருளினார். “என்னுடைய துர்வ்ருத்தத்தை—துர்நடத்தையை (அசிந்தயித்வா) நினையாமல் அக்ருத்ரிமமாய் வேஷமில்லாமல் முழு உண்மையாக உம் திருவடிகளில் உயர்வற உயர்ந்த நிரதிசய ப்ரீதியுடைய ஆத்மாவான நாதமுனிகளை உத்தேசித்து தேவரீர் ப்ரஸாதம் செய்ய வேண்டும்-அங்கீகரிக்கவேண்டும்” என்று ஸ்தோத்ரரத்நம் முடிந்தது. அங்கே ஸ்ரீராமனிடம் முனிகளுக்கு அக்ருத்ரிமமான பக்தியிருந்ததென்றும் காகாதி பக்தியெல்லாம் வேஷமேயென்றும் ஸூசிதம். காகனிடத்தில்போல் பக்தி என்னிடம் க்ருத்ரிமமாயிருந்தாலும் என்னைச் சரணாகதன் என்று நீர் நினைத்து என்னைக் காப்பாற்றியருளவேண்டுமென்று நிகமநம் செய்கிறார்.

திருச்சி ஸ்ரீ ஏ. வி. கோபலாசாரியர் இயற்றிய

யதிராஜவிம்சதி வியாக்கியானம் முற்றிற்று.



# ஸ்ரீஸூக்திமாலா வெளியீடுகள்

பதவுரை, அரும்பதவுரை, ப்ரமாணத்திரட்டு முதலானவற்றோடுகூடிய
பூர்வாசார்ய க்ரந்தங்கள்.

| க்ரந்தங்கள் | விலை | தபால் |
|---|---|---|
| 1. பரந்தாஹஸ்யம் முதலிய எட்டு ரஹஸ்யங்கள் | 1-8-0 | 3 |
| 2. ஸ்தோத்ரரத்ந சதுச்லோகீ ஜிதந்தே வ்யாக்யாநங்கள் | 3-0-0 | 6 |
| 3. திருப்பல்லாண்டு வ்யாக்யாநம் | 1-8-0 | 3 |
| 4. முதல் திருவந்தாதி வ்யாக்யாநம் | 1-14-0 | 4 |
| 5. பெருமாள் திருமொழி வ்யாக்யாநம் | 1-14-0 | 4 |
| 6. திருமாலை வ்யாக்யானம் | 2-12-0 | 5 |
| 7. திருவாசிரியம் பெரிய திருவந்தாதி வ்யாக்யானம் | 1-10-0 | 4 |
| 8. சது:ச்லோகீ வ்யாக்யானம் (நாயனாராச்சான்பிள்ளை) | 1-8-0 | 3 |
| 9. கத்ய வ்யாக்யானங்கள் | 2-0-0 | 4 |
| 10. நாச்சியார் திருமொழி வ்யாக்யானம் | 4-0-0 | 8 |
| 11. திருச்சந்த விருத்த வ்யாக்யானம் | 3-0-0 | 6 |
| 12. நான்முகன் திருவந்தாதி வ்யாக்யானம் (விவரணத்துடன்) | 2-8-0 | 6 |
| ஷை மலிவுப் பதிப்பு | 2-0-0 | 6 |
| 13. ஸ்ரீராமாயண தனிச்லோகம் (விவரணத்துடன்) | 3-8-0 | 6 |
| ஷை மலிவுப் பதிப்பு | 2-12-0 | 6 |
| 14. திருப்பள்ளியெழுச்சி வ்யாக்யானம் | 0-8-0 | 1 |
| 15. பாசுரப்படி ராமாயணம் (விலையில்லை தபாற் கூலி 0-1-0) | | |
| 16. அமலனாதிபிரான் வ்யாக்யானம் | 1-14-0 | 4 |
| 17. கண்ணிநுண் சிறுத்தாம்பு வ்யாக்யானம் | 2-12-0 | 6 |
| 18. சிறிய திருமடல் வ்யாக்யாநம் | 1-6-0 | 4 |

## ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. திருப்பல்லாண்டு வ்யாக்யானம் | 1-8-0 | |
| 2. திருப்பாவை வ்யாக்யானம் | 2-4-0 | 4 |
| 3. ஸந்த்யா வந்தந பாஷ்யம் | 2-4-0 | 4 |
| 4. புருஷஸூக்த வ்யாக்யானம் | 0-12-0 | |
| 5. நாராயணஸூக்த வ்யாக்யானம் | 0-12-0 | |
| 6. ஸ்ரீஸூக்த வ்யாக்யானம் | 2-0-0 | 6 |
| ஷை மலிவுப் பதிப்பு | 1-8-0 | ் |
| 7. அபயப்ரதராஜ விஜயம் | 0-10-0 | |
| 8. கம்பராமாயணம் (கையடைப்படலம் முடிய) | 2-8-0 | 6 |
| 9. ராமாநுஜதேசிக ஸ்தோத்ரங்கள் | 1-0-0 | 3 |
| 10' பலதாரமணம் | 0-4-0 | |
| 11. பாகவத தசமஸ்கந்த கீர்த்தனை பூர்வ பாகம் | 4-0-0 | |
| ஷை உத்தர பாகம் | 4-0-0 | |
| 12. ஸ்ரீகேசவ மணிமாலை | 0-8-0 | 1 |

கிடைக்குமிடம்:—

S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், அட்வகேட்.
3. புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.

ஸ்ரீநிவாஸம் பிரஸ், புத்தூர், திருச்சி.